# திரிபு

இ. தியாகலிங்கம்




20/2, ஜக்கரியா காலனி, முதல் தெரு,
சூளைமேடு, சென்னை - 94
தமிழ்நாடு இந்தியா

# THIRIBU

(Novel)

By

**R. Thiyagalingam**

First Edition
September 2010

Mithra : 205
ISBN : 978 - 81 - 89748 - 92 - 0

Publication Editor

**Espo**

Pages : 176
Price : Rs. 100 /-

Printed & Published by

**Mithra Arts & Crations Pvt. Ltd.,**

20 / 2, Zackria Colony, 1st Street,
Choolaimedu, Chennai - 600 094.
Ph : +91 44 2372 3182 / 2473 5314
Email : mithrabooks@gmail.com
Web : www.mithra.co.in

# என்னுரை

நான் யார் என்கின்ற தேடலும், அதற்கான பதிலும் என்னிடம் இருந்து வருவதே உண்மையாக இருக்கும். நீ யார் என்பதை நான் சொல்லுகின்றேன். இன்னமும் சமுதாய வல்லுறவில் கசங்கிப் போன ஆயிரமாயிரம் மலர்கள் எம்மிடத்தே சோகமாக வலம் வருகின்றன. பிழையான கூட்டிற்குள் அடைபட்டு விட்டதற்காக தவறான முகவரியும் நிரந்தரமாக்கப்படுவது மிகவும் கோரமானது. நிரந்தரமாக அடைக்கப்பட்ட மாமிசக்கூட்டை விட்டுப் பறக்க முடியாத ரண வேதனைகளில் அவர்கள் வாழ்வு நித்தமும் தொடர்கிறது. எந்தக்கூடு அதற்கு எந்த முகவரி வேண்டும் என்பது அவரவர் விருப்பிற்கேற்பதாய் அமைவதுதான் நீதியாய் இருக்கும். எந்த உறவு எப்படி அமையவேண்டும் என்பதில் சொந்த விருப்பிற்கு முதலிடமிருக்க வேண்டும். அந்தச் சுதந்திரத்தை வருங்காலச் சமுதாயம் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளப் போகிறது. அதை ஆதரிப்பது எங்கள் தார்மீகக் கடமை. அதைத் தடுக்கும் வளைய முடியா பழமைவாதிகள் தெறித்துப் போக வேண்டியது காலத்தின் கட்டாயமாகிறது.

கடந்த காலத்தில் உறைந்து போய்விட்ட பலரின் நினைவுகள் முன்நோக்கி நகர மறுதலிக்கின்றன. பிரசவித்துவிட்ட புதிய சமு தாயம் அவரவர் நாட்டைப் பொறுத்து தங்களை ஐக்கியப்படுத்திக் கொள்கிறது. புதிய ஐக்கியத்திற்கும் கிழண்டிப் போன உறவுக்கு மான போராட்டம் மும்முரமாகிறது. மறுபுறத்தில் மனிதனில் மனிதன் மாறுபாடு கண்டு மிருக குணத்தின் எச்சம் மாறாதவர்களின் கோரப் பார்வையால் அவிந்து போகும் சில உள்ளங்களின் துடிப்புகளுந் தொடர்கிறது. அந்த ஓலம் நெஞ்சை உருக்குவதாக எப்போதும் கேட்டுக் கொண்டு இருக்கிறது.

தமிழர்கள் இடம் மாறினாலும் வறட்டுக் கௌரவங்களை மூடி மறைக்கும் கலாசாரத்தை அடைகாக்கும் பழைய நினைவுகளில் இருந்து விடுபடாத சோகம் எங்கும் தொடருகிறது. இது மாற வேண்டும். எங்கள் சமுதாயம் இயங்கும் சமுதாயமாக மாற்றங்களை ஏற்று நவீனம் அடைய வேண்டும்.

மனித மென்னுணர்வுகளைப் புரிந்து மாற்று எண்ணங் களுக்கும் வாழ்வுமுறைகளுக்கும் இடம் கொடுத்து நாகரிக உலகோடு இயங்கும் சமுதாயமாக எமது சமுதாயம் முன்நோக்கி நகர வேண்டும்.

எனது இந்தப் படைப்பையும் அழகுற அச்சிட்டுத்தரும் மித்ர அச்சகத்திற்கும், அதன் நடத்துனரான திரு பொன் அனுரவுக்கும், என்றுமே சலிக்காது எனது நாவலைச் செப்பனிட ஒத்துழைப்பை நல்கும் ஈழத்து மேதை திரு எஸ்பொ அவர்களுக்கும், வாசகர்கள் ஆகிய உங்களுக்கும் எனது சிரம் தாழ்த்திய வணக்கங்கள்.

இ. தியாகலிங்கம்

**Tyristubb veien 77**
**0687 Oslo**
**+4747235303**
**thiagu@tiscali.co.uk**

# முன்னீடு

'திரிபு' தமிழ் இலக்கியத்திற்குப் புதிய வரவு. துணிச்சலான புனைவு. தமிழர்கள் கட்டிக் காத்துவந்த கட்டித்த பழைமைசால் விழுமியங்களின் தரம் — தகுதிகளிலே ஏடாகூடமான விசாரணை களை முன்வைக்கின்றது. புத்திஜீவிதப் பொழுதுபோக்கிற்காக அல்ல; மனிதநேய அக்கறையினால். பிறந்த மண்ணிலே சாத்திய மற்றனவாகத் தோன்றும் மனித உறவுகளிலே சடுதியாக உடைவு கள் ஏற்படுவதற்கு புலம்பெயர் வாழ்வு மட்டுமே காரணமா? அல்லது உலகளாவியதாக மாறிவரும் உடல் — உளம் சம்பந்தப் பட்ட மயக்கங்களினாலும், மாயையினாலும் அன்றேல் புதிய ஆய்வுகளினால் ஏற்பட்டுள்ள விழிப்புணர்வுகளினாலும் அதிர்வு களினாலும் ஏற்படுகின்றதா? இந்த இருள் சூழ்ந்த இடர்பாடுகளின் மத்தியில், சிக்கல்களின் படுமுடிச்சுகளை அவிழ்க்கும் எத்தனத் திற்குள் ஈடுபடாது, புதுமையான கதைக் கருவையும், தொனிப் பொருளையும் இங்கு நாவலாக்கி தமிழ்ச்சுவைப்புக்கு முன்வைத் துள்ளார் தியாகலிங்கம்.

கதை சொல்லியாக மட்டுமே தம்மை அடையாளப்படுத்து வதுடன் தியாகலிங்கத்தின் தேடல் நின்றுவிடவில்லை என்பதை 1994இல் வெளிவந்த 'அழிவின் அழைப்பிதழ்' என்கிற அவருடைய முதல் நாவல் தொடக்கம் இன்றுவரை அவர் எழுதியுள்ள கதைகள் அனைத்தும் வெளிப்படுத்துகின்றன. புதிய நோய்கள், புதிய மன அழுத்தங்கள், சிக்கலாகிப்போன வாழ்க்கை முறைகள், சிதைந்துபோன குடும்ப உறவுகள் ஆகியன பற்றி நிறைவான நிதானத்துடனும் அறிவு அவதானத்துடனும் தமது இலக்கிய ஊழியத்தைத் தொடர்கின்றார்.

ஆரவாரமில்லாது, குடத்துள் விளக்காகத் தம்மை எளிமைப் படுத்திக்கொண்டு இதுவரையில் நான்கு கதை நூல்களை நமக்குத் தந்துள்ளார். அவையாவன: அழிவின் அழைப்பிதழ், நாளை,

பரதேசி, வரம், திரிபு ஐந்தாவது. 'முடியுமா?' என்கிற பெரிய நாவல் ஒன்றும் அச்சில் உள்ளது. ஒன்று போன்று மற்றொன்று அமையாதது அவர் சாதித்துள்ள வெற்றி எனலாம்.

ஏனைய கதைகளிலிருந்து முற்றிலும் வேறுபாடான கதை சொல்லும் உத்தியை அவர் இங்கு வெற்றியுடன் கையாளு கின்றார். துப்பறியும் கதை அல்லது மர்மக் கதை ஆகியவற்றின் மூலமே ஆரம்ப கால நாவல் இலக்கியம் தமிழ் வாசகர்களின் சுவைப்பினைச் சென்றடைந்தது என்பது வரலாறு. அத்தகைய ஒரு பழைய கதை சொல்லும் முறையை, புலம் பெயர்ந்து வாழும் தமிழ்க் குடும்பத்தைத் தாக்கும் புதிய நெருக்கடியைக் கதையாக்கு வதிலே கையாள்வது சுவையாக உள்ளது. அத்துடன் எழுத்து வெற்றியும் சாதித்துள்ளார்.

இயல்பு போன்று தோற்றமளிக்கும் கதையின் முடிவு என்ன? கதை முடிந்த பின்னரே உண்மையான கதையின் கோலமும் கோரமும் நம்மைத் தாக்குகின்றன. அந்த அளவுக்கு அவர் துப்பறியும் கதைகளிலே கையாளப்பட்ட மறைகவர்ச்சியைத் தொய்வின்றிக் கையாண்டுள்ளார்.

கதையின் பாடுபொருள் பற்றி நான் பேசவில்லை. அந்த மர்மந்தான் கதையின் அனைத்தும். அதனை அறிதலும் சுவைத்த லும் வாசகன் வசம்.

இ. தியாகலிங்கம் அவர்களின் இலக்கிய ஊழியங் கண்டு வியக்கின்றேன். புத்தாயிரத்திற்கு தமிழ் ஈழரின் இலக்கியப் படைப்புகளை முன்னெடுத்துச் செல்லும் தமிழ் ஊழியக்காரருள் அவர் முக்கியமானவராக வளர்கின்றார்.

**எஸ் பொ**

2A Hakea Place
Epping 2121
☎ 9868 5090

# 1

யாரோ உள்ளே வருவது போல இருந்தது. வலோக்காரமாகத் தனது பார்வையை தொலைக்காட்சியில் இருந்து பிடுங்கி அக்காவைப் பார்த்தாள். அவளுக்கு மயக்கம் வருவதுபோல இருந்தது. சுடுதண்ணி காலிலே கொட்டப்பட்டது போலத் துள்ளி எழுந்தாள்.

அது புதிதாக வாங்கப்பட்ட, ஒரு படுக்கை அறை, ஒரு சமையல் அறை, ஒரு ஹோல் கொண்ட சிறிய பிளாற். கதவு திறந்தவுடன் ஒருபக்கத்தில் சமையல் அறை வரவேற்றது. நவீன வசதிகளுடன் வடிவமைக்கப்பட்டிருந்தது. சமையலறையில் ஃபிறஜ், பளிங்கடுப்பு, கழுவும் இயந்திரம், Microwave oven போன்றவை நிரந்தரமாகப் பொருத்தப்பட்டிருந்தன. சமையல் மணத்தை இழுத்து வெளியே தள்ளு வதற்கான கருவி பொருத்தப்பட்டிருக்க அதன்கீழ் பாதுகாப்புத் தேடிக்கொண்டு இருந்தது பளிங் கடுப்பு. சமையல் அறை வெங்கின் மேல்பகுதியில் வெள்ளை மாபிளில் நீலப் பூக்கள் சிரித்தன. வெள்ளை நிறத்தின் திமிரை அடக்குவதாகச் சுவரெங்கும் நீலம் ஆக்கிரமித்து வியாபித்து வெற்றி கண்டது.

சமையலறை வெங் மிகவும் பளிச்சென்று மின்னிற்று. நீனா பொருள்களைப் பொருந்தும் இடங்களில் கலையழகோடு வைத்திருந்தாள். சமையல் அறையில் இருந்த மேசையின் நடுவில் அழகிய கண்ணாடிப் பூச்சாடி ஒன்று இருந்தது. அதில் சில பூக்கள் தலை சாய்த்து வாயிலைப் பார்த்துக் கொண்டு இருந்தன. அடுப்பில் இரவுச்சாப்பாட்டிற்கு முட்டை பொரித்த சோஸ்பாண் அப்படியே இருந்தது. அவள் அதை இன்னும் கழுவவில்லை.

அடுத்ததாக ஹோல் இருந்தது. அதில் ஐரோப்பிய நாடு ஒன்றில் இருக்க வேண்டிய வசதிகள் குறைவின்றி இருந்தன. அதைப் புறந்தள்ளி மேற்கொண்டு சென்றால் படுக்கையறை வருகிறது. அங்கே ஒரு பெரிய கட்டில் ரோஜா நிறப் போர்வையைப் போர்த்தி இருந்தது. அதன் யன்னலிலும் ரோஜா நிறப் பூக்கள் போடப்பட்ட கர்ட்டின் போடப்பட்டிருந்தது. பார்பி அழகோடு இருந்த அந்த அறையின் ஒவ்வொரு மூலையும் பெண்ணின் இரகசியம் மெதுவாகப் பேசிற்று.

நீனா, அக்கா சுமியை உயரப் போட்டியில் வென்றிருந்தாள். அவள் ஐந்தடி ஆறங்குல உயரத்தில் தனது வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி இட்டுக் கொண்டாள். கால்களைத் தூக்கி சோபா மேசையில் வைத்தபடி சோபாவில் அமர்ந்து தொலைக்காட்சியில் கவனத்தைச் செலுத்தினாள். அவள் மாநிறத்தில் இருந்தாலும் நோர்வேயைப் பொறுத்தமட்டில் இவளும் ஒரு brown Asian - ஆகவே கணிக்கப்பட்டாள். நீனாவின் கண்களில் காந்தம் பதித்த ஈர்ப்பு பார்ப்பவரைப் பிடித்திழுக்கும். அழகிய வதனம் அன்பையும் காதலையும் அருவியாகப் பெருக்கும். உடலில் பெண்மை ஒருவித வெறியை உண்டுபண்ணும். என்றாலும் அவள் தனிமையில் இன்னும் இருந்தாள். மிதிலையின் இராமன் வராததால் அவன் வரவிற்காய் இன்னும் காத்திருந்தாள். ஒஸ்லோவின் வீதியில் இன்னும் அந்த இராமனைக் காணாது வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள்.

சுமி சிறிது நேரத்தில் நீனாவின் வீட்டிற்கு வருவதாக இரவு ஒன்பது மணிபோல் போன் செய்து இருந்தாள். அவள் யெம்ம

சீக்கப்பிளையராக (வீடுகளுக்குச் சென்று சிகிச்சை செய்யும் தாதியர்) வேலை செய்து வருகிறாள். நீனாவின் வீட்டிற்கு மிகவும் அருகில் உள்ள சில குடியிருப்புகளில் அவளுக்கு சில நோயாளிகள் இருந்தனர். அவர்களைப் பார்த்துவிட்டு நீனாவிடம் வந்துவிட்டுப் போவதாய் போன் செய்து தகவல் தந்திருந்தாள். அவளிடம் வெளிக்கதவுத் திறப்பு ஒன்று இருக்கிறது. நீனா அக்காவுக்காகக் காத்திருக்கும் நேரத்தில் தொலைக்காட்சியைப் பார்ப்போமென சோபாவில் போய் அமர்ந்தவள் படம் ஒன்றில் மூழ்கிப் போய் விட்டாள்.

திடீரென ஒன்பது இருபது போல் அழைப்புமணி சிணுங்கியது. 'திறப்பை வைத்துக் கொண்டு ஏன் கீழே நின்று அழைப்பு மணியை அழுத்துகிறாள்? சில வேளை திறப்பைக் கொண்டு வரவில்லையோ?' என எண்ணியவள், 'அக்காள்தானே வருகிறாள்' என எண்ணிய வண்ணம் எழுந்து சென்று கதவைத் திறந்த கையோடு ஹோலுக்குத் திரும்பியோடினாள். படம் உச்சத்திற்குப் போய்க் கொண்டு இருந்தது. விறுவிறுப்பை இழக்க அவள் விரும்பவில்லை. சிறிது நேரம் சென்றிருக்கும். படத்தின் விறுவிறுப்பான சம்பவங்கள் தொடர்ந்தும் நடந்து கொண்டு இருந்தன.

எதிர்பாராமல் உள்ளே நுழைந்து விட்டவனைப் பார்த்து அதிர்ந்து போய் இருந்தவள் பின்பு தன்னைச் சமாளித்துக் கொண்டு,

'நீ எப்பிடி உள்ள வந்தனீ?' என்றாள்.

'நீதானே கதவைத் திறந்து விட்டனீ?'

'நான் சுமியக்காவுக்காக வெயிற் பண்ணிக்கொண்டு இருந்தன். அவள்தான் வாறாள் எண்டு நினச்சுக்கொண்டு, யார் எண்டு பார்க்காமல் கதவைத் திறந்து போட்டன். தயவு செய்து இப்ப வெளியால போறியே? தனிய இருக்கிற பொம்பிளையோட தேவை யில்லாமல் பிரச்சனைப்படாத. நான் போலிஸுக்கு அடிச்சன்

எண்டாத் தேவையில்லாமல் glattcelle லில (யன்னல்கள் அற்ற, வழுவழுப்பான ஒரு சிறிய அறை; கழிப்பிட வசதியும், நிலத்தில் படுப்பதற்கு ஒரு படுக்கையும் மாத்திரமே அங்கு இருக்கும்.) போய்க்கிடப்பா.'

'தனிய இருக்கிற பொம்பிளை ம்... அச்சா யோக்கடிக்கிறா நீ.'

அவன் பெரிதாகச் சிரித்தான். நீனா பயத்தில் நடுங்கத் தொடங்கி இருந்தாள்.

'இண்டைக்கு ஒருகை பார்க்காமல் போக நான் என்ன பொன்னையன் எண்டு நினைச்சியே?'

'தயவு செய்து வெளியால போயிடு சுரேன். இல்லாட்டி இது பெரிய வில்லங்கத்தில வந்து முடியும். எல்லோருக்கும் கிலிசேடாக இருக்கும்.'

'சும்மா புல்டா காட்டாத. நைஸ்சா ஒத்துக்க... எனக்கும் ஒரு புது அநுபவமா இருக்கும். உனக்கும் ஒரு புது அநுபவமா இருக்கும். That's all.' கூறிவிட்டு சுரேன் கண்ணடித்தான். அவன் சற்றுத் தள்ளாடினான். குடித்திருப்பான் என்பது நீனாவுக்குப் புரிந்தது. மலை மாதிரி இருக்கும் இவனிடம் இருந்து எப்படித் தப்பிப்பது என்பது புரியவில்லை. இந்தப் பொம்பிளப் பொறுக்கிக்கு எப்படித் தனது முகவரி தெரிந்தது என்பதும் அவளுக்கு புதிராகவே இருந்தது. முதலில் ஹோலில் இருந்து வெளியே செல்வது புத்தியெனத் தோன்றியது. நீனா மெதுவாகச் சுவரோடு உரஞ்சியவண்ணம் நின்று கொண்டாள்.

'வா. என்ன மினக்கெடுத்தாத குஞ்சு. கிக் இறங்குமுதல் வா. இதில என்ன இருக்குது. உனக்கும் அழியப் போற பிண்டம். எனக்கும் அழியப் போற பிண்டம். அநுபவிக்கிறது மாத்திரம் மிச்சம். நாளை இறந்தால் தூக்கி எறியும் எச்சங்கள் இவ்வுடல்கள் இரண்டும். விளங்குதா?'

அவன் வெறியில் தத்துவம் பேசினான்.

'சுரேன் உன்ர தத்துவம் எல்லாம் நல்லாய் இருக்குது. உனக்கு மற்றவேன்ர மனசுபற்றித் தெரியும். நீ சின்னனில் இருந்தே நான் பட்ட வேதனை தெரிஞ்சவன். தயவு செய்து இப்ப வெளிய போ. இன்னொரு நாளைக்கு வெறி இல்லாத நேரத்தில இதைப்பற்றி கதைப்பம்.'

'அச்சா. எனக்கே நீல் விடுகிறாய். இனிமேலைக்கு நான் வந்தா, ஓட்டையால பார்த்துப்போட்டுக் கதவே திறக்கமாட்டா. இந்தப் புல்டாக்கூடப் புரியாத மடையன் எண்டு என்னை நினைக்கிறா. விட்டா எனக்கு போச்சிப் போத்திலை வாய்க்க வைச்சு விடுவா.'

'அப்பிடி இல்ல. நிதானம் இருந்தால் நிறைய விஷயம் விளங்கும். நிறைய விஷயத்தை மனம் திறந்து கதைக்கலாம்.'

'உன்ர மனத்தை நீ திறந்து காட்டி நான் அதைப் பார்த்திட்டுச் சோகமாகப் போக இப்ப வரேல்ல. என்னத்த பார்க்க வந்திருக்கிறன் எண்டது உனக்குத் தெரியும். சும்மா பசப்பாமல் கெதியா கிட்டவா. காட்டுறத காட்டு. செய்யிறத செய்துபோட்டு நான் துலைஞ்சு போயிடுவன்.'

'சுரேன் நீ மரியாதை இல்லாமல் கதைக்கிறா.'

'நான் உன்னோட எப்பிடியும் கதைப்பன். ஒருத்தரும் ஒண்டும் பண்ணேலாது. கொப்பன் வேற விஷர்ல திரியிறான் எண்டு கேள்வி. உனக்கு யாரும் துணைக்கு இப்ப வரமாட்டினம்.'

'போலிஸுக்குப் போறவரைக்கும் நீ என்னை அப்ப விட மாட்டா?'

'நீ போலிஸுக்குப் போ. இல்லாட்டி யாரும் றவுடியளைக் கூட்டியா. ஆனா இப்ப என்னோட சந்தோசமா இருந்திட்டுப் போ. அதுதான் எனக்கு முக்கியம்.'

'சுரேன் நீ எல்லை மீறிப் போறா!'

'அங்...எங்க கிடக்குது எல்லை காட்டு பாப்பம். உந்தப் புல்டா வேலையெல்லாம் என்னிட்ட வேண்டாம். தயவுசெய்து ஒத்துக் கொண்டியெண்டா இது எனக்கும் உனக்குமான பிரச்சினையா இருக்கும். போலிஸ் கீலிஸ் எண்டு புலுடா விட்டாப் பிறகு உனக்கு வாழ்க்கை புல்லா நரகம்தாண்டி.'

சுரேன் சிறிது முன்னேற முயன்றான். அவன் ஆறடி உயரமும் நூறு கிலோ எடைக்கும் மேலானவன். இங்கு வேறு இராணுவத்திற்குச் சென்று வந்திருந்தான். சிறிய பிள்ளையாக இருக்கும்போது நீனாவுக்கு நண்பனாய் இருந்தவன். இப்போது வில்லனாக வந்து நின்றான். அவன் ஒழுங்காக ஒரு அறை விட்டால் நீனா மயங்கிப் போய்விடுவாள். அவன் பலம் நீனாவுக்குத் தெரியும். பலத்தால் அவனை எதுவும் செய்துவிட முடியாது. ஏதாவது தந்திரத்தால் தப்பித்தால்தான் உண்டு என்பது அவளுக்குப் புரிந்தது.

'இனி ஒரு அடி எடுத்துவைச்சியெண்டா இங்க ஒரு கொலை விழும் பார்த்துக்கொள்.'

'ஓ எத்தின கொலை செய்திருக்கிறாய்? எங்க காட்டு எப்பிடிக் கொலை செய்வாய் எண்டு...'

அவன் பார்வையின் அசிங்கமான மேய்ச்சலை உணர்ந்த வளாக நீனா நெளிந்தாள். சுரேன் அருந்திய மது அவனை இப்போது மிருகமாக்கிவிட்டது என்பதை அவள் உணரத் தொடங்கினாள்.

அவன் மேலுமொரு அடி நீனாவை நெருங்கினான். அவள் எதிர்பாராத நேரம் பாய்ந்து அவளைப் பிடித்துக் கொண்டான். அவன் பிடி இரும்பாய் இருந்தது. நீனா அசையமுடியாது திமிறினாள். திமிறித் திமிறி அவள் அலுத்துப் போய் விட்டாள். இன்று எப்படியோ இவன் தன்னை அசிங்கம் செய்யப் போகிறான் என்பது அவளுக்குப் புரிந்தது.

அவன் பிடி தளராத வண்ணம் இருக்கக் குனிந்து நீனாவின் கன்னத்தில் முத்தமிட்டான். நீனாவுக்கு உடல் எல்லாம் எரிந்தது. எதுவும் செய்ய முடியவில்லை.

'என்னை விடு சுரேன். தயவு செய்து என்னை விடு சுரேன். நீ ஒரு அண்ணன் மாதிரி. சும்மா என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது.'

'நீ நல்லாப் பகிடி விடுகிறா. இப்பிடி எத்தின டயலாக் றெடியாக பொக்கேற்றுக்க வெச்சிருக்கிறா? ஆங்... நானும் நிறைய சினிமாப் படம் பார்த்து அலுத்துப் போச்சுது. உன்ர டயலாக்கும் படுமோசம். சொன்னதையே திருப்பிச் சொல்லுறா. கொஞ்சம் எண்டாலும் வித்தியாசமாகச் சொல்லத் தெரியாதே.'

'நீ மற்றவையின்ர உணர்ச்சியோட விளையாடாத சுரேன்.'

'ம்... நீ என்ர உணர்ச்சியவே சித்திரவதை செய்யிறா. அது உனக்கு விளங்கேல்லயே?'

அவள் கெஞ்சினாள். அவன் அவளை மேலும் இறுக்கிய வண்ணம் கொஞ்சினான். நீனாவுக்கு கடைசி முயற்சியாய் அந்த வித்தையைப் பாவித்துப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. அவன் திடீரென நீனாவை சோபாவில் தள்ளிவிட்டான். நீனா மல்லாந்து படுத்தாள். சுரேன் முன்னே வந்து நின்றான். நீனா தனது பலத்தையெல்லாம் காலில் குவித்து அவனது விதையை நோக்கி காலைச் செலுத்தினாள்.

'எடுபட்ட நாயே' என்றவண்ணம் அவன் வேதனையோடு இருக்க, தலையில் சோஸ்பாண் தடார் என்று விழுந்தது. சுமி பத்திரகாளியாகப் பின்னால் நின்றிருந்தாள். அந்த அடி தலையில் விழுந்தும் சுரேன் மயக்கமடையாது தலையைப் பிடித்துக் கொண்டு இருந்தான். நீனாவுக்கு அது பெரும் வியப்பைத் தந்தது. அவள் சோபாவில் இருந்து பாய்ந்து சுமியைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். சுமிக்கு நீனா பயத்தில் நடுங்குவதை உணர முடிந்தது. அவளுக்கு நீனாவை எண்ணப் பரிதாபமாய் இருந்தது. சுரேனை அடித்துக் கொலை செய்ய வேண்டும் போல வெறி வந்தது.

சுமி நீனாவின் கண்களைத் துடைத்து அவளை ஆசுவாசப் படுத்தினாள்.

'நீ எப்பிடி இந்தக் காண்டாமிருகத்தை உள்ளுக்கு விட்டாய்?'

'நான் படம் பார்த்துக் கொண்டு இருந்தன். நீதான் வாறாய் எண்டு கதவைத் திறந்துபோட்டு படத்தின் ருசியில திரும்பி வந்து சோபாவில இருந்திட்டன். இந்த நாய் திடீரெண்டு ஹோலில வந்து நிக்கேக்கதான் என்ர பிழை தெரிஞ்சது. அதுக்குப் பிறகு என்னால ஒண்டும் செய்ய முடியல்ல. அவனுக்கு நல்ல வெறி. சொல்லுறதையும் கேட்கிறான் இல்லை.'

'நீ ஒரு நாளும் ஓட்டையால பார்க்காமல் சங்கிலிய எக் காரணம் கொண்டும் கழட்டக்கூடாது எண்டெல்லே நான் சொல்லி இருக்கிறன். நீ சங்கிலியே போடேல்லப் போல இருக்குது.'

'உண்மையக்கா. நான் இண்டைக்கு மறந்து போயிட்டன். போட்டு இருந்தாலும் நீ வாறாய் எண்டிட்டு எடுத்திருப்பன்.'

'சரி, இனிமேலைக்கு கவனமாய் இரு.'

சுரேன் தட்டுத் தடுமாறி எழுந்தான். சுமி சோஸ்பானை அடிப்பதற்குத் தயாராகப் பிடித்தவண்ணம் பின்னே நகர்ந்து வழிவிட்டாள். அவனுக்கு இப்போது வெறி குறைந்து இருக்க வேண்டும். என்றாலும் வன்மம் கண்களில் தணலாகத் தெறித்தது. மீண்டும் சுமியை நெருங்குவானோ என நீனா பயந்துகொண்டு இருக்க அவன் ம்... என உறுமிவிட்டு வெளியே வேகமாகச் சென்றான். பின் வாயிலில் நிண்டு,

'டீ எடுப்பட்டவளையே உங்களை நான் கொலை செய்வனடி. ம்... கொலை செய்வன். ஒவ்வொருத்தராய் கொலை செய்வன்' என்றான்.

'போடா நாயே..:ஏலுமெண்டா இனித் தொட்டுப்பார். உன்னை எங்க அனுப்பிவைக்கிறம் எண்டு அப்ப தெரியும்' எனச் சுமி திருப்பிக் கத்தினாள்.

பக்கத்து வீட்டுக்காரர் சிலர் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தனர். அதன் பின்பு அங்கு நிற்க விரும்பாதவனாய் சுரேன் படிகளால் இறங்கி ஓடினான். சுமி கதவைப் பூட்டிவிட்டு நீனாவிடம் வந்தாள்.

'அக்கா அவன் திரும்ப வந்தா?'

'அவன் இனி வரமாட்டான். அப்பிடி வந்தா எந்தக் காரணம் கொண்டும் நீ கதவைத் திறக்காதே. போலிஸுக்கு போன் பண்ணு. கதவில எப்பவும் சங்கிலி கொழுவி இருக்கோ எண்டு செக் பண்ணு. ஆர் வந்திருக்கினம் எண்டு ஓட்டையால முதல்ல பார். வா போய் சோபாவில இருந்து மிச்சத்தைக் கதைப்பம்.'

'ம்...சரி. நான் இதுகளை வழமையாகச் செய்வன். இண்டைக்கு நீ வருவாய் எண்டு நல்லா தெரிஞ்சதாலதான் அப்பிடி திறந்து போட்டன்.'

'எனக்கு அது விளங்குது. நாளைக்கு போலிஸுக்கு போய் ஒரு Anmeld (குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தல்) குடுப்பம்' என்றாள்.

'சரியக்கா.'

'நீ பெப்பர் ஸ்பிறே வைச்சிருக்கிறியா? அதைவிடச் சின்ன அலாமும் வேண்டலாம். அதையும் வேண்டி வைச்சிருந்தா உனக்குப் பாதுகாப்பா இருக்கும்.'

'நான் ஒருநாளும் அதைப் பற்றி யோசிக்கேல்ல...'

'அப்ப என்னிட்ட இருக்கிறத இப்ப தந்திட்டுப் போறன். நாளைக்கு புதுசா வேண்டலாம்.'

'இல்லையக்கா நான் சமாளிப்பன். நீ நெடுக வெளியால திரிவா. உனக்கு அது கட்டாயம் வேணும்.'

'பறுவாய் இல்ல. நீ வைச்சிரு. நான் சமாளிப்பன்.'

நீனா மறுத்தும் சுமி ஸ்பிறேயை எடுத்து மேசைமீது வைத்தாள்.

நீனா சென்று தேநீர் தயாரித்துவர அதை அருந்திய சுமி பின்பு நேரத்தைப் பார்த்துவிட்டு, அவசர அவசரமாகப் புறப்பட்டாள்.

'நீ இப்ப கதவைப் பூட்டு. நான் நாளைக்கு எழும்பினவுடன் உனக்குப் போன் பண்ணுறன். ஓ உனக்கு நாளைக்கு வேலை யாக்கும்?'

'ம்... வேலைதான். நான் ஏக்கமெல்லிங் (மருத்துவரிடம் செல்லாமல் எடுக்கப்படும் விடுப்பு) எடுக்கிறன்.'

'சரி, காத.'

'காத.'

அவள் புறப்பட்டுச் சென்றுவிட கதவை மிகவும் கவனமாகப் பூட்டிவிட்டு, செல்போனைத் தலைமாட்டிற்குள் வைத்துக்கொண்டு நீனா படுத்துக் கொண்டாள். அவளுக்கு சுரேன் மீது கோபம் கோப மாக வந்தது. சிறிய வயதில், அதிகம் சிந்திக்காத பருவத்தில், தவறு செய்தான் என்று விட்டாலும், இப்போது மலைபோல வளர்ந்து இராணுவத்திற்குப் போய்விட்டு வந்தபின்பும், அசிங்கமாக நடப்பது அவன் மேல் அருவெறுப்பை உண்டுபண்ணியது.

அடுத்த நாள் பத்துமணி போல் போன் செய்த சுமி Gran-land போலிஸ்•க்கு பன்னிரெண்டு மணிபோல நீனாவை வருமாறு கூறியிருந்தாள். நீனா அதற்காகப் புறப்பட்டுக் கொண்டு இருந்தாள். அவளுக்கு வெளிக்கிடுவது என்றால் ஒப்பனைக்கு சிறிது அதிக நேரம் தேவைப்படுகிறது.

சுமி அம்மாவோடு ஒப்சால் வீட்டில் வசித்து வந்தாள். அவள் சின்சன் யெம்மத் தியனெஸ்தவில் இப்போது வேலை செய்து வருகிறாள். அநேகமாக இரவில் வேலைக்குப் போவாள். இரவு வேலை என்றால் வேலை சுலபமாக இருப்பதோடு அதிக பணமும்

சம்பாதிக்கலாம் என்பது அவளுடைய கருத்து. நீனாவுக்கு லீசாக்கரில் வேலை கிடைத்து இருந்தது. அவளொரு தொலைபேசி நிறுவனத்தில் கணனிப் பொறியியலாளராய் வேலை செய்து கொண்டு இருந்தாள். போக்குவரத்து வசதிக்காக Carl Barners plass இல் leilighet (பிளாட்) வாங்கி இருந்தாள். இந்த இடம் போக்குவரத்திற்கு மிகவும் வசதியானது. நீனா இன்னும் சொந்தக் கார் வாங்கிக்கொள்ள வில்லை. அவளுக்கு அதில் விருப்பமும் இருக்கவில்லை.

குளிர் தனது பிடியின் இறுக்கத்தைத் தளர்த்த மறுத்தாலும், அதன் தாக்கத்தை இன்று வெயில் போராடித் துரத்திக்கொண்டு இருந்தது. அநேகமான பனி கரைந்து போய்விட மிஞ்சி இருந்த பனி மனிதனின் கைதியான இயந்திரங்கள் கக்கிவிட்ட கரியமிலத்தில் கறுப்பாய் நிறம் மாறிப் போய் இருந்தது. பனி கரைந்த இடங்களில் பச்சையான கம்பளம் மனிதனின் வக்கிரத்தையும் மீறி மெதுவாகத் துளிர்த்துக் கொண்டது. பெரிய ஒரு வளவின் ஒருபகுதியில் Granland politistasjon பல மாடிகள் கொண்ட நீண்ட கட்டிடமாய்க் கம்பீரமாக நிமிர்ந்து நின்றது. அதன் முன்பாக சுமி நீனாவுக்காகக் காத்திருந்தாள். சுமியைக் கண்ட நீனா 'பிந்திப் போனேனா அக்கா?' என்றாள். அவள் நடையில் அவசரம் இருந்தது.

'இல்ல. வா உள்ள போவம்' எனக் கூறிய சுமி நடக்கத் தொடங்கினாள். Granland politistasjon மிகவும் பரபரப்பில் ஆழ்ந்து போய் இருந்தது. அவரவர் தங்கள் பணியின் கவலையில் மூழ்கிப் போய் இருந்தனர். இவர்கள் இருவரும் முறைப்பாடு செய்யும் இடத்திற்குச் சென்றார்கள்.

தடுப்பிற்குப் பின்னால் இருந்த இரு போலிஸார் வருபவர் களை முதலில் விசாரித்து, என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறிக் கொண்டு இருந்தார்கள். முதலில் தடுப்பிற்குப் பின்னால் இருந்த பொலித்தி (Politi - போலிஸ்) உடன் சுமியும் நீனாவும் கதைத்தார்கள்.

அவர்கள் ஒரு படிவத்தை இவர்களிடம் தந்து அதை நிரப்பி வருமாறு கூறினார்கள். அதை நீனா நிரப்பிக் கொடுத்தாள். சிறிது நேரத்திற்குப் பின்பு நீனா என்று அழைக்க இருவரும் எழுந்து சென்றனர். அங்கே இருந்த பெண் பொலித்தி தன்னை அனிதா லார்சன் என அறிமுகப்படுத்திக் கொண்டார். நீனா பதிலுக்கு கைகொடுத்து நீனா கரன் என்றாள். அதைத் தொடர்ந்து சுமி தானும் கை கொடுத்து சுமி கரன் என அறிமுகப் படுத்திக் கொண்டாள்.

'ஓ நீங்கள் சகோதரங்கள்?' என உறுதிப்படுத்தும் விதமான கேள்வி ஒன்றை அனிதா லார்சன் கேட்டார்.

'ஓ நாங்கள் சகோதரங்கள்தான்,' என நீனா அதற்கு பதில் கூறினாள். அனிதா லார்சனின் பார்வை ஒருமுறை நீனாவை மேய்ந்தது. பின்பு அவள் அதை உணர்ந்தவளாக கண்களைப் பார்த்தவண்ணம் கதைக்கத் தொடங்கினாள்.

'நீங்கள் என்ன நடந்தது என்பதை எனக்கு விபரமாகக் கூறவேண்டும். அதற்கு முன்பு உங்களுக்கு அவரை எப்பிடித் தெரியும் என்பது பற்றி சற்று விளக்கமாகச் சொல்ல வேண்டும். நான் இந்த சம்பாஷணையைப் பதிவு செய்யப் போகிறேன். அதில் உங்களுக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லைத்தானே?'

'இல்லை. நீங்கள் தாராளமாகப் பதிவு செய்யலாம்.'

மேசையில் இருந்த ஒலிப்பதிவுக் கருவியை இயக்கி பின்பு, 'சரி இப்ப சொல்லுங்கள்' என்றார் அனிதா லார்சன்.

'அவனுடைய பெயர் சுரேன். குடும்பப் பெயர் சண்முகராசா. பிறந்த திகதி மார்ச் 25, 1987. அது எனக்கு நன்கு ஞாபகம் இருக்கிறது. அவன் என்னோடதான் படிச்சவன். சின்னனில அவனுக்குப் பிறந்த நாள் பரிசு குடுத்திருக்கிறன். நாங்கள் barne-og ungdomsskole (1ம் வகுப்பில் இருந்து 10 ஆம் வகுப்பு வரை) ஒரே பாடசாலையில் படிச்சு இருக்கிறோம். அப்பிடிப் படிக்கேக்க சில நாள்கள் அவன் என்ர

உடம்பத் தொட்டுத் தொட்டு கதைக்கிறது எனக்குப் பிடிக்காததால நான் அவரோட பழகுறதைக் குறைச்சுக் கொண்டுவிட்டன். அவன் அதை விளையாட்டாக எடுத்துக் கொண்டு இடைக்கிடை தொந்தரவு பண்ணுறவன். அவன் ஒருதரம் சொன்னா அதைக் கேட்கிற ரைப் கிடையாது. ஒருமுறை பள்ளிக்கூடத்தில வகுப்பு ஆசிரியரிட்ட முறைப்பாடு செய்து, அவர்கள் சுரேனை வார்ணிங் செய்தனர். அதன் பின்பு அவன் தொந்தரவு செய்யிறது குறைவு, பிறகு அவன் மாறி வேற இடத்துக்குப் படிக்கப் போயிட்டான். இப்ப திடீரெண்டு வந்து தொந்தரவு செய்யத் தொடங்கி இருக்கிறான். அது எனக்குப் பயமாகவும் இம்சையாகவும் இருக்கிறது.'

அனிதா லார்சன் கவனமாகக் கேட்டவண்ணம் இருந்தார். பின்பு நீனா நிறுத்தியதும் 'சரி அந்தச் சம்பவம் எப்பிடி நடந்தது என்பதை கொஞ்சம் விபரமாக நேரத்துடன் தொடர்புபடுத்திச் சொல்ல முடியுமா?' என்றார்.

நீனா விபரமாகக் கூறி முடித்தாள். எல்லாவற்றையும் அவதானமாகக் கேட்டுக்கொண்டு இருந்தவர், சுமியைப் பார்த்து, 'அப்ப நீங்கள் சாட்சியளிக்க சம்மதம் தானே என்றார்.

'நிச்சயமாக. அவள் என் தங்கை. நானும் எப்படியோ இந்தச் சம்பவத்தில் சம்பந்தப்பட்டுள்ளேன். சாட்சி சொல்வதில் எனக்கு எந்தப் பிரச்சனையும் கிடையாது.'

'நீங்கள் சாட்சி சொல்வது சிலவேளை சாட்சியைக் கேள்வியாக்கிவிடும். அதன் நம்பகத்தன்மை பற்றி கேள்வி வரும். வேற யாராவது சாட்சி சொல்வார்களா?' என்றார் அனிதா லார்சன்.

அதைக் கேட்ட நீனா, 'சிலர் கதவுக்கு வெளியால வந்து எட்டிப் பார்த்தார்கள். ஆனா அவர்கள் சாட்சி சொல்வார்களோ தெரிய வில்லை. நாங்கள் வழக்குப் போடுவது அவனைத் தண்டிக்க வேண்டும் என்கின்ற நோக்கத்தோடல்ல. எனக்குப் பாதுகாப்பு வேண்டும். அவன் என்னை வலோக்காரம் பண்ண முயன்றான்.

அதற்குமேல் அவன் ஒன்றும் செய்யவில்லை. இனி அப்படி நடக்கக்கூடாது என்பதே எனது வேண்டுகோள்.'

சுமி நீனாவை சற்று விசித்திரமாய்ப் பார்த்தாள்.

புரிந்துகொண்ட நீனா அக்காவைப் பார்த்து, 'ஏதற்குத் தேவையில்லாமல் பிரச்சனையை வளர்க்கோணும்' என்றாள்.

'அப்ப நீங்கள் என்ன செய்யோணும் எண்டு விரும்பிறியள்? உங்கட எண்ணத்தைச் சொல்லுங்க,' என்று அனிதா லார்சன் கேட்டார்.

நீனா அதற்கு, 'இதை வழக்கு ஆக்கோணும் எண்டது என்னுடைய விருப்பம் இல்லை. அவனைக் கூப்பிட்டு விசாரித்து வாண் பண்ண வேணும். இரண்டாவதாக எனக்கு volds-alarm (மைபல் போன்ற கருவி. இது போலிஸோடு நேரடித் தொடர்பை ஏற்படுத்தக் கூடியது. அதை வைத்திருப்பவர் தற்போது எங்கே உள்ளார் எனப்தை அது போலிஸுக்கு அறியத் தரும், GPS system) தரோணும்' என்றாள்.

அனிதா லார்சன் அதைப் புரிந்து கொண்டார். பின்பும் சிறிது நேரம் தொடர்ந்தும் கேள்விகளும் பதிலுமாக நேரம் போய்க் கொண்டு இருந்தது.

ஒரு கட்டத்தில் போதும் என்பது போல அனிதா லார்சனுக்குத் தோன்றவே 'volds-alarm தாறது பற்றியும் இதை எப்பிடி மேற்கொண்டு முன்னகர்த்திச் செல்லலாம் என்பது பற்றியும் நான் kollegae வோட (சக போலிஸ் அதிகாரி) கதைத்த பின்பு முடிவெடுப்போம். சில வேளை உங்களை மீண்டும் விசாரணைக்கு அழைப்போம். அப்படி அழைத்தால் நீங்கள் மீண்டும் இங்கே வரவேண்டி இருக்கும்' என்றார்.

'தாராளமாய் வருகிறோம்' என்றாள் நீனா.

பின்பு விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தார்கள்.

சுமி மூன்றாம் எண் T - bane (நிலத்திற்கு அடியில் ஓடும் Train) வர அதில் ஒப்சால் சென்றுவிட்டாள். நீனா ஐந்தாம் எண் தேவாணுக்காய்க் காத்திருந்தாள். இரண்டு தமிழ்ப் பெடியள் வந்தார்கள். நீனா சற்று தள்ளிப் போய் நின்று விடலாம் என எண்ணிக் கொண்டாள். பின்பும் 'நான் ஏன் ஒதுங்கிப் போக வேண்டும்' என எண்ணியவள் பேசாது அதே இடத்தில் அசையாது நின்றாள். வந்தவர்கள் நீனாவைக் கடந்து போகும்போது விசில் அடித்துக் கொண்டு போனார்கள். அவர்கள் பார்வை கண்ணைப் பார்க்காது உடம்பை மேய்ந்து சென்றது. 'ச்.. மூதேவியள்... இஞ்ச பிறந்து வளர்ந்தாலும் அப்பா அம்மாவின்ர புத்தியோடையே அலையுதுகள்' என எண்ணிய வண்ணம் தேவாணுக்காக அவள் காத்திருந்தாள்.

ஐந்தாம் எண் தேவாணுக்குப் பதிலாக முதலாம் எண் வந்து நின்றது. நீனா அதில் ஏறி அமர்ந்து கொண்டாள். தேவாண் தொய்யனில் நின்றது. நீனாவின் பெட்டிக்குள் திடீரென சுரேன் ஏறிக் கொண்டான். அவன் நீனா இருப்பதைக் கண்டுகொண்டு அவள் பக்கத்தில் வந்து இருந்தான். நீனாவுக்கு வேடனுக்குப் பக்கத்தில் இருக்கும் மான்குட்டியின் அவஸ்தை. எய்யப்படும் அம்புக்காய்க் காத்திருப்பதான அவஸ்தை.

நீனாவை அவன் பார்த்த பார்வையில், வேட்டையாடிய இரையைத் தப்பவிட்ட மிருகத்தின் வன்மம் இருப்பதாக நீனா எண்ணிக் கொண்டாள். 'இங்கு ஏதாவது செய்தால், கத்திக் கூச்ச லிட்டு, இவன் மானத்தை இங்கு வைத்தே வாங்கிவிட வேண்டும்' என நீனா எண்ணிக் கொண்டாள்.

'எங்க போட்டு வாறா?' அவன் நீனாவிடம் திடீரெனக் கேட்டான்.

'போலிஸுக்குத்தான்.' நீனாவும் பதிலுக்கு நளினமாகச் சிரித்தாள்.

'நாயே என்ர கையாலதான் உனக்குச் சாவு. அதுவும் கிட்டடியில சாகப் போறா' என மனத்திற்குள் கறுவியவன் அதைச் சொல்லாது, 'அவசரப்பட்டிட்டா நீ,' என்றான்.

'போலிஸ்* கிட்டடியில கேட்கும். அப்ப போய்ச் சொல்லு.'

'மூஞ்சையும் முகறையும்... இதுக்க வைச்சே ஒவ்வொரு எலும்பா முறிச்சு விட்டன் எண்டா' என்று எண்ணியவன் சிறிது நேரம் அமைதியாக இருந்தான். அவளது சட்டையில் பெரிய மயிர் ஒன்று தொங்கிக் கொண்டு இருந்தது. அதை எடுக்க முயன்றான்.

'தொட்டியெண்டாக் கத்துவன். நேரடியாவே இப்ப போலிஸ்*க்குப் போவன். இல்லாட்டி செக்குறுட்டி இங்க வரும்.'

நீனா எழுந்து கொண்டாள். காள்வாணஸ்பிளாஸ் நெருங்கி இருந்தது. தேவாண் நின்று கதவைத் திறந்து மூச்சு விட்டது. நீனா வெளியே வந்தாள். வரும்போது சுரேனைப் பார்த்தாள். அவன் கண்கள் தணலாக ஆத்திரத்தைச் செங்கதிர்களாகக் கக்கிக் கொண்டு இருப்பதாய் அவள் நினைத்துக் கொண்டாள். இறங்கிப் பின்னால் வருவானோ என்பது பெரும் கிலியாயிற்று.

தேவாண் கதவு மீண்டும் மூடியது. சுரேன் இறங்கவில்லை. நீனா நிம்மதிப் பெருமூச்சொடு வீட்டை நோக்கிச் சென்றாள்.

# 2

லதா இரண்டு நாள்கள் வீட்டிற்கு வரவில்லை. சுமிக்கு அவளைப் பார்க்காமல் பைத்தியம் பிடித்துவிடும் போல இருந்தது. அவளின் இதழ்கள்... அழகிய நெற்றி... அவளில் இருந்து வரும் சுகந்தமான வாசம்... வெறி கொள்ள வைக்கும் அந்தப் பார்வை... எண்ண எண்ண சுமி அந்தரத்தில் தவித்தாள். போன் செய்த போது தனக்கு இன்புளுவன்சா (காலத்திற்கு காலம் காலநிலை மாற்றத்தோடு வரும் தடிமன் காய்ச்சல்) வென்றும் அதனால் தான் படுக்கையில் இருப்பதாயும் கூறினாள். சுமி மிகவும் சோர்ந்து போய்விட்டாள். லதாவிடம் சென்று அவளுக்குத் தேவையான உணவுப் பொருள்களை வாங்கிக் கொடுத்து விட்டு, வேறு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்றாலும் செய்து விட்டு வரவேண்டும் என எண்ணிக் கொண்டாள்.

லதாவை தங்கள் வீட்டில் வந்து இருக்குமாறு சுமி எத்தனையோதரம் கேட்டுவிட்டாள். அவள் ஏதேதோ காரணங்கள் சொல்லிச் சொல்லி மசிய மறுத்துக்கொண்டு வருகிறாள். சுமிக்கு அவளின் இந்தப் பிடிவாதம் பிடிப்பதில்லை. சிலவேளைகளில் அவளின் பிடிவாதத்திற்கு கன்னத்தைப் பொத்தி அறைய வேண்டும் போல் அவளுக்கும் இருந்தது.

எண்ணுவதை எல்லாம் செய்துவிட முடியாது. அது ஏற்றுக் கொள்ளப்படும் பண்பாடாக அமையாது. சிலவேளை வன்முறையாக அவள் எண்ணுவது உண்டு. பின்பு அப்படி எண்ணியதைப் பற்றிய அவமானத்தில் அவள் சுருண்டு போய்விடுவதும் உண்டு.

லதா ஷகறூட்டில் இருந்தாள். சுமி காரில் சென்றாள். Esso பெற்றோல் சைட்டைத் தாண்டி வந்த றவுண்டபோட்டில் திரும்பி பின்பு சடுதியாக இடதுகைப்பக்கம் திருப்பிப் பிட்டி போல் இருந்த பகுதியில் காரை ஏற்றினாள். அங்கிருந்த நிறுத்துமிடத்தில் விருந்தினருக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் தனது வாகனத்தை நிறுத்தினாள். எழுபதுகளில் கட்டப்பட்ட வானுயர்ந்த மாடிக் கட்டிடங்கள் அதே இறுமாப்போடு இன்றும் நிமிர்ந்து நின்றன. உலகத்தின் இருதயத்தைப் பிழிந்து எடுத்த எண்ணைப் பணத்தை வைத்து உருவாக்கிய குட்டி நகரங்கள் இவை.

இங்கு அதை 'றபுான்ந் வீ' என்பார்கள். இப்படியான இடங்களில் ஒரு மனிதனுக்கு அன்றாடம் தேவைப்படும் அனைத்துச் சேவைகளும் அடங்கி இருக்கும்.

சுமி வெளிக் கதவைத் திறந்து உள்ளே சென்றாள். அவசர அவசரமாக லிப்றில் ஏறி பட்டனை அழுத்தி விட்டாள். அதன் பின்புதான் கடிதம் பார்க்க மறந்து விட்டது ஞாபகம் வந்தது. 'சரி, பின்பு எடுத்துக் கொள்ளலாம்' என எண்ணியவள் மேற்கொண்டு பயணித்தாள். பின்பு ஆறாவது மாடியில் இறங்கி லதாவின் வீட்டுக் கதவைத் திறந்து உள்ளே சென்றாள். சுமியிடம் ஒரு செட் திறப்பு இருந்தது அதற்கு வசதியாக இருந்தது. சுமி கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்ற சத்தம் கேட்டு இருமியவண்ணம் 'ஆர் சுமியே?' என்றாள் லதா.

'அப்ப வேற யார் எண்டு நினைச்சா பூனைக்குட்டி' என்றாள் சுமி. பின்பு அவள் அருகே சென்றவள் 'பாரடி உன்ர கோலத்தை. இதுக்குத்தான் தனிய இருக்க வேண்டாம் எண்டுறது. ஒரு வருத்தம்

வதையெண்டா வீட்டுக்கையே ஆள் இருக்கிறமாதிரி வருமே? இந்தப் பூனைக்குட்டிக்கு இது விளங்குதே இல்லை' எனச் செல்லமாகக் கடிந்து கொண்டாள் சுமிதா.

வதா எதுவும் கூறாது மந்தகரமாய்ச் சிரித்தாள்.

'நீ உந்தச் சிரிப்புச் சிரிச்சே எல்லாத்தையும் மழுப்பிப் போடு' என்றாள் சுமி.

'இப்ப என்ன சண்டை பிடிக்கவே இஞ்ச வந்தனீ நீ? என்றாள் லதா.

'நான் உன்னோட  சண்டை பிடிக்க வருவனா பூனைக்குட்டி? நீதான் அப்பிடிச் செய்யிறாய். தேவையில்லாமல் வீம்புக்கு அடம்பிடிக்கிறா. அம்மா எவ்வளவு ஒத்தாசையாக இருந்தும் நீயதை ஏத்துக்கொள்ள மறுக்கிறாய்.'

'சும்மா அதையே கேட்டு நெடுக ஆக்கினைக்கட்டாத சுமி. நீ என்னதான் ஆக்கினை செய்தாலும் என்ர முடிவில இருந்து நான் லேசாகவும் மாறமாட்டன். அதுக்கான எந்த குட் றீசனும் இப்ப வரேல்ல.'

'ம்...கோபம் மாத்திரம் வந்திடும். எல்லாம் நீ சொல்லுறது மட்டுமே சரியெண்டு அடம்பிடிக்கிறது உன்ர தொழில். உன்னோடு தர்க்கித்துக் கொண்டு இருக்க இப்ப எனக்கு நேரமில்ல.'

'அதுதான் சரி. வந்த அலுவலைப் பார்த்திட்டு போய்க் கொண்டு இரு. சும்மா ஏன் கிழவிகளாட்டம் புறுபுறுக்கிறாய்!'

'உனக்கு இப்பிடி எல்லாம் கதைக்க எப்பிடி முடியுது?'

'அந்த விளக்கத்தை விட்டிட்டு, நீ எனக்கு கொஞ்ச சாமான் களும் 'Ibux' ம் (பனடோல் போன்ற ஒரு குளிசை) வேண்டிக் கொண்டு வா.'

'ஏதாவது சாப்பிட்டியே?'

'ஒண்டும் சாப்பிட மனமில்லை.'

'சரி இப்ப என்ன சாப்பிடப் போறா? ஏதாவது சமைக்கவா?'

'நீ சமைச்சாலும் நான் சாப்பிட முடியும் எண்டு நினைக் கேல்ல. Loff bred (தனிக் கோதுமை மாவில் மட்டும் செய்யப்படும் பாண்) வேண்டியா. ரீயில நனைச்சுச் சாப்பிட்டுப் பார்க்கப் போறன். அண்டைக்கு உந்தக் கிவிக்க (கிவி என்பது பலசரக்குக் கடை ஒன்றின் பெயர்) அந்தக் கிழட்டு சின்னராசன் என்னக் கண்டு போட்டு விசிலடிச்சுக் கொண்டு போகுது.'

'காறி மூஞ்சையில துப்பிப் போட்டு வராதையன்.'

'நாய் கடிச்சா நானும் விழுந்து கடிக்க முடியுமே? போ. போய்ச் சாமானை வேண்டிக் கொண்டு வா.'

சுமி திருப்பிப் பதில் கூறாது புறப்பட்டுச் சென்றாள். கிவிக் கடைக்கு ஒரு மூன்று நிமிட நடையில் சென்று விடலாம். அவள் காரில் போகாது நடந்தே சென்றாள். கிவிக் கடைக்குப் போவதற்கு முன்பு ஒரு பெட்டிக் கடை இருக்கிறது. அதில் சில்லறைப் பொருள்கள், சிகரட்டுகள், லொத்தறி போன்றவை விற்கப்படும். அத்தோடு படமும் அந்தக் கடையில் வாடகைக்கு விடப்படும். சுமி விரைவாக கிவிக் கடையை நோக்கிச் சென்றவள், எதேச்சையாக அந்தப் பெட்டிக் கடையைப் பார்த்தாள். அவளுக்கு சற்று அதிர்ச்சியாக இருந்தது. 'எப்படி இது சாத்தியம்?' அவளுக்கு எதுவும் புரியவில்லை. கிவிக்கு போய்ப் பொருள்கள் வாங்குவதா இல்லையா என்பதே அவளுக்கு இப்போது குழப்பமாகப் போய்விட்டது.

பின்பும் மனதைத் திடப்படுத்திக்கொண்டு கடைக்குச் சென்றாள். விறுவிறுவெனப் பொருள்களைக் கூடைக்குள் பொறுக்கிப் போட்டுக் கொண்டு காசாவுக்குச் சென்றாள். பணத்தைக் கொடுத்து விட்டுப் பொருள்களைப் பொறுக்கி ஷொப்பிங் பையில் வைத்தவண்ணம் அவசர அவசரமாகத் திரும்பி வந்தாள். அவள் அதிக பரபரப்பில் தன்னை இழந்துபோய் இருந்தாள். உலகில்

சிலவேளைகளில் நடக்கும் காரியங்களை நம்பமுடியாமல் இருப்பதாக நினைத்துக் கொண்டாள்.

பெட்டிக் கடைக்குள் இருந்து சுரேன் வெளியே வந்து கொண்டு இருந்தான். சுமிக்கு நெஞ்சு நீரெல்லாம் வற்றிவிட்டது. விட்ட மூச்சுக் காற்றை திருப்பி இழுக்க முடியாதது போல அந்தரித்தாள். கைகால் கள் அசைய மறுத்தன. அவள் நடக்கும் சக்தியற்றவளாய் அப்படியே நின்று விட்டாள். சுரேன் தொடர்ந்தும் முன்னேறி வந்தான். அவன் வெறி கொண்ட ஏறுபோல் சுமியை நோக்கி முன்னேறி வந்தான். அவன் அனல் தெறிக்கும் கண்களால் லாசர் பார்வை ஒன்றை வீசி, அவளை எரிப்பது போலப் பார்த்தவண்ணம் திடீரென தேவாண் நிலையத்தை நோக்கித் திரும்பிச் சென்றான். சுமிக்கு இழந்துவிட்ட சுவாசத்தை மீண்டும் பெற்ற நிம்மதி. மூளையின் மின்பாய்ச்சல் கைகால்களைச் சென்றடைந்தது. அது இயக்கும் கட்டளையைக் கொடுத்ததாக அவள் மெதுவாக இயங்கத் தொடங்கினாள். சுரேனுக்கு என்றாவது ஒருநாள் நல்ல பாடம் பயிற்ற வேண்டும் என எண்ணிக் கொண்டாள். பின்பு சுமி விரைவாக லதாவின் வீட்டை அடைந்தாள்.

உள்ளே போகவும் 'எனக்கு ஒரு ரீ வைச்சுத் தாறியே சுமி' என்றாள் லதா. 'ஓ ரீயோட பாணும் கொண்டு வாறன் பூனைக்குட்டிக்கு' எனப் பதிலளித்த சுமி, விரைவாக இருவருக்கும் தேநீர் தயாரித்து அத்தோடு Loff bredஐயும் எடுத்துக்கொண்டு லதாவிடம் சென்றாள். சுமியைப் பார்த்த லதா ஏதோ அவதானித்தவளாய், 'என்ன சுமி முகம் பேயறைஞ்ச மாதிரி இருக்குது? என்ன கிவியிலேயும் பேயள் வேலை செய்யத் தொடங்கீட்டுதுகளே? அப்பிடி அதுகள் வேலை செய்தாலும் அந்தப் பேயள் வியாபாரம் இல்லாமல் போய் விடும் எண்டு அடிக்காதே' என்றாள்.

'ம்...நல்ல பகிடிதான் நீ விடுகிறா. நீயே சொல்லி நீயே சிரிச்சுக் கொள். நான் இப்ப சொல்லுறதைக் கேள். கீழ சுரேன் வீடியோக் கடையில நிண்டான். எனக்கு அவனைப்பார்த்ததில் இருந்து கைகாலே ஓடேல்ல.'

'நீ ஏனடி அவனைப் பார்த்து நடுங்கிறா? பட்டப் பகலில அவன் என்ன செய்யேலும் எண்டு நினைக்கிறா?'

'அது சரி. அவன் பகலில ஒண்டும் செய்யேலாதுதான். அது பிரச்சனை இல்லை எண்டு நினைச்சாலும் அவன் தனிய அந்த வீடியோக் கடையில நிக்கேக்க எண்டதுதான் எனக்கு குழப்பமாக இருக்குது.'

'அப்ப?'

'அப்பாவும் அவனோட கதைச்சுக் கொண்டு நிண்டாரடி.'

'ஆங்...உங்கட அப்பாவோடையோ?'

'ம்...'

லதா சோபாவின் நுனிக்கு வந்திருந்தாள். அதிசயத்தில் கண்கள் அகல விரிந்து அவித்த முட்டையாகக் காட்சி தந்தன. பின்பு வதனம் எங்கும் அதிர்ச்சிக் கோடுகள் வலையாகப் படர்ந்து முகம் கறுத்துப் போயிற்று. என்றாலும் முட்டைக் கண்கள் மாத்திரம் தொடர்ந்தும் சுமியை வெட்டாது பார்த்தவண்ணம் இருந்தன. பின்பு அதை உணர்ந்தவளாய் லதா தன்னைச் சமாளித்துக் கொண்டு 'எப்ப வந்தவர் அப்பா?' என்றாள்.

'யாருக்குத் தெரியும்? எனக்கே வீடியோக் கடையில பார்த்துத்தான் தெரியும் எப்ப வந்தார் ஏன் வந்தார் எண்டு எனக்குத் தெரியாது' என்றாள் சுமி.

'ஏதாவது பெர்மிசன் கேட்டுக் கொண்டு வந்திருப்பார்.'

'சரி தேவையில்லாமல் நாங்கள் ஏன் அலட்டிக் கொள்வான். அவரால எங்களுக்கு எந்தப் பிரயோசனமும் இல்லை. வந்தா என்ன போனால் என்ன? எல்லாம் ஒண்டுதான்' என்றாள் சுமி.

'அதுவும் சரிதான். தேவையில்லாததைக் கதைக்கிறதால எங்களுக்குத்தான் மனவேதனை' என்றாள் லதா.

சுமி லதாவின் பக்கத்தில் வந்து இருந்தாள்.

'எப்பிடி இருக்கிறா பூனைக்குட்டி?' என்றாள்.

'எனக்கு வருத்தம் எண்டு தெரியுந்தானே? என்ர வருத்தத்தை வேண்டிக்கொண்டு போகாமல் தள்ளி இரு பார்ப்பம்' என்றாள் லதா.

சுமிக்கு லதா அப்படிக் கூறியது பிடிக்கவில்லை. அவளுக்குக் கோபம் பற்றிக்கொண்டு வந்தது. அதைப்பற்றி அவள் தற்போது மேற்கொண்டு விவாதம் செய்ய விரும்பவில்லை. பேசாது சிறிது நேரம் இருந்தாள். பின்பு பொதுவாகக் கதைத்துவிட்டு, சிறிது நேரத்தில் புறப்பட்டு விட்டாள்.

தபாற்காரன் அந்தக் கட்டிடத்தை விட்டு வெளியேறினான். நீலநிற முழுநீள அங்கியில் இருந்த அவன் ஒரு பியரை உடைத்து அந்த மரக் கதிரையில் இருந்து குடிக்கத் தொடங்கினான். அவன் இரண்டு பியர் குடித்திருப்பான். அப்போது சுமி வீட்டை விட்டு வெளியேறுவதை அவன் இருந்த இடத்தில் இருந்து பார்க்கக் கூடியதாக இருந்தது. இதையறியாத சுமி தனது காரில் ஏறி ஒப்சாலை நோக்கிச் சென்றாள். அவள் உருவம் மறைந்ததும் அவன் மெ துவாக வந்து அந்த மாடிக் கட்டிடத்தின் வெளிக் கதவோடு நின்று கொண்டான். அவன் எந்த வீட்டு அழைப்பு மணியையும் அழுத்த வில்லை. யாரும் உள்ளே போக வருவார்களா எனக் காத்திருந்தான். அவன் சிறிது நேரம் காத்திருக்க ஒரு நோர்வே நாட்டுப் பெண்மணி உள்ளே போவதற்கு கதவைத் திறந்தார். அவனும் அந்தப் பெண்ணோடு கட்டிடத்திற்குள் புகுந்து கொண்டான். அந்தப் பெண்மணி லிப்றறை நோக்கிச் சென்றார்.

அவன் சிறிது தாமதித்தான். பின்பு ஒருமுறை தபால் பெட்டிகளை நோட்டம் இட்டான். இன்னும் ஒருவரும் கடிதங்களை

எடுக்கவில்லை என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டான். அதன் பின்பு பரபரப்பாக அவன் படிகளில் ஏறி மேலே சென்றுகொண்டு இருந்தான். ஒவ்வொரு மாடியாகக் கடந்து ஆறாவது மாடிக்கு வந்தவன் அங்கே நின்றான், அவனுக்கு சற்று மூச்சு வாங்கியது.

அவன் ஆறாவது மாடியில் சுற்றிவர லைலிகெத் (பிளாற்) இருக்க நடுவே லிப்ற்றும் சொப்பிள் (குப்பை) போடுவதற்கான குழாயும் நீள்வட்ட வடிவிலே அமைந்திருந்தவை சுவருக்குள் பதுங்கி இருந்தன. அவன் ஆறாவது மாடியில் எதற்காகவோ நீண்ட நேரம் காத்திருக்கத் தொடங்கினான்.

சுமியிடம் கடிதம் எடுத்துவரக் கூறவில்லை ஏன்பது லதா வீற்குச் சலிப்பைத் தந்தது. வழமையாகக் கடிதம் எடுத்துவரும் சுமி இன்று அதை எடுத்து வராதது சற்றுக் கோபத்தை அவள்மேல் உண்டு பண்ணியது.

பின்பு சலிப்போடு முகத்தைக் கழுவிய லதா அதற்கு சிறிது ஒப்பனை கொடுத்தாள். உடுப்பை மாற்றிக்கொண்டு கடிதம் எடுத்துவரப் புறப்பட்டாள். காய்ச்சல் உடலின் சக்தியை எல்லாம் உறிஞ்சிவிட, அவள் கால்கள் தள்ளாடின. போவதா விடுவதா என ஒரு சந்தேகம் இடையில் எழுந்தது. அவளைக் கேள்வி கேட்டது. பின்பும் அதை புறம் தள்ளி பலத்தை ஒன்று திரட்டிய லதா நடக்கத் தொடங்கினாள்.

சுமி காலை மூன்று தரம் லதாவுக்கு போன் செய்து பார்த்துவிட்டாள். லதா போன் எடுக்கவே இல்லை. சுமிக்கு தலை வெடிக்கின்ற சினமாய் இருந்தது. 'நாசமாய்ப் போனவளோடு இனிக் கதைக்கக்கூடாது' என எண்ணிக் கொண்டாள். வரவர லதா தன்னை மதிப்பதில்லை என்பதாக சுமிக்கு திடீரென ஒரு தாழ்வு மனப்பான்மை வந்து ஆட்டம் காட்டியது. அந்த எண்ணமே அவளுக்கு மனதில்

பெரும் வேதனையைச் சுரக்க வைத்தது. 'எங்க போயிருப்பாள்?' என்கின்ற கேள்விக்குப் பதில் அவளுக்குக் கிடைக்கவில்லை. 'லதாவுக்கு காய்ச்சல் கூடி ஏதாவது ஆகி இருக்குமோ' எனச் சுமிக்கு திடீரெனப் பயம் எழுந்து கொண்டது.

மாலை ஐந்து மணியாகி இருந்தது. இன்னும் லதா போன் செய்யாதது சுமிக்கு மிகவும் விசித்திரமாகவும் கவலையாகவும் இருந்தது. அது அவளின் நிம்மதியைப் பந்தாடியது. அதற்குமேல் சுமிக்கு பொறுத்திருக்க முடியவில்லை. திறப்புகளை எடுத்துக் கொண்டு அவள் புறப்பட்டாள்.

வெளிக் கதவைத் திறந்தவுடன் தபால் பெட்டியைப் பார்த்தாள். அன்று கடிதம் எடுத்துக் கொடுக்க மறந்து போய்விட்டது ஞாபகம்வர அவள் தன்னைத் தானே கடிந்து கொண்டாள். 'என்றாலும் இவளேன் இன்னும் கடிதம் எடுக்கவில்லை?' என எண்ணியவளுக்கு அதன் காரணம் புரியவில்லை. கடிதப் பெட்டியைத் திறந்து கடிதங்களை எடுத்துக் கொண்டு லிப்ற்றில் ஏறி மேலே சென்றாள். லிப்ற் ஆறாவது மாடியில் நிற்க, சுமி இறங்கி அவசர அவசரமாகத் திறப்பை எடுத்துக் கொண்டு லதாவின் கதவை நோக்கிச் சென்றாள்.

சுமிக்கு நெஞ்சு நீரெல்லாம் வற்றி, உள்ளங்கை வியர்த்து மயக்கம் வருவது போல இருந்தது. 'என்ன எல்லாமே இசகுபிசகாய் இருக்கிறது? ஏன் இவள் கதவைத் திறந்து விட்டிருக்கிறாள்?' அவள் பதட்டத்தோடு 'லதா லதா' என்றாள். எந்தப் பதிலும் வரவில்லை. சுமி மெதுவாகக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்றாள். ரெலிபோன் மேசை பக்கவாட்டில் சரிந்து போய்க்கிடக்க, ரெலிபோன் மல்லாந்து கிடந்தது. சுமிக்கு இப்போது மயக்கமே வந்துவிடும் போல் இருந்தது. எங்கே இவள் என்னும் பதைபதைப்பு அவளை மேலும் தடுமாற வைத்தது.

சுமி பதட்டத்தோடு பாத்றூமை எட்டிப் பார்த்தாள். அது துப்புரவாக இருந்தது. ஏதோ ஒருவித இனம்புரியாத தற்காலிக நிம்மதியில் சஞ்சரித்தாள். அது நீடிக்கவில்லை. மேற்கொண்டு அங்கு நிற்காது சமையல் அறையை நோக்கி ஓடினாள். லதா குப்புறப்படுத்திருந்தாள். அந்தக் கோலம் இதயத்தை உறைய வைக்கும் பயங்கரத்தை அவளுக்கு ஏற்படுத்தி இருந்தது. அவசர அவசரமாய் அவளைத் திருப்பியவள், அந்தக் கட்டிடம் அதிரும் வண்ணம் வீறிட்டுக் கத்தினாள். சிறிது நேரம் அப்படியே உறைந்து போய் இருந்தாள். அவளுக்கு இதயமே நின்றுவிடும் போல இருந்தது. இந்தக் கணத்தோடு இதயம் துடிப்பதை நிறுத்தி, அது சுவாசத்தை முடித்துச் சென்றால் நிம்மதியென சுமிக்குத் தோன்றியது. அது நடக்கவில்லை. மாறாக இயற்கையின் விதியை மீறமுடியாத அவள் வேதனையால் துடித்தாள். கழுத்தில் வெட்டப் பட்டிருப்பதைப் பார்த்த பின்பும் தனது அநுபவங்களையும் மறந்து ஒரு நப்பாசை யுடன் நாடியைப் பிடித்துப் பார்த்தாள். தேகம் உறைந்து போய் இருந்தது. அவள் உண்மையை உணர்ந்து கொண்டாள். 'ஐயோ நான் என்ன செய்வேன்' நான் என்ன செய்வேன்!' எனப் பலமாக அரற்றினாள். பின்பு கட்டுப்படுத்த முடியாதவளாய் மீண்டும் குரல் எடுத்துக் கத்தினாள். அவள் ஓலத்தில் அந்தக் கட்டிடம் அதிரத் தொடங்கியது. அமைதி தொலைந்து போன அந்தக் கணத்தில் அயல் வீட்டுக்காரக் கிழவர் வந்து எட்டிப் பார்த்தார்.

'என்ன நடக்குது?'

'லதா... லதா... ஐயோ ஐயோ....!' சுமி தலையில் அடித்து அழுது கொண்டு இருந்தாள்.

'என்ன?' அவர் லதா பிணமாகக் கிடப்பதைக் கண்டதும் தாங்க முடியாத அதிர்ச்சியால் துள்ளினார். முகம் பயத்திலும் அதிர்ச்சி யாலும் விகாரமாய்ப் போயிற்று.

'போலிஸுக்குப் போன் பண்ணுங்கோ. அம்புலன்சுக்குப் போன் பண்ணுங்கோ!'

'என்ர லதா... என்ர லதா...' சுமி தன்னை இழந்தவளாய் அரற்றினாள்.

'யா யா' என்ற கிழவர் தனது வீட்டை நோக்கி அவசரமாக ஓடினார்.

பின்பு திரும்பி மீண்டும் வந்தார். சுமியின் தோள்களைப் பிடித்தவண்ணம் 'வா இங்கால, வா' என்றார்.

'இல்ல நான் வரேல்ல. நான் அவள விட்டிட்டு வரேல்ல. என்ர வாழ்க்கை முடிஞ்சு போச்சுது.'

'ஓ.கே. நாங்கள் அங்கால போய் இருந்து அதைப்பற்றிக் கதைப்பம். நீ முதல்ல வெளியால வா. நல்ல காற்றைச் சுவாசி.' வற்புறுத்தாத தொனியில் மீண்டும் தனது எண்ணத்தைக் கூறினார் அந்தக் கிழவர்.

சுமிக்கு இந்தக் கணத்தோடு தனது வாழ்வு முடிந்து விட்டால் நிம்மதியாக இருக்கும் எனத் தோன்றியது. இதயம் அவள் சொல்லைக் கேட்கவில்லை. அது தனக்கும் மனதுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதுபோல தொடர்ந்தும் அடித்துக் கொண்டு இருந்தது. சோர்ந்து போன சுமி வெளியே வந்தாள். சொப்பிள் போடும் இடத்திற்கு எதிராக இருந்த சுவரோடு சாய்ந்தவண்ணம் இருந்து கொண்டாள். கைகால்கள் நடுங்கிக்கொண்டு இருந்தன. கால் களுக்குள் முகத்தைப் புதைத்து மீண்டும் விசும்பத் தொடங்கினாள்.

அன்றைய nrkவின் மாலைச் செய்தியில், 'வூகறூட்டில் இளம் பெண்ணின் பிரேதம் மீட்பு. இது ஒரு கிறிமினல் வேலையாக இருக்க வேண்டும் எனப் போலிசார் சந்தேகிப்பதாக'க் கூறப்பட்டது. 'கொலை செய்யப்பட்டவர் வெளிநாட்டுப் பின்னணியைக் கொண்டவர்' என்பதையும் மறுக்காமல் சொல்லி வைத்தார்கள்.

அன்று முதல் முறையாக சுயமாக சுமி ஒரு விஸ்கி போத்தல் எடுத்து வந்திருந்தாள். சுமியின் அம்மா அதைப் பார்த்துவிட்டு 'நீ தாங்க மாட்டாய் பிள்ள. உந்தச் சனியன் உனக்கு வேண்டாம். ஆரும் கண்டா ஊர் சிரிக்கும் அம்மா' எனக்கூற நினைத்து பின்பு அடிமனதில் அந்த எண்ணத்தை ஆழமாகப் புதைத்து வைத்துக் கொண்டா. அப்பிடிச் சொன்னால் 'நீ எந்த நாட்டில அம்மா இருக்கிறா? உன்ன மாதிரி நாங்கள் வாழேலாது. அப்பிடி நீ எதிர்பார்க்காத. நாங்கள் இங்கேயே பிறந்து இங்கேயே வாழுறம். எங்கட நோஸ்க் பிரண்டுகள் எல்லாம் எப்படி இருக்கினம் எண்டு உங்களுக்குத் தெரியாதே? தேவையில்லாத உங்கட சமுதாயச் சாக்கடைகளை எங்களுக்கு மேலையும் ஏத்தாதையுங்கோ. எது பிழை எது சரி யெண்டு எங்களுக்குத் தெரியும். நான் ஒரு சீக்கபிளையர் அம்மா. எனக்கு அல்கஹோலின்ர தாக்கம் பற்றித் தெரியும். என்ர கவலை தெரியாமல் எனக்கு உபதேசம் செய்யாதை அம்மா' என்பாள் என்பதும் அவவுக்குத் தெரியும்.

'எனக்கு அதெல்லாம் தெரியும். எண்டாலும் ஏன் உந்தத் தேவையில்லாத இழவெல்லாம் எண்டு ஒரு ஆதங்கம்தான்' என அந்த நினைப்பிற்கே மறுத்துப் பதிலளிக்க வேண்டும் போல் சுமியின் அம்மாவிற்கு இருந்தது. அதற்கு அவள் 'என்ர இழப்பு உனக்குச் சரியா புரியேல்ல. அதுதான் நீ இப்படிக் கதைக்கிறா. போ அம்மா. போய் ஏதாவது செய். என்னைக் கொஞ்சம் தனிய இருக்க விடு' என்று கூறுவாள் என்கின்ற பயத்தில் எதுவும் பேசாது இருந்தா.

அதன்பின்பு சுமியின் அம்மா சமையல் அறைக்குள் அடைந்து கொண்டுவிட்டா. காலம் அவள் காயத்தை ஆற்றட்டும் என அவ கடவுளிடம் வேண்டிக்கொண்டா. சுமி அம்மாவின் இருப்பைப் புறந்தள்ளிவிட்டு குடித்தாள். குடித்துவிட்டுப் பின்பு சத்தி எடுத்தாள். பல மணித்தியாலங்களாய் பிதற்றிக் கொண்டு இருந்தாள். மீதி மிருந்த போதையின் களைப்பில் அப்படியே தூங்கிப் போனாள்.

சில காலத்தின் பின்பு.....

நீனா போன் செய்து சுமியை தன் வீட்டிற்கு வருமாறு கூறி இருந்தாள். என்னவாக இருக்கும் என்கின்ற குழப்பத்தோடு சுமி அங்கு சென்றிருந்தாள். இம்முறை நீனா மிகவும் கவன மாகக் கதவைத் திறந்தாள். அக்கா என்பதைப் பார்த்தபின்பே சங்கிலியைக் கழற்றினாள். அதன் பின்பு 'உள்ளே வா அக்கா' என்றவள், 'நீ போய் சோபாவில இரு. நான் ரீ வைச்சுக் கொண்டு வாறன்' என்றாள். சுமிக்குப் பாவமாக இருந்தது. சுரேன் வலோக்காரம் செய்ததில் இருந்து நல்லாய்ப் பயந்து போய் இருக்கிறாள் என்பது புரிந்தது. ரீயை வேண்டிய சுமி அதை சோபாவில் வைத்துவிட்டு என்ன என்பது போல் நீனாவைப் பார்த்தாள்.

'Jeg klarer ikke அக்கா' (என்னால சமாளிக்க முடிய வில்லை) என நொஸ்கில் தொடங்கியவள் பின்பு தமிழுக்குப் பாய்ந்தாள். 'மூன்றுதரம் போய் வந்தாச்சு. போட்டுக் குடைஞ்சு கொண்டு இருக்கிறாங்கள்' என்றாள் நீனா.

'என்னையும் நாலுதரம் விசாரிச்சுப் போட்டாங்கள். வித்தின (சாட்சி) எண்ட நிலையிலையே இவ்வளவு கேள்வியும் ஆக்கினை யுமா இருக்குது. விசாரணை எண்ட பெயரில மூளைய சித்திரவதை செய்யிற வேலையா இருக்குது. சைக்கோலோஜி கொஞ்சம் எண்டாலும் தெரிஞ்ச எனக்கே பெரிய அவஸ்தையா இருக்கு தெண்டா மற்றவைக்கு எப்பிடி இருக்குமெண்டு என்னால யோசிக்க முடியுது. நீ மனம் தளர்ந்து போகாத. நாங்கள் ஏதாவது செய்தால் தானே அவைக்குப் பயப்பிடோணும். அதுவும் லதாவுக்கு எதிராக.' சுமியின் குரல் தழுதழுத்தது. அவள் இன்னும் அந்த இழப்பில் இருந்து விடுபட முடியாது இருப்பதை நீனாவால் உணர முடிந்தது.

'கவலைப்படாத அக்கா. அவங்கள் கெதியா சரியான ஆளைப் பிடிப்பாங்கள்,' என்று நீனாவே சமாதானம் கூறவேண்டியதாகிற்று.

'ம்... முதல்ல என்னப் போட்டுக் குடைஞ்சது எனக்கு கொஞ்சமும் பிடிக்கேல்ல. திறப்பு வைச்சிருந்தன் எண்டதுக்காக என்னையே சந்தேகப்படுகிற மாதிரி அவையின்ர கேள்வி இருக்குது. எனக்கு எப்பிடியோ கொஞ்ச நாளைக்கு தொந்தரவாகத்தான் இருக்கப் போகுது. முதல்ல கதவு திறந்து கிடந்தது எப்பிடி எண்ட மாதிரியான குடையல். இரண்டாவது நான் கொஞ்ச நேரத்துக்கு முன்னதாகப் போய் வந்ததுக்குச் சாட்சி இருக்கெண்ட பய முறுத்தல். போய்வந்ததை நானே விசாரணையில் விளக்கமாகச் சொல்லி இருந்தன். எண்டாலும் சும்மா சும்மா கேட்டுத் தொந்தரவு பண்ணிக் கொண்டு இருக்கிறாங்கள்.'

'என்னை இனி அவை விசாரிக்கமாட்டினம் எண்டு நினைக்கிறன். எனக்கு இந்தக் குடைச்சலில இருந்து விடுதலை வேணும். இண்டைக்குதான் கடைசிக் குடைச்சலா இருக்கோணும். நான் எங்கட கொம்பனியில அண்டைக்கு முழுவதும் இருந்தன் எண்டதுக்கு கடிதம் வேண்டியந்து கொடுத்து இருக்கிறன். இனி அவை என்னச் சொறிஞ்சா பாப்பம்' என்றாள் நீனா கோபத்தோடு.

'கோவிக்காத. நாங்கள் முரண்டு பிடிச்சா எங்களைத்தானே சந்தேகப் படுவாங்கள்.'

'அரிகண்டமா இருக்குது. சரியான ஆளைப் பிடிக்கலாம் தானே. அதை விட்டிட்டு எங்களோட மினக்கெட்டா!' என்றாள் நீனா.

'பிடிப்பாங்கள். என்னிலதான் அவங்களுக்கு கூடுதலாச் சந்தேகம். அந்த நேரத்தில நான் திரும்பி வீட்டுக்கு வந்து படுத்திருந்தன் எண்டு அம்மா சொன்னாலும் அவங்கள் பெரிசா நம்பிற மாதிரித் தெரியேல்ல.'

'என்ன விதமான மனிசர் எல்லாம் இருக்கிறாங்கள்! நீயே கொலை செய்திருப்பாய் எண்டு எப்பிடி அவங்களால நினைக்க முடியுது?'

அதுதான் போலீஸ் நீனா!'

'நீ கொல்லோணும் எண்டா ஒரு ஊசியைப் போட்டு வேலை முடிச்சிருக்க மாட்டியே? இப்பிடியெல்லாம் பாவத்தை கொடுமைய...' நீனாவுக்கு குரல் தழுதழுத்தது. அது சுமியின் அடங்கிப் போய் இருந்த கவலையை மீண்டும் தட்டி எழுப்பிவிட, 'எல்லாம் நாசமாகப் போச்சுதடி...எல்லாம் நாசமாகப் போச்சுதடி...' என சுமி சத்தமாக அழத் தொடங்கி இருந்தாள். பதைத்துப் போன நீனா அவளை அணைத்தவண்ணம் 'அழாத அக்கா. எல்லா விடயமும் நாங்கள் நினைக்கிறமாதிரி நடக்கிறேல்லத்தானே? உனக்கு நான் ஆறுதல் சொல்லேலாது. நீயே உன்னத் தேத்திக் கொள்ளோணும்' என்றாள்.

'பாவமடி அவள். அவள் யாருக்கு என்ன தீங்கு செய்தாள்? அவளின்ர கழுத்தை அறுத்து நெஞ்சில வெறியோட குத்து குத்தெண்டு குத்தி... எனக்கு இரவில இப்ப நித்திரையே வருகுதில்லை. டொக்ரர் எழுதித் தந்த நித்திரைக் குளிசையும் வேலை செய்யுதில்லை.'

'உன்ர வேதனை எனக்குப் புரியுது அக்கா. அக்கா நல்லா றெயினிங் செய். உடம்பு அலுத்தா மனதும் ஒருவகையில நிம்மதி அடையும். சிலவேளை தூக்கமும் வரும்.'

'ஒண்டுக்கும் என்னால இப்ப போக முடியாமல் இருக்குது. என்னத்தப் பார்த்தாலும் அவளின்ர நினைவா இருக்குது. அவள் சிரிக்கிற மாதிரி, கதைக்கிற மாதிரி, சிணுங்கிற மாதிரி. எனக்குப் பைத்தியம் பிடிக்கும் போல இருக்குது.'

இந்தச் சந்திப்பு நடந்த சில நாள்களின் பின்பு ஒரு மாலை நேரம் அம்மாவோடு சுமி ரேடியோ கேட்டுக் கொண்டு இருந்தாள். திடீரென தொலைபேசி அடித்தது. சுமி போனை எடுத்தாள். நீனா போனில் மிகவும் பரபரப்பாக இருந்தாள்.

'என்ன நீனா?' என்றாள் சுமி.

'ஓடு சுமி. போய் nrkவில நியூசைப் பார். நான் பிறகு உனக்குப் போன் பண்ணுறன்' என்று கூறிவிட்டுப் போனை வைத்துவிட்டாள்.

சுமி பரபரப்போடு தொலைக்காட்சியை ஓன் செய்து பார்த்தாள். வூகறூட் கொலை சம்பந்தமாக ஒருவரைக் கைது செய்திருப்பதாகச் செய்தியில் கூறினார்கள். பெயரையோ படத்தையோ செய்தியில் இங்கு தேவையில்லாது காட்டுவதில்லை. சுமிக்கு யாராய் இருக்கும் என்பது புரியவில்லை. சுரேனைப் பற்றியும் அவன் நீனாவை வலோக்காரம் பண்ண முயன்றது பற்றியும் போலிஸிடம் கூறி இருந்தார்கள். ஆனால் அவன் லதாவைக் கொலை செய்ய வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. யாரைப் பிடித்திருப்பார்கள் என்பதை அறிய வேண்டும் போல் இருந்தது. போலிஸில் கேட்டால் சிலவேளை சொல்லுவார்களா சொல்ல மாட்டார்களா என்பது தெரியவில்லை. எதற்கும் அடுத்த நாள் அற்வகேற் மூலம் அறிந்து கொள்வோம் என அவள் முடிவு செய்து கொண்டாள்.

அடுத்த நாள் சட்டத்தரணியைத் தொடர்பு கொண்டபோது அது சுரேன் என்பது தெரியவந்தது. அவனைக் கொலை செய்வதுகூடப் பாவம் இல்லையென சுமி கறுவிக்கொண்டாள். உடல் எல்லாம் அனல் பற்றி எரிவதாய் அவள் துடித்தாள். லதா, லதா என மனதிற்குள் அவள் ஏங்கினாள்.

# 3

**1996** ஆம் ஆண்டில் இருந்து நடந்தவை.

துருவத்துச் சூரியனின் ஓயாத கோடைகால வெளிச்சத்தைப் புறக்கணித்த கடிகாரம் ஐந்தைக் காட்ட, பகலும் இரவும் ஒன்றாகிவிட்ட நாள்கள் அலுப்போடு கொட்டாவி விட, வெப்பத்தைக் கண்டு சூடு தணிப்பதற்காய் நீர்நிலை நோக்கி மனிதர்கள் சென்றுவிட, மிஞ்சி இருப்பவரும் அங்கும் இங்கும் ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் படுத்து இருக்க, ஒரு மாலைப் பொழுது மந்தமாக நகர்ந்து கொண்டு இருந்தது. சுமிதா சுவேகா வீட்டிற்கு விளையாடச் சென்றுவிட வீடு அமைதியின் அரவணைப்பில் சோர்ந்து போய்ச் சேடம் விட்டது.

சுமிதாவின் உயிர்த் தோழியாக இருப்பது சுவேகாதான். ஒன்றில் சுமிதா சுவேகா வீட்டில் இருப்பாள்; அல்லது சுவேகா சுமிதா வீட்டிற்கு வந்து விடுவாள். நட்பு என்பது வளரும் பருவத்தில் அலாதியான ஒரு பிணைப்பு. சிறிய அன்பும் பாசமும் உருக்கமும் சேர்ந்ததோர் பிணைப்பு. அதற்கு எந்த வரையறைகளையும் விதிப்பது அபத்தம் என்பது கமலினியின் கருத்து. அவளுக்கு இது சற்று வேடிக்கையாக இருப்பது உண்டு. தனது

பிள்ளைகளின் நட்புகூட எப்படி மாறுபட்டிருக்கிறது என்பதில் அவளுக்கு அதீத வியப்பு எழுவது உண்டு.

நட்பு என்பது ஒரு ஆணுக்குப் பெண் மீது ஏற்படலாம். அல்லது ஒரு பெண்ணிற்கு ஆண்மீது ஏற்படலாம். அதைவிடுத்து ஆணிற்கு ஆண்மீதோ, அல்லது பெண்ணிற்கு பெண்மீதோ ஏற்படலாம். சுமிதாவுக்குப் பெண்களுடனேயே அதிகம் நட்பு இருப்பதுபோல, சுந்தரும் பெண்களுடனேயே அதிகம் சேர்ந்தான். அன்று சுமிதா போய்விட, அவன் தனியே வீட்டில் நின்றான். அவன் மேலே தனது அறையில் என்ன செய்கிறான் என்பதைப் பார்க்க வேண்டும் போல இருந்தது கமலினிக்கு.

அவள் மேல் மாடியில் இருந்த அறையை நோக்கிச் சென்றாள். கமலினி உலாத்திற்குச் செல்லும் காட்டுப் பகுதியை அண்டிய றேக்கசூஸ் (row house) எனப்படும் தொடர்வீடுகளில் ஒன்றில் குடி இருந்தாள். அந்த வீடுகளில் படுக்கையறை பொதுவாக மேல்மாடியில் இருக்கும். இந்த வீட்டிலும் எல்லோரது படுக்கை அறைகளும் மேலேயே இருந்தன. அதில் ஒரு அறை சுமிதாவுக்கு கொடுக்கப்பட்டிருந்தது. மற்றைய அறை சுந்தருக்கு கொடுக்கப்பட, பெரிய அறையே மீதமாக கமலினிக்கும் கரனுக்கும் கிடைத்தது.

சுந்தரின் அறைக்குக் கரன் நீல நிறத்தில் பெயின்ரடிப் பதற்குத் தயாரானபோது, அவன் பழிக்கு விழுந்து கிடந்து அழுதான். விஷமத்திற்கு அடம் பிடிக்கிறான் எனக் கரன் முதலில் நினைத்துக் கொண்டான். பின்பு அவனைக் கூட்டிக் கொண்டுபோய் Maxbo வில் (கட்டிடப் பொருள்கள் விற்கும் பெரிய கடை அது) விட்டு கலரைக் காட்டு என்றபோது அவன் பிங்க் கலரை தெரிவு செய்தான். கரனால் சிரிப்பைப் பொறுக்க முடியவில்லை. கரன் சிரித்தது சுந்தருக்குப் பிடிக்கவில்லை. கரன் சுந்தரைப் புரிந்துகொள்ளாது, 'இது பெடியளின்ர றூமுக்கு அடிக்கிற கலர் இல்லையடா' என்றான்.

'எனக்குத் தெரியும்' என மிகத் தெளிவாகச் சுந்தரிடம் இருந்து அதற்குப் பதில் வந்தது. 'அப்ப என்ன இழவுக்கு உதைத் தூக்கிக் கொண்டு வாறாய்' என்று கரன் கடுப்பாய்த் தொடர, 'எனக்கு

அதுதான் பிடிக்கும்' என்று அவன் மிகத் தெளிவாக அழுத்தம் திருத்தமாக மீண்டும் பதில் கூறினான். கரன் கடைசியில் முணுமுணுத்தவண்ணம் சுந்தரின் அறைக்கு பிங்க் கலர் அடித்தான்.

பின்பு சிலகாலம் காலையில் தனது படுக்கை அறையில் இருந்து வெளியே போகும்போது சுந்தரின் அறை திறந்து இருந்தால் வாயைக் கையால் பொத்திக்கொண்டு கரன் பாத்ரூமிற்கு ஓடுவான். கரன் இதை விளையாட்டாக எடுத்தாலும் கமலினிக்கு ஏதோ ஒன்று புரிவதாய் இருந்தது. அப்போது இதயத்தை அழுத்தும் சோகம் ஒன்று அவளிடம் மெல்ல உறவு கொண்டாட வந்து விடும். தட்டவும் முடியாமல் அணைக்கவும் முடியாமல் இது என்ன தண்டனை என்கின்ற ஆற்றாமையில் அவள் சத்தமில்லாது புழுங்கிக் கொள்வாள்.

மேலே சென்ற கமலினி சுந்தரின் அறைக்குச் சென்றாள். அவனது அறை திறந்து கிடந்தது. அவனது 'பார்பி' பொம்மைகளை அவன் அக்கறையோடு அழகுபடுத்தி வைத்திருந்தான். அவனிடம் கருப்பு வெள்ளை இனப் பெண் பொம்மைகளும் இருந்தன. அதுவும் நீண்ட முடிகொண்ட பொம்மைகளை மாத்திரமே அவன் வாங்கி வைத்திருந்தான். பார்பி பொம்மைகளுக்கு எப்போதும் முதலிடம் கிடைக்கும். அப்படியே அவை நிரைப்படுத்தப்பட்டிருந்தன. டீனரையே (குளிருக்குப் போர்த்திப் படுக்கும் மொத்தமான போர்வை) பார்பிகளுக்கு உறையாகப் போட்டு வைத்திருந்தான். அதைவிட பிங்க் கலரில் ஒரு பியானோவும் அவனது அறையில் இருந்தது.

எதை அவன் கேட்டாலும் கமலினி ஏன் எதற்கு என்று விளக்கம் கேட்காது வாங்கிக் கொடுப்பாள். அவளுக்கு அவன் கேட்பதில் நிறையவே தெளிவு உண்டு என்பது புரியத் தொடங்கியது. மட்டம் தட்டுவதாய்ப் பிள்ளைகளைக் கேள்வி கேட்பது அவர்கள் மனவளர்ச்சியைப் பாதிக்கும் என்பது அவள் நினைப்பு. சிறுவர்களை பொம்மையாகப் பார்க்கும் எங்கள் தமிழ் கலாசாரத்தைப் புறந்தள்ளி சுந்தரை நண்பனாகப் பார்க்கத் தொடங்கி இருந்தாள். கரன் எடுத்ததிற்கு எல்லாம் கொடுப்பிற்குள் சிரிப்பான். நளினமாகக் கேள்வி கேட்பான். இரவில் கமலினியின் காதிற்குள் புறுபுறுப்பான்.

கமலினிக்கு இது பிடிக்காவிட்டாலும் சண்டை வேண்டாம் என்று பேசாது இருப்பாள். அவனும் மௌனம் சம்மதம் எனத் தப்பான கணக்குப் போட்டுக் கொள்வான்.

எங்கு போய்விட்டான் என கமலினி எண்ணும்போதே சுமிதாவின் அறைக்குள் இருந்து ஏதோ சத்தம் கேட்டது. அவள் சென்று கதவை மெதுவாகத் திறந்தாள். சுந்தர் சுமிதாவின் கவுனை அணிந்து இருந்தான். அவளிடம் இருந்த ஒப்பனைப் பொருள்களை எடுத்து அழகாகப் பேண்போல தன்னை அலங்கரித்து இருந்தான். அவன் இந்த வேலைகளை மிகவும் அழகு ரசனையோடு செய்திருப்பது கம லினிக்கு வியப்பைத் தந்தது.

கமலினியைக் கண்டதும் சிறிது வெட்கப்பட்டான். பின்பு ஓடத் தொடங்கினான். கமலினி அவனைக் கலைத்துக் கொண்டு ஓடினாள். அவன் வழுவிக் கொண்டு கீழே ஹோலுக்கு ஓடினான். கமலினிக்கு படியில் ஓடப் பயமாக இருந்தது. மெதுவாக நடந்து கீழே சென்றாள். சுந்தர் சோபாவில் இருந்து அம்மாவைப் பார்த்தான்.

'அம்மா நான் வடிவா இருக்கிறனே?' தலையைச் சரித்து நளினம் காட்டிக் கேட்டான்.

'என் கண்ணே பட்டிடுமெடா. நீ ஆணா இருந்தாலும் சரி பெண்ணா இருந்தாலும் சரி கொள்ளை அழகடா...'

'ஆணா வேண்டாம் அம்மா.' திடீரெனக் கூறினான். அவன் சற்று உணர்ச்சி வசப்பட்டிருப்பதை கமலினி கண்டாள். கமலினிக்கு அவன் இதயத்தின் வலியை தனது இதயத்தில் உணர முடிந்தது.

'பிள்ளைக்கு ஆணா இருக்க விருப்பமில்லையா?'

'இல்லையம்மா. நான் ஆணே இல்லையம்மா. நான் ஒரு பொம்பிள அம்மா. ஆணுடம்புக்க இருக்கிற பெண் அம்மா. என்ன புரிஞ்சுகொள்ளுங்கோ அம்மா.' அவன் அம்மாவின் மார்பில் சாய்ந்து விசும்பினான். கமலினியும் அந்த வேதனையை இனியும் தாங்க முடியாதவளாய் அழுதாள்.

ஆண்டவன் சில வேளைகளில் குருவிகள் தலையில் தூக்கிப் பனங்காயை வைத்து விடுகிறான். ஏதோ உருவத்தைக் கொடுத்து அதற்கு எதிரான உணர்வைக் கொடுக்கின்ற கொடியவனாகி விடுகின்றான். பிழையான கூட்டிற்குள் சில ஆத்மாக்களை அடைத்து வைத்து, குரூரம் கொண்ட கூத்தாடியாக வேடிக்கை பார்க்கும் பாதகன் ஆகின்றான். அவளுக்கு மகனின் வேதனையைத் தாங்க முடியாது இருந்தது. ஓவென்று அழவேண்டும் போல இருந்தது. தானும் அழுதால் அவன் அதிகம் கலங்கி விடுவான் என்று எண்ணியவள் தனது கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

'அழாத அப்பன். நாங்கள் ஏதாவது செய்வம்.'

'என்ன மாத்தோணும் அம்மா. அக்கா மாதிரி என்ன மாத்தோணும் அம்மா. இந்தச் சுந்தர் வேண்டாம். வேற ஏதாவது பெயர் வைக்கோணும். எனக்கு நல்ல பெயர் வையம்மா. நோஸ்க் பெயர் வையம்மா,' என்றான்.

கமலினி மீண்டும் இறுக அவனை அணைத்துக் கொண்டாள். அவள் கண்களில் மீண்டும் சூடேறி திரவத் திவலைகள் எட்டிப் பார்த்தன. கமலினிக்குச் சுமிதா வந்தால் தனது உடுப்பை இவன் போட்டு இருக்கிறான் எனச் சண்டை வந்து விடுமோ எனச் சிறிது பயமாக இருந்தது. சுந்தரை உடுப்பைக் கழற்றுமாறு கூறுவதற்கும் துணிவு வரவில்லை. அவனை இறுக்கிக் கட்டிப் பிடித்தவண்ணம் வெகுநேரமாக ஆத்மாக்களை வதைக்கும் பரமாத்மாக்களை சபித்துக் கொண்டு இருந்தாள்.

துருவத்தை எட்டிப் பார்க்கும் கோடை காலத்து இதமான வெயில் கதகதப்பைத் தந்துகொண்டு இருந்தது. பாடசாலையால் வந்த சுந்தர் அம்மாவை ஒரு முறை எட்டிப்பார்த்தான். கமலினி சமை யலில் மும்முரமாக இருந்தாள். அம்மா செய்யும் சமையல் அதிகம் அப்பாவிற்குத்தான் பிடிப்பது உண்டு என்பது சுந்தரின் எண்ணம். உறைப்பு அதிகமாக இருப்பதால் சுந்தருக்கு அதிகம் அது பிடிப்ப

தில்லை. இதற்காகவே சிலவேளைகளில் கமலினி சுந்தருக்காகவும் சுமிதாவுக்காகவும் இந்த நாட்டுச் சாப்பாடு தயாரிப்பாள். அப்போது சுந்தர் அதை விரும்பி உண்பான். இப்போது சமையல் வாசம் பிடிக்காது உடனடியாக வெளியே செல்ல நினைத்தான். அன்னாவும் முனாவும் வெளியே நின்று விளையாடிக் கொண்டு நிற்பதை வீட்டிற்கு வரும்போது பார்த்துக்கொண்டு வந்திருந்தான். அவர்களுடன் போய் விளையாடினால் நிறையக் கதைக்கலாமென எண்ணிக் கொண்டான்.

சுந்தரும் அன்னாவும் முனாவும் சேர்ந்து 'hoppe paradis' (இலங்கையில் விளையாடும் எட்டுக் கோடு போன்றது) விளையாடத் தொடங்கினார்கள். சிறிது நேரத்தில் இன்னும் சில சிறுமிகளும் அங்கே வர விளையாட்டில் விறுவிறுப்பு ஏறிற்று. கரன் பகல் வேலை முடிந்து சாப்பாட்டிற்காய் வீட்டிற்கு வந்து கொண்டு இருந்தான். சுந்தர் பொம்பிளைப் பிள்ளைகளோடு நின்று விளையாடுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. சுந்தருக்கு .அதை மெதுவாகச் சொன்னாலும் அவன் முகத்தைச் சுளித்துக் கொள்வது கரனுக்கு அறவே பிடிப்பதில்லை. மனதிற்குள் கெம்புகின்ற அந்தரத்தை இரண்டு வேலை செய்வதில் இருக்கும் அவசரத்தில் அடக்கிக் கொண்டான். இரண்டு வேலைகளும் ஒரு நாளின் பல மணித் தியாலங்களை ஏப்பம் விட்டுவிட, மிகுதியாக மிஞ்சுவது நித்திரை யான பிள்ளைகளோடான அமைதியான வீடே. அந்த அமைதியிலும் சுந்தரின் அறையைப் பார்த்தால் கரனுக்குப் பற்றிக்கொண்டு வரும். 'உதையெல்லாம் பிடுங்கி எறிந்து நீலப் பெயின்ரு அடிக்கோணும்' என்று கமலினியிடம் சொல்லும்போது அவள் மெல்லவும் முடியாது விழுங்கவும் முடியாது சிரிப்பாள். பின்பு நிதானமாக 'பிள்ளையளோட பிறண்சா இருக்கோணும். எதிரியாகக்கூடாது. உங்களுக்குச் சுந்தரின்ர பிரச்சனை விளங்காட்டி தயவு செய்து அவனோட மிண்டாதேங்கோ. பேசாமல் அமைதியா இருங்கோ. அதுதான் எல்லோருக்கும் நன்மையா இருக்கும்' என்பாள். இப்படியான நேரத்தில் கரனுக்கு தலைக்குள் ஏதோ செய்வது போல இருக்கும். அவன் பேசாது திரும்பிப் படுத்துக் கொள்வான்.

'இண்டைக்கும் பெட்டையளோட நிண்டு விளையாடுகிறதப் பார்' என்கின்ற அந்தரத்தோடு கரன் வீட்டுக்குச் சென்றான். சமையல் முடிந்திருந்தது. சுமியிடம் சுவேகா வந்திருப்பதைக் கண்டு கொண்டான். அவனுக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை

கமலினி சாப்பாடு போட்டுவந்து கொடுத்தாள். சோபாவில் இருந்து சாப்பிடத் தொடங்கும்போது சுந்தர் வந்தான். கரனுக்கு அவனோடு கதைப்பதா விடுவதா என்பது முதலில் புரியவில்லை. 'என் மகனோடு கதைப்பதற்கு நான் ஏன் தயங்க வேண்டும்' என எண்ணியவனாய், 'என்ன விளையாட்டு முடிஞ்சுதே?' என்றான்.

சுந்தருக்கு அப்பாவின் கேள்விகள் அவ்வளவு பிடிப்பதில்லை. என்றாலும் பதில் சொல்ல வேண்டும் என்பதாய் முடிவு செய்து கொண்டு, 'ஓ அவை போட்டினம்,' என்றான்.

'நான் ஒண்டு கேக்கிறன் பதில் சொல்லுறியே சுந்தர்?'

'என்னப்பா அது?'

அவன் சோபாவில் இருந்தான். அப்பாவை ஆழமாகப் பார்த்தான்.

'நீயேன் பெடியளோட சேர்ந்து விளையாடக் கூடாது? நீ பெடியளின்ர வீட்டுக்குப் போய் விளையாடலாம்தானே? அவங்களை இங்க கூட்டியந்தும் விளையாடலாம்தானே? ஏன் நீ கேள்ஸோட மாத்திரம் விளையாடுகிறா?'

'Jeg finner ikke noe felles med gutter அப்பா (என்னை ஆண்களுடன் சேர்த்தியாகப் பார்க்க முடியவில்லை அப்பா)' என அவன் நொஸ்கில் பதிலளித்தான்.

'Men du er en gutt (ஆனா நீ ஒரு பெடியன்)' என்றான் கரன். அவன் குரல் கடுமையாக இருந்தது. அவனைக் கோபம் மெதுவாக ஆக்கிரமித்தது.

'Nei. jeg er en jenta. Du ma forstar det. (இல்லை. நான் ஒரு பெண் என்பதை நீங்கள் விளங்கிக் கொள்ள வேணும்)' என்றான் சுந்தர். அவன் தனது எண்ணத்தை விட்டுக் கொடுப்பதாய் இல்லை.

கரனுக்கு உடல் எல்லாம் அம்மியில் அரைத்த மிளகாய் பூசிய வாக்கில் பற்றி எரிந்தது. பல்லை நறுமிய வண்ணம், 'தேவையில் லாமல் கதைச்சா எலும்பை முறிச்சுப் போடுவன். ஒழுங்காப் பெடியள் மாதிரி இரு. இல்லாட்டி பிடரியப் பொத்தி இனி அறைதான் தருவன்,' எனத் தமிழில் பாய்ந்தான்.

'என்னத்துக்கு என்ன வெருட்டிறியள். நான் எப்பிடி இருக்கோணும் எண்டு எனக்குத்தானே தெரியும்? அது என்ர சுதந்திரம். என்ர மனதில இருக்கிற வேதனை தெரியாமல் பெடியா இரு பெடியா இரு எண்டு வெருட்டிறியள். இப்பிடிச் செய்தியள் எண்டா நான் Barnevernற்கு (குழந்தைகள் காப்பகம்) போயிடுவன்.'

இந்தச் சத்தம் கேட்டு சுமிதா கீழே ஹோலுக்கு வந்தாள். அவளுக்கு அப்பாவின் கடினமான உழைப்புப் பற்றி பரிவு இருந்தா லும் தம்பியைப் பற்றிப் புரிந்து கொள்ளாது மனம் நோக நடப்பது அவரில் ஒருவித வெறுப்பை துளிர்விடப் பண்ணியது. கமலினி சமை யல் அறையில் ஏதோ செய்துகொண்டு இருந்தாள். அவளும் காரசார மாக தர்க்கம் நடப்பதை உணர்ந்து வெளியே வந்தாள். அவளுக்கும் கரனின் கெடுபிடியை நினைத்து சற்றுக் கவலையாக இருந்தது.

'ஆங் நீ அவ்வளவு பெரியாளாகீட்டியே சொல். உனக்கு இவ்வளவுக்கு வாய் நீளுமே?' கரன் கோபத்தில் எட்டி சுந்தரின் பிடரியில் அடித்தான்.

'நான் போறன், நான் போறன்,' எனச் சுந்தர் அழுது கொண்டு வெளியே ஓட முயன்றான். கமலினி அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

பின்பு, 'பொறுரப்பன். கோவிக்காத. அப்பா ஏதோ கோபத்தில பிள்ளையத் தொட்டுட்டார். நான் என்னெண்டு கேட்கிறன்,' என்று சாந்தப்படுத்தினாள்.

'ஓ அவனுக்கு நீ நல்லா செல்லம் குடு. வேணும் ஏண்டா உன்ர சீலையில கட்டிவிடு. நல்ல கிலுசுகெட்ட குடும்பமாய் இருக்கட்டும்.'

'வாய மூடுங்க. உங்களுக்கு பிள்ளையோட கதைக்கப் பேசத் தெரியாதெண்டா பேசாமல் இருங்க. சும்மா தேவையில்லாக்

கதையெல்லாம் இங்க நல்லதில்லை. விசயம் தெரியாமல் நிண்டு கண்டபாட்டுக்கு கூத்தாடக்கூடாது' என்றாள் கமலினி.

'அப்பா நீங்கள் வெருட்டுறது, அடிக்கிறது எல்லாம் பிழை. உங்களுக்கு சுந்தர் மேல தொடுறத்துக்கு எந்த அதிகாரமும் இல்லை. நீங்கள் இனி அப்பிடிச் செய்தியள் எண்டா நானே போன் பண்ணிச் சொல்லிப் போடுவன்,' என்றாள் சுமிதா கோபத்தோடு.

'ஓ, நான் ஒரு மடையன். நீங்கள் எல்லாம் இப்ப எனக்குப் படிப்பிக்கிறியள் என்ன? போடி உன்ர ரூமுக்கு. இல்லாட்டி போட்டு மொங்கிப் போடுவன்.'

'வெருட்டாதேங்க அப்பா. இனி வெருட்டினா நானே Barne vernற்கு அடிச்சு சொல்லுவன். பிறகு தெரியும்தானே உங்களுக்கு என்ன நடக்கும் எண்டு?'

'என்னடி சொல்லுறா...?' கரன் பல்லை நறுமிக்கொண்டு படிகளில் ஏற சுமிதா ஓடிப்போய்த் தனது அறைக் கதவைப் பூட்டிக் கொண்டாள்.

கமலினி கரனைச் சமாதானப்படுத்தும் நோக்கோடு அவனைப் பார்த்து, 'நீங்க சாப்பிடுங்கோ. இந்தப் பிரச்சனையெல்லாம் பிறகு கதைப்பம்' என்றாள்.

'ஓ இவ ஒரு தேவலோகத்து விருந்து படைச்சிருக்கிறா... இவ்வளவு கதையும் கேட்டுக் கொண்டு, நான் மானம் கெட்டவனா இதைச் சாப்பிடுகிறன்,' என்றவண்ணம் பிளேற்றைத் தூக்கி வீசியெறிந்தான். அது அலமாரியின் கண்ணாடியில் பட்டுத் தானும் உடைந்து கண்ணாடியையும் உடைத்தது. சோறும் கறியும் கண்ணாடித் துகள்களும் ஹோல் எல்லாம் பரவிக் கிடந்தன.

கரன் கோபத்தில் பொங்கினான். பொருமினான். அதன் வயப்பட்டு மதம் கொண்ட களிறு ஆகினான். சுவேகாவும் சுமியும் பயத்தோடு அறைக்குள் பூட்டிக்கொண்டு உள்ளே இருந்தார்கள். கரன் மீண்டும் ஆத்திரத்தோடு மேலே ஓடினான். சுந்தரின் அறைக்குள்
4 புகுந்து, வெறி கொண்டவனாய் அலங்கோலப்படுத்தினான். பின்பு

அவனது அறையின் கதவை அடித்துச் சாத்தினான். புறப்பட்டுப் புயலாக வெளியே ஓடினான்.

கமலினியால் எதுவும் செய்ய முடியவில்லை. எதற்கும் கைகால் ஏவவில்லை. அழும் சுந்தரைக் கட்டிப் பிடித்தவண்ணம் அப்படியே சோபாவில் இருந்தாள். இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டு இருந்த சுவேகா ஓடிவிட, சுமிதா மீண்டும் கீழே இறங்கிவந்து ஹோலைத் துப்புரவு செய்தாள்.

'சுந்தர் நீ கவலைப்படாத. அப்பாவின்ர குணம் தெரியும்தானே உனக்கு. இப்பிடித்தான் விஷர் கூத்து ஆடுவார்,' என்றாள் சுமிதா.

'ம்...' என்றவண்ணம் அவன் அம்மாவின் அணைப்பில் இருந்தான்.

'அம்மா...'

'ம்...'

'எப்பிடியம்மா நாங்கள் அப்பாவோட பதினெட்டு வயது வரையும் இருக்கப் போகிறம்? நிச்சயம் நான் அதுக்குப் பிறகு அப்பாவோட இருக்கமாட்டன்,' என்றான்.

'சண்டையில்லாத வீடு இருக்காதே. உதுக்கெல்லாம் இப்பிடிக் கவலைப்பட்டுக் கொண்டு இருக்கேலுமே?' என்றாள் கமலினி.

அவள் மனதில் சிறிதாக இருந்த சந்தோஷமும் நிம்மதியும் நூலறுந்த பட்டமாக அண்டத்தை நோக்கி இழுக்கப்பட்டு அங்கே இருக்கும் கறுப்பு ஓட்டையை நோக்கி அடித்துச் செல்லப்படுவதை அங்கலாய்ப்போடு பார்த்துக்கொண்டு நின்றாள்.

கமலினி வெகு நேரமாய் ஒருவித தவிப்போடு காத்திருந்தாள். இரவு ஒருமணியாகியும் கரன் வரவில்லை. மனது

சோர்ந்து வெறுப்பு மேலோங்கி இருந்தது. வழமையாக எப்படி என்றாலும் பத்து மணிக்கு முதல் அவன் வீட்டிற்கு வந்துவிடுவான். இன்று சுந்தரோடு சண்டையிட்டுக்கொண்டு போனவன் வரவில்லை என்பதில் கமலினிக்கு சற்று குழப்பமாகவும் பயமாகவும் இருந்தது. செல்போனுக்கு அடித்தபோது அது ஓவ் பண்ணி வைத்திருப்பதாக குரல் கொடுத்துக்கொண்டு இருந்தது. வேறு யாருக்கும் அடித்து விசாரிப்பதற்கும் அவளுக்குத் தயக்கமாக இருந்தது. ஏன் எதற்கு என விடுப்புக் கேட்பார்கள் என்கின்ற யதார்த்தம் தடுத்தது. எரியிற வீட்டில் பிடுங்குபவர்களே எங்கும் அதிகம் என்பதே அவள் எண்ணம்.

இரண்டுமணி போல அலுத்துப் போனவளாக மேல் மாடிக்குச் சென்றாள். வழமையாக அலாமை ஓன் செய்துவிட்டுப் படுப்பது வழக்கம். இன்று கரன் இன்னும் வராததால் அலாமை ஓன் செய்யாது படுக்கச் சென்றாள். சுந்தரின் அறையை எட்டிப் பார்க்க அவன் நித்திரையாகி விட்டது போல் இருந்தது. சுமிதா சுந்தரின் அறையை ஒழுங்குபடுத்தி இருந்தாள். கமலினி மெதுவாக லைற்றை அணைத்துவிட்டு தமது அறைக்குச் சென்றாள். மனசு நிம்மதி இன்றி அந்தரித்தது. புயலின் விசை கொண்டு ஆர்ப்பரிக்கும் கடலாகி அலை மோதியது. அதையும் மீறி உடல் அலுத்துப் போனவளாய் போய்ப் படுக்கையில் விழுந்தாள்.

காரைநகரைப் பிடிப்பதற்கு ஆமியும் நேவியும் சேர்ந்து அடிக்கத் தொடங்கி இருந்தார்கள். விமானப் படையும் அதற்கு உதவி செய்தார்கள். அவர்கள் அடித்த செல் மனிதர்களின் நட மாட்டத்தை நிறுத்தி பங்கர்களில் உயிரைக் காப்பதற்காய் தஞ்சம் புகவைத்திருந்தது. அதை மீறுபவர்களின் பிண்டங்களை அண்டம் காணப் போக வைத்தது. பங்கரும் சிலவேளை பாதுகாப்பை அளிக்க மறுத்தபோது மரணம் வந்து வசதியாக அழைத்துச் சென்றது. செல் அங்கும் இங்குமாக பனைமரங்களையும் மற்றைய மரங்களையும் தறித்து எறிந்து, வீடுகள்ளை நிர்மூலம் செய்தது. எல்லோரும் மூச்சைப் பிடித்தவண்ணம் பங்கருக்குள் பிள்ளையாரை வேண்டிக்கொண்டு இருந்தார்கள்.

சிறிது நேரச் சண்டையின் பின் தாக்குப் பிடிக்க முடியாத இயக்கத்தினர் வீரவசனத்தை எல்லாம் காற்றில் வீசிவிட்டுப் பொன்னாலைப் பாலத்தை நோக்கி ஓடுகிறார்கள். கமலினி ஒருவாறு உண்மையை உணர்ந்துகொண்டு தனது இயலாத அப்பாவைச் சைக்கிளில் இருத்திக்கொண்டு, கொட்டும் செல்லின் கோரத்தைக் காதில் போடாது, ம்ரணத்தின் பிடியில் இருந்து தப்பிக்கொள்வதற் காய்ப் பொன்னாலை நோக்கிப் பயணப்படுகிறாள். இடையில் போகும் போது ஆமி இறங்கிய இடம் எல்லாம் ஆள்களை வெட்டிக் கொல்வதாக சிவலிங்கம் கமலினியை மறித்துச் சொல்லிக் கொண்டு போகிறான். அவன் எதிர்த்திசையில் போனது அவளுக்கு விசித்திர மாய் இருந்தது. கமலினி பரபரப்பாக இன்னும் வேகமாகச் சைக்கிளை மிதிக்கிறாள். ஏனோ சைக்கிள் அசைய மறுக்கிறது. கமலினிக்கு இப்போது வியர்த்தது. கைகால் நடுங்கத் தொடங்கி இருந்தது.

திடீரென ஒரு நேவிக்காரன் இவர்களை மறிக்கிறான். இவர்கள் பதைபதைப்போடு சைக்கிளை விட்டு இறங்குகிறார்கள். திடு திடுவென றக்கில் இருந்து இறங்கி வந்த நேவிக்காரர் கமலினியின் அப்பாவை வேலியோடு தள்ளுகிறார்கள். அடுத்தகணம் துவக்கு முழங்குகிறது. 'ஐயோ வேண்டாம்,' ஐயோ வேண்டாம்.' கமலினியை நோக்கியும் துப்பாக்கி திரும்பியது. துப்பாக்கியின் சன்னத்தை வேண்டிய வேதனை இதயத்தை தணல் கொண்டு எரிப்பதாய் இருந்தது. அவள் உயிர் போகும் அவஸ்தையில் நெளிந்தாள். உயிர் போகுமுதல் கையைக் காலை பலம் கொண்டு உதறினாள்.

கமலினி திடீரென விழித்துக் கொண்டாள். உடல் சற்று வியர்த்து இருந்தது. திரும்பிப் படுக்க எண்ணிய போது சுந்தரின் அறை லைற் மீண்டும் எரிவது தெரிந்தது. 'என்ன செய்கிறான் இந்தச் சாமத்தில்' என எண்ணியவளாய் எழுந்து சென்று அறையைப் பார்த்தாள். அங்கு அவனைக் காணவில்லை. எங்கு சென்று விட்டான்?

காதைத் தீட்டியவளுக்குக் கீழே யாரோ அனுங்குவது போல இருந்தது. கமலினி தாமதிக்கவில்லை. திடுதிடுவென படிகளில் இறங்கி கீழே ஓடினாள். சுந்தர் சமையல் அறையில் இருந்த

மேசையில் மிகவும் சோர்ந்து போய் இருந்தான். அவன் கையில் இருந்து இரத்தம் பாய்ந்து கொண்டு இருந்தது. கமலினிக்கு தான் இந்தக் கணத்திற்கு முதல் கண்ட கனவில் உயிரை விட்டிருக்கக் கூடாதா என ஒரு கணம் எண்ணத் தோன்றியது. மறுகணம் பாய்ந்து சமையல் அறை அலமாரியில் இருந்த பெட்டி ஒன்றை எடுத்தாள். அவனது காயத்தைப் பஞ்சால் துடைத்து பின்பு அந்தக் காயத்தில் பஞ்சை வைத்து அழுத்தி பிளாஸ்ரர் ஒட்டினாள்.

இந்தச் சத்தங்களைக் கேட்டு விழித்துக்கொண்ட சுமிதா கீழே இறங்கி வந்தாள். அவளுக்கு சமையல் அறையில் கண்ட காட்சி அதிர்ச்சியைத் தந்திருந்தது. அவள் அப்படியே சில கணங்கள் அசையாது நின்றாள். பின்பு 'சுமிதா அம்புலன்ஸ்சுக்கு போன் பண்ணும்மா' என்னும் கமலினியின் குரல் கேட்டுத் துடித்துப் பதைத்தவளாய் போனை நோக்கி ஓடினாள். அவள் சிறிது நேரத்தில் அம்புலன்சிற்குப் போன் செய்துவிட்டு சமையல் அறைக்குள் வந்தாள். அவளுக்கு மிகவும் கவலையாக இருந்தது. தம்பி ஏன் இப்படிச் செய்தான் என்பது அவளுக்கு சாதுவாகப் புரிந்தது. அப்பா அவ்வளவு முரட்டுத்தனமாய் நடந்திருக்கக்கூடாது என அவர்மேல் கோபம் வந்தது. சுந்தர் மிகவும் சோர்ந்து போய் இருந்தான். 'ஏன் சுந்தர் இப்படிச் செய்தா? உனக்கு நானும் அம்மாவும் எப்பவும் சப்போட்டா இருப்பம் எண்டு தெரியாதே? அப்பா கோபத்தில செய்ததுக்காக நீயும் இப்பிடிச் செய்யிறதேடா?' என்றாள்.

அவனால் எந்தப் பதிலும் சொல்ல முடியவில்லை. 'ஆங்... ஆங்...' என்றான். கதிரையால் விழுந்து விடுபவன் போல் தள்ளாடினான். அவன் அரை மயக்கத்தில் இருப்பதை சுமிதா புரிந்து கொண்டாள். 'சுமிதா இவனப் பக்கத்தில் இருந்து பிடிச்சுக் கொண்டு இரு. நான் போய் உடுப்பை மாத்திக்கொண்டு வாறன். அவன்ர வலக்கையை மேல உயர்த்திப்பிடி' என்று கூறிய கமலினி மேலே ஓடினாள்.

சிறிது நேரத்தில் கீழே வந்த அம்மாவைப் பார்த்து, 'எங்கை யம்மா அப்பா?' என்றாள் சுமிதா. 'அவர் இன்னும் வரேல்ல' என்கின்ற கமலினியின் பதில் சுமிதாவுக்கு வியப்பைத் தந்தது.

சிறிது நேரத்தில் சத்தம் போடாது, லைற்றை மாத்திரம் மின்ன விட்ட அம்புலன்ஸ் வந்து நின்றது. அவர்கள் இதை ஆபத்தானதாக எடுத்துக் கொள்ளாதது சுமிதாவுக்கு கோபத்தை உண்டு பண்ணியது.

அவள் எதுவும் பேசவில்லை. சுந்தரைப் பரிசோதித்துப் பார்த்தவர்கள் அவசர அவசரமாய் குளுக்கோஸ் ஏற்றிவிட்டு அவனை அவதி அவதியாய்த் தூக்கிச் சென்றார்கள். போகும்போது அம்புலன்ஸ் ஒலியோடு ஓலமும் இட்டுச் சென்றது. அதைப் பார்த்த சுமிதாவுக்கு பயமாகவும் கவலையாகவும் இருந்தது.

சுமிதா தனித்து விடப்பட்டாள். அவள் மெதுவாக சமையல் அறையைத் துப்புரவு செய்தாள். இரத்தவாடை அவளுக்கு வயிற்றைப் புரட்டியது. சமாளித்தவண்ணம் அதைத் துப்புரவு செய்துவிட்டு பின்பு சிறிது நேரம் யன்னலைத் திறந்து விட்டாள். குளிர்காற்று மெதுவாக உள்ளே வர அந்த இரத்த வாடையின் அடர்த்தி குறைவதை அவளால் உணர முடிந்தது.

அம்புலன்ஸ் போன சில கணத்தில், கரன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தது சுமிதாவுக்கு மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. உள்ளே வந்த கரன் மிகவும் அவதியாக சுமிதாவிடம் 'ஆரிட்ட அம்புலன்ஸ் வந்திட்டுப் போகுது' என்றான்.

'நீங்க இரவெல்லாம் எங்க போட்டு இப்ப வாறியள்? இங்க இண்டைக்குச் சுந்தர் செத்திருப்பான். நல்ல வேளை அம்மா கண்டிட்டா. எங்களிட்டத்தான் அம்புலன்ஸ் வந்திட்டுப் போகுது' என்றாள்.

'என்ன?' அவன் ஒரு துள்ளு துள்ளினான். 'அம்புலன்ஸ் வார்ற அளவுக்கு இஞ்ச என்ன கோதாரி நடந்தது?'

'சுந்தர் கையை வெட்டி இரத்தமெல்லாம் போய் மயக்கமாக இருந்தான்.'

'ஆ... அவனுக்கு என்ன கோதாரி? ஏன் கையை வெட்டினான்?'

'எல்லாம் உங்களாலதான் அப்பா.'

'என்ன சொல்லுறா? எல்லாத்துக்கும் என்னச் சாட்டுங்கோ. நான் ஓடி ஓடி உழைக்கிறன். உங்களுக்கு என்னக் குற்றம் சாட்டுறதுதான் வேலை.'

'பிறகென்ன அப்பா. உங்களால அவனப் புரிஞ்சுகொள்ள முடியேல்ல. அதுக்குப் பதிலா அவனை அடிக்கப் பாயிறியள். அவன்ர ரூமை அலங்கோலப்படுத்துறியள். அவன் கவலையில செத்தாப் பறுவாய் இல்லை எண்டு முடிவு பண்ணிட்டான். இவ்வளவு நாள் நோர்வேல இருந்திட்டியள், உங்களுக்கு இஞ்சத்தே லோ (சட்டம்) ஒண்டும் இன்னும் விளங்குதில்லை. நீங்கள் எங்கள வெருட்டிப் பேசுறதே இஞ்ச குற்றம் தெரியுமா?'

'குற்றம் எண்டா இப்ப என்ன செய்யப் போறியள்? இரண்டு பேரும் போய் Barnevernஇல இருக்கிறியளே?'

'விளங்காமல் திரும்பத் திரும்ப கதைக்காதேங்க அப்பா. அவனச் சாகிற அளவுக்கு வெறுப்பேத்துறது ரொம்ப மோசமப்பா. இப்பகூட அவன் ஆஸ்பத்திரியில ஒரு சொல்லு சொன்னாப் போதும். பிறகு நீங்கள் தலைகீழா நிண்டாலும் எங்களைப் பாக்கேலாமல் போகும்.'

கரனுக்கு அவள் கூறியதில் உள்ள உண்மை புரிந்தது. என்றாலும் மானம் கௌரவம் என்கின்ற சொற்கள் தலைக்குள் இருந்து குரைப்பதால் அவன் அறிவுக் கண்கள் அடைத்துக் கொள்கின்றன.

'நான் வெறுப்பேத்திறன் எண்டு உனக்கு அவன் சொன்னவனே?'

'அப்ப விளையாட்டுக்கு கையை வெட்டினவனாக்கும்?'

'வரவர உனக்கும் வாய் நீண்டு போச்சுது.'

'எனக்கு வாய் நீளேல்ல. உங்களாலதான் ஒருத்தரையும் புரிஞ்சுகொள்ள முடியேல்ல எண்டு சொல்லுங்கோ. நீங்கள் இப்பவும்

சிலோன்ல இருந்தமாதிரி இருக்கப் பார்க்கிறியள். இது நோர்வே அப்பா. இங்க நிறைய வித்தியாசமாய் இருக்கோணும். எங்கட உரிமைகளை நீங்கள் மதிக்கோணும். நாங்கள் இங்கேயே பிறந்து இங்கேயே வளர்கிறம் எண்டதை ஞாபகம் வைச்சிருக்கோணும்,' என்றாள் சுமிதா.

'நீயும் எனக்குப் படிப்பிக்கிறா போல இருக்குது. உன்ர கதையக் கேட்க எனக்கு இப்ப நேரம் இல்லை. இப்பவே கிழவிகளாட்டம் தொணதொணக்கத் தொடங்கீட்டா,' என்று கூறிய கரன் தனது செல்லை எடுத்துக் கமலினிக்குப் போன் செய்தான். கமலினி போனில் கதைத்தாள். உல்லவோல் ஹொஸ்பிற்றலில் அவர்களை அனுமதித்து இருப்பதாய்க் கூறினாள். கரன் தான் உடனே புறப்பட்டு வருவதாய்க் கூற, கமலினி அதை மறுத்து, இப்போது தூங்கு மாறும் நாளைக் காலை வந்தால் சுந்தரைத் திரும்பவும் அழைத்துச் செல்லலாம் எனவும் கூறினாள்.

சுமி அதற்கு மேல் அங்கு நிற்க விரும்பவில்லை. சற்றும் தங்களைப் புரிந்து கொள்ள முடியாத அப்பாவைப் பார்க்கும் போது அவளுக்கு அருவருப்பாகவும் வெறுப்பாகவும் இருந்தது. அவள் எதுவும் மேற்கொண்டு கதையாது மேலே தனது அறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள். தனித்து இந்த உலகில் பிறந்ததான ஒரு தனிமையில் அவள் அமுங்கிப் போனாள்.

இரண்டு கிழமை கழிந்த பின்புதான் அந்தத் தீமர் (Appointment) கிடைத்திருந்தது. கமலினியும் சுந்தரோடு சென்று இருந்தாள். கமலினியை வெளியே இருக்குமாறு கூறிய மருத்துவர் சுந்தரை மட்டும் உள்ளே அழைத்தார். சுந்தர் தயக்கத்தோடு உள்ளே சென்றான்.

அந்த மருத்துவர் சுந்தருக்குக் கை கொடுத்து வீதார் கெல்கசன் எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். சுந்தரும் பதிலுக்கு கையைக் கொடுத்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். பின்பு

அவர் கதிரையில் இருக்குமாறு கூற சுந்தர் - கதிரையில் அமர்ந்து கொண்டான்.

'எதுக்காக உங்களை நீங்களே காயப் படுத்திக் கொண்டீர்கள்?' என்றார் அந்த மருத்துவர்.

'ஒண்டும் இல்லை.'

'வெட்கப்படத் தேவையில்லை. பிறீயா கதைக்கலாம்' என்றார் அவர்.

'அவை என்ர உணர்ச்சிகளைப் புரிஞ்சு கொள்ளுகினம் இல்லை.'

'ம்...எனக்கு உங்கட பிரச்சனை விளங்குது. என்னிட்ட நீங்கள் தாராளமாய்ச் சொல்லலாம். அது சரி அவை எண்டா யார்? அப்பா அம்மாவா? பிறண்சா? பாடசாலையில் இருப்பவர்களா?'

'எல்லோரும். குறிப்பா அப்பா.'

'அம்மா எப்பிடி?'

'அவ நல்ல பிறண். என்னப் புரிஞ்சு வைச்சு இருக்கிறா.'

'உனது சகோதரி எப்படி?'

'அவள் நல்லவள்.'

'பாடசாலையில?'

'சிலர் கிண்டல் பண்ணுவாங்கள்.'

'ம்... ஆசிரியரிட்ட இல்லாட்டி வீட்டில இதைப்பற்றிக் கதைச்சியளா?'

'சில வேளையில.'

'கதைக்கோணும். அது எல்லாத்துக்கும் நல்லது. பிரச்சனை சின்னனா இருக்கேக்கையே பேசித் தீர்க்கோணும்.'

'ம்...'

'நீங்கள் உங்கட அடையாளத்தைப்பற்றி நிச்சயமா இருக்கோணும். நீங்க எப்பிடிப் பீல் பண்ணுறியளோ அதில வலுவா இருக்கோணும். யாருக்குப் பயந்தும் எதையும் விட்டுக்கொடுக்கத் தேவையில்லை. ஒவ்வொரு மனிதரும் மற்றைய மனிதரைவிட மிகவும் வித்தியாசமானவர்கள். அவர்களின் உணர்ச்சியும் அப்படியே வித்தியாசமானதாய் இருக்கும். நான் பீல் பண்ணுறத நீ பீல் பண்ண முடியாது. அதேமாதிரி நீ பீல் பண்ணுறத நான் பீல் பண்ண முடியாது. நீங்கள் எப்பிடி இருக்கப் போறியள் எண்டது அநேகமாக நீங்கள் பிறக்க முதலே நிச்சயிக்கப்பட்டு விடும் எண்டுதான் நான் சொல்லுவேன். ஒருசில விடயங்கள் மட்டும் பிறந்த சில நாள்களில் நிர்ணயிக்கப்படுகிறது. அதைவிடச் சிலதே வளரும்போது வந்து ஒட்டிக் கொள்ளுகிறது. நீங்கள் எப்பிடி இருக்கப் போகிறீர்கள் என்பது உங்கள் கையில் முழுமையாக இல்லாதபோது, அதுக்காக நீங்கள் யாருக்கும் எதற்கும் வெட்கப்படவோ, கவலைப்படவோ தேவையில்லை. இயற்கையில் பலவிதமான உறவுகள் தாவரங் களில், மிருகங்களில் மனிதர்களுக்கு இடையில் இருக்கிறது. அதை ஒத்துக்கொள்ளாத புத்திக்கூர்மையற்ற மனிதர்களைச் சந்திக்கும்போது வேதனையான அநுபவங்கள் உங்களுக்கு ஏற்படலாம். நீங்கள் அதற்காகக் கலங்கக் கூடாது.'

சிறிது நேரம் அமைதியாக இருந்த மருத்துவர் சுந்தரை மீண்டும் பார்த்து, 'அது சரி, உங்கட கற்பனை உருவம் எப்பிடியானது?' என்றார்.

'ஓ அதா? அது ஒரு பெண். அழகான பெண். எந்த அசிங்க மான உறுப்பும் இல்லாத அழகான பெண். பெண்ணுக்கு இருக்க வேண்டிய உறுப்பு எல்லாம் பொலிவாக இருக்கும் அழகான பெண். எனக்கு ஆணாகக் கற்பனை செய்யவோ இருக்கவோ சுத்தமாய்ப் பிடிப்பதில்லை.'

'நல்லது.'

'நான் பெண்ணாக மாறோணும்.'

'ம்... நீங்கள் பெண் எண்டதில நூறுவீதம் திடமாக இருக்கிறியளா? அப்பிடி உணருகிறியளா? அப்பிடி நீங்கள் உணர்ந்தால், நீங்கள் பெண்ணாக மாறுவதை யாரும் தடுக்க முடியாது.'

'ஓ, நான் பெண்ணாகத்தான் இருக்கிறன். உணருகிறன். வாழுகிறன். நான் உருவத்திலையும் பெண்ணாக மாறுறத்துக்கு என்ன செய்ய வேண்டும்? நீங்கள் எனக்கு ஹெல்ப் பண்ண வேணும்.'

'பெண்ணா மாறுறத்துக்கு முதல்ல ஹோமோன் சிகிச்சை செய்ய வேண்டும். பிறகு ஒப்ரேசன் செய்யலாம். அது மிகவும் வேதனையான அநுபவமாய் இருக்கும். அதுக்கு உமக்கு 18 வயது முடியோணும்.'

'என்ன வேதனையாக இருந்தாலும் நான் பெ்ண்ணாக மாற வேண்டும்.'

மருத்துவர் சுந்தருடன் நிறையப்பேசினார். சுந்தரும் சுவாரசிய மாக அதைக் கேட்டுக்கொண்டு இருந்தான். அப்போது ஏற்பட்ட சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெற்றுக் கொண்டான்.

பின்பு மருத்துவர் கமலினியோடு கதைத்தார். அவரின் அறிவுரைப்படி நடப்பதாய்க் கூறிவிட்டு இருவரும் வீட்டிற்குத் திரும்பி வந்தார்கள்.

கணவனின் வரவுக்காக இரவுகளைப் பகலாக்குவது பல பெண்களுக்குப் பழகிப் போய்விட்ட ஒன்று. கமலினியும் ஈழத்தில் இருந்து கொண்டு வந்த சில கலாசார எச்சங்களைத் தூசிதட்டி அழகு பார்த்துக் கொள்வாள். வேதனை என்றாலும் காயத்தைச் சொறிந்து கொள்ளும் விருப்பு அவளுக்கு அதில் இருந்தது. கட்டுடைப்பதும் கலாசாரம் அறுப்பதும்தான் பெண்ணுக்கு விடுதலையான வாழ்க்கை தருமா என்பது பற்றி அவளால் இன்னும் தெளிவு பெற முடிய

வில்லை. வாழ்க்கை ஒரு நாடகமேடையாக, அதில் உருத்திர தாண்டவம் ஆடும் மனித வேடங்களில் நியாய அநியாயங்கள் தொலைந்து போனதான வெறுமை அவளை சில வேளைகளில் துரத்தும். அதே நாடக மேடையில் தானும் எதையோ தொலைத்து விடுவேனோ என்கின்ற பயத்துடனான அவளின் காத்திருப்பு என்றும் தொடர்கிறது.

அன்று இரவு பத்துமணிபோல கரன் வந்தான். கமலினி செய்து வைத்திருந்த Pizza வைச் சூடுபண்ணிக் கொண்டுவந்து கொடுத்தாள். கரன் சாப்பிட்டவண்ணம் தொலைக்காட்சி பார்க்க எண்ணியவன் நினைவு வந்தவனாய், ‘டொக்ரர் என்ன சொன்னவர்?’ என்றான்.

‘அவனை அவன் எப்பிடி இருக்க விரும்புகிறானோ அப்பிடியே இருக்க விடட்டாம்,’ என்றாள் கமலினி.

‘எனக்கு விளங்கேல்ல. நீ தமிழ்தானே கதைக்கிறா?’ என்றான் கரன். கமலினி சிறிது நேரம் கொதிப்பில் பேசாது இருந்தாள்.

பின்பு தனது எரிச்சலைக் கைவிட்டவளாக, ‘அவன் தன்னப் பொம்பிளப்பிள்ளையா நினைக்கிறான். அதை யாரும் தடுக்க வேண்டாமாம். விமர்சிக்க வேண்டாமாம். அவனை ஒரு பொம்பிளப்பிள்ளை மாதிரியே மதிச்சு நடக்கட்டாம்.’

‘அங்... நொஸ்குகளுக்குத்தான் உந்தக் கூத்து சரியா இருக்கும். எங்களுக்கு உந்த உபதேசம் சரிவராது. ஐயோ என்ர மானம் போகப் போகுது. நான் நாளைக்கு உங்க சனத்தின்ர முகத்தில் முழிக்கேலாது. ஒஸ்லோவை விட்டிட்டு வேறை எங்கையும் ஓடவேண்டியதுதான்.’

‘அப்பா! நான் எங்கட பிள்ளையப் பற்றி கதைக்கிறன். நீங்கள் ஆரோ எவனோ கதைக்கப் போறது பற்றிக் கவலைப்படுறியள்! ஊரை விட்டு ஓடப்போறன் எண்டுறியள்.’

‘அப்பிடியெண்டா எனக்கு மானம் மரியாதை இல்லையே? நான் வெளியால போய் வாறேல்லையே? என்ர கௌரவம் என்ன ஆகும் எண்டு நினைச்சுப் பாக்கிறியளே?’

'என்னப்பா நீங்கள் கதைக்கிறியள்? எங்கட பிள்ளையவிட உங்கட மானம் மரியாதை வரட்டுக் கௌரவம் பெரிசாப் போச்சுதே?.'

'ஓ... எனக்கு என்ர மானமும் கௌரவமும் முக்கியம். அவன் பெடியனாப் பிறந்தவன் பெடியனா வளர்கிறதுக்கு என்ன? அப்பிடித்தான் வளரோணும். அதை யாரும் மாத்தக் கூடாது.'

'என்னப்பா நீங்கள் புரியாமல் திரும்பத் திரும்ப அதையே கதைக்கிறியள்? நீங்கள் வேணும் எண்டா அந்த டொக்ரரோட ஒருக்கா கதைச்சுப் பாருங்கோ. அப்ப எல்லாம் விளங்கும்.'

'நான் அந்த டொக்ரரிட்ட எல்லாம் போகேல்ல. எனக்கும் என்ன மண்டப் பிழையே?'

கமலினி இப்போது பொறுமை இழந்தாள். என்ன வசனம் வாயில் வருகிறது என்பதை சீர்தூக்கிப் பார்க்காது கதைத்தாள்.

'ஓ நீங்கள் நல்ல அறிவாளியாத்தான் இருக்கிறியள். பார்க்கத் தெரியுது' என்றாள்.

கரனை அந்தச் சொற்கள் கடுமையாகச் சுட்டன. 'என்னடி நக்கலே? அறைஞ்சு போடுவன் அறைஞ்சு...ஓ.' என்றான்.

'ம்...இப்பிடிக் கடிபட்டுக்கொண்டு இருந்தம் எண்டா நல்ல முடிவு வராது. அதுமாத்திரம் எனக்கு நல்லா விளங்குது.'

'சரி உனக்கு விளங்கினது போதும். இப்ப ஒரு ரீயொண்டு வைச்சா குடிச்சுட்டு போய் நான் படுக்கோணும். காலமை எனக்கு வேலை இருக்குது. இரண்டு வேலை செய்து உழைச்சுக் கொண்டு வந்தா... இதுகள் ஆணைப் பெண்ணாக்கோணும் பெண்ணை ஆணாக்கோணும் எண்டு பேய்க்கூத்தாடுதுகள்.'

'ஏன் நீங்கள் இரண்டு வேலைக்கு அலையிறியள்? என்னை விட்டா நான் வேலை செய்வன்தானே?'

'ஓமடி, என்னையும் மனுஷிமாரை வேலைக்குப் போக விட்டிட்டு வீட்டில குந்திக்கொண்டு இருக்கிற பொன்னையனாக்கப் பாக்கிறாயாக்கும்?'

‘ஐயோ... நீங்கள் இப்பவும் எந்த உலகத்தில இருக்கிறியளோ தெரியாது,’ என்றாள் கமலினி.

‘எனக்குத் தெரியும் நான் எந்த உலகில இருக்கிறன் எண்டு. உங்களுக்குத்தான் நோர்வேல இருக்கிறம் எண்டோண்ண கறுத்த தோல் போத்தின வெள்ளைக்காரரான நினைப்பு. காகம் உயர உயரப் பறந்தாலும் கொக்காகுமே? எனக்குத் தலையிடிக்குது கெதியா ரீ வைச்சா.’

கமலினிக்கு மேற்கொண்டு ஒரு சொல் கதைப்பதற்குக் கூட மனம் வரவில்லை. அவள் ரீயை வைத்துக் கொடுத்துவிட்டுப் போய் படுத்துக்கொண்டாள். வெளியே மழை இருட்டிக்கொண்டு பயமுறுத்தியது. உள்ளே நரகத்தை வாழ்வாக்கிய சோகம் அவளை உயிரோடு மெதுவாக விழுங்கத் தொடங்கியது.

# 4

கமலினி சுந்தரையும் அழைத்துக் கொண்டு வெளியே உலாத்தி வரச் சென்றிருந்தாள். வீட்டிற்குள் அடைந்து கிடப்பது தேவையில்லாத நோய் நொடிகளைத் தந்துவிடும் என்பதாய் அவள் புரிந்து வைத்திருந்தாள். வீட்டிற்குப் பின்னாலே உள்ள காட்டிற்குள் இறங்கி குன்றுகளிலும் பள்ளங் களிலும் நடந்து களைத்து... வியர்வையைக் கொட்டிவிட்டு வரும்போது உடலில் தங்கி இருந்த கெட்ட சக்திகள் எல்லாம் வெளியேறியதான உணர்வு அவளுக்கு உண்டாகும். சுந்தரும் அப்படிப் போய் வருவதை மிகவும் விரும்புவான்.

சுந்தரும் கமலினியும் காடு காடாக பிட்டி போன்ற பகுதி ஒன்றில் ஏறிக்கொண்டு இருந்தார் கள். சுந்தர் திடீரென ஏதோ ஞாபகம் வந்தவனாய், 'அம்மா' என்றான்.

'என்னப்பன்?' என்றாள் கமலினி. 'நீ ஏன் வேலை செய்யிறேல்ல?' என்றான் அவன்.

'அப்பா தான் இரண்டு வேலை செய்யிறன் எண்டும் உங்கள மாத்திரம் நான் நல்லாப் பார்த்தாப் போதும் எண்டும் சொன்னார். அதால நான் அப்பிடியே வேலை செய்யாமல் விட்டிட்டன்.'

'அவர் சொன்னாலும் நீயேன் அம்மா ஒத்துக்கொண்டா? வேலை செய்யாமல் இருக்கிறது உனக்குத்தானே கூடாது.'

'உண்மைதான் அப்பன். வந்த புதிசில் வேலை கிடைக்கிறதும் கொஞ்சம் லேசு இல்லைத்தானே எண்டிட்டுப் பேசாமல் விட்டிட்டன். நீ சொல்லுறமாதிரி பென்சன் எல்லாம் குறைவாகத்தான் வரும்.'

'இனி எங்களைப் பார்க்க வேண்டிய அவசியம் உனக்கு இல்லைத்தானே? இனி நீ வேலை செய்யத் தொடங்கலாம்தானே அம்மா?'

'ம்... நீ சொல்லுறதும் உண்மைதான். எங்க வேலை தேடுறது எண்டுதான் எனக்குத் தெரியேல்ல?'

NAV (வேலை, வருமானம் தொடர்பான அலுவல்களைக் கவனிக்கும் அலுவலகம்)க்குப் போம்மா. அவங்கள் உதவி செய்யத்தானே வேணும்?'

'அப்பா கோவப்படுவாரோ தெரியாது.'

'அப்பாவைப் பற்றி இன்னும் கவலைப்படுகிறியா அம்மா? எப்ப நீ உன்னைப் பற்றிக் கவலைப்படப்போறா?'

கமலினிக்கு இதயத்தில் முள்ளு தைத்ததான ஒரு வேதனை அடிமுதல் நுனிவரை ஓடியது. 'நான் என்னைப் பற்றி சிந்தியாது, எனது இடத்தை உறுதி செய்யாது கண்மூடிக் கொண்டு இருந்ததும் தப்பு என்கிறான்' என ஒரு கணம் எண்ணினாள். பின்பு அதை அவனிடமே கேட்பதுபோல, 'ஏனப்பன் அப்பிடிச் சொல்றா? நான் எதுக்கு என்னைப் பற்றி கவலைப்பட வேணும்? அப்பா உழைகிறதே எங்களுக்கு மிச்சம்தானே? காசை மாத்திரம் வைச்சிருக்கிறதில ஏதாவது பிரயோசனம் இருக்குதே?' என்றாள்.

'அதில்லையம்மா. வீடே வாழ்க்கையானதில வெளியுலக வாழ்க்கையை நீ நித்தமும் இழக்கிறா எண்ட கவலை உனக்கு இல்லையா? சரியம்மா வீட்டையே பாருங்கோ... நானும் பங்காளி எண்டு இல்லாமல், பிச்சக்காரி மாதிரி இருக்கிறது உனக்குப் பிடிக்கும் எண்டுறியா? எங்களுக்காக இருந்தாய் எண்டு சொல்வியா? சரி

இனியும் ஏன் நீ அப்பிடி இருக்கோணும்? நீயும் பங்காளியா இரம்மா. அதுதான் உனக்கும் நல்லது. எங்களுக்கும் நல்லது. அப்பிடித்தான் இங்க இருப்பினம். இருக்கவும் வேணும்.'

'நீ சொல்லுறது விளங்குது சுந்தர். உங்கட நினைப்பு பேச்சு எல்லாம் நோர்வே பிள்ளைகளைப் போலவே இருக்குது. நீங்கள் இப்பவே ஆழமாச் சிந்திக்கிறியள். நான் இதை எப்பவோ புரிஞ்சு இருக்கோணும். நாங்கள் ஊரில ஆழமாச் சிந்திக்கிறேல்ல. அந்தப் பழக்கம் இங்கையும் தொடருது எண்டுதான் சொல்ல வேணும்.'

'ம்... நல்ல சமாதானம் சொல்லுறாயம்மா நீ. ஆனா நீ கொஞ்சமும் கவலை இல்லாமல் இருந்திருக்கிறா. அநேகமான தமிழ் பொம்பிளையள் இங்க வேலை செய்யினம். நீ மட்டும் அப்பாவின்ர சொல்லைக் கேட்டுக்கொண்டு பேசாமல் இருந்திருக்கிறா. ஆனா சமாதானம் மாத்திரம் ரெடியா வைச்சிருக்கிறா. அதில நீ கெட்டிக்காரிதான்.'

'ம்..?'

கமலினி சொல்லிழந்து தன் மகனைப் பார்க்க முடியாது தவித்தாள்.

'நான் தப்பாச் சொல்லுறன் எண்டு நினைக்கிறியா அம்மா?'

'இல்லை. நீ சிந்திச்ச அளவுக்குக்கூட நான் சிந்திக்காமல் இருந்திட்டன் எண்டது எனக்கு இப்ப கவலையாகவும் வெட்கமாகவும் இருக்குது.'

'சிலவேளை நீ வேலை செய்தா அப்பா ஒரு வேலை மட்டும் தான் செய்வாரா? அப்பிடிச் செய்தார் எண்டா அவருக்கு அதிகம் அலுப்பு இருக்காது. அதால வாற சண்டையும் வராது. நான் சொல் லுறது சரியா?'

'ம்... நீ சொல்லுறது சரி.'

'எதையும் நாங்கள்தானே முயற்சி செய்து பார்க்கோணும். எனக்கு ஹோமோன் behandling (சிகிச்சை) செய்யோணும். அதுக்கெல்லாம் அப்பா உதவி செய்வார் எண்டு எனக்கு நம்பிக்கையில்லை.'

'நீ அதைப்பற்றிக் கவலைப்படாத. நான் பிள்ளைக்கு அதெல்லாம் ஒழுங்கு செய்து தருவன்.'

அடுத்த நாள் கமலினி NAVக்குச் சென்று தனக்கு வேலை வேண்டும் என்று பதிந்தாள். அவளின் மொழித்திறன் அவர்களை சற்று ஆச்சரியத்தில் ஆழ்த்தி இருந்ததைக் கண்டுகொண்டாள். இணையத்தில் தேடி ஒரு வேலை கண்டுபிடித்தாள். அதில் இருந்த அந்தக் கடையின் முகவரியை எடுத்துக் கொண்டாள். அவர்களிடம் உதவி செய்யுமாறு கேட்டபோது தொலைபேசியில் தொடர்பு கொண்டுவிட்டு, அந்தக் கடைக்கு நேரே போய்க் கதைக்குமாறு கூறினார்கள். கமலினியும் அந்த Spar என்னும் கடைக்குச் சென்று கதைத்தாள். அவர்களுக்கும் அவளது மொழிப்புலமை பிடித்துக்கொள்ள, மறுகிழமையில் இருந்து வேலைக்கு வருமாறு கூறியிருந்தார்கள். அது அவளைப் பெரும் வியப்பில் ஆழ்த்தியது.

அன்று வீட்டிற்குத் திரும்பிவந்து சுமியிடம் அதைச் சொல்ல, 'உங்களுக்கு இருக்கிற திறமைக்கு நீங்க ஏதாவது படிச்சுப் போட்டு நல்ல வேலை செய்யலாம் அம்மா' என்றாள். 'எதுக்கும் முதல்ல கொஞ்ச நாளைக்கு கடையில வேலை செய்து erfaring (அநுபவம்) எடுங்க, பிறகு யோசிக்கலாம்' என்று அதைத் திருத்தினாள். கமலினிக்கும் அது சரியாகப்பட்டது.

அன்று வேலையால் வந்த கரனிடம், கமலினி தனக்கு வேலை கிடைத்திருப்பது பற்றிக் கூறினாள். அவன் முகம் கறுத்துப் போயிற்று. பின் வேண்டா வெறுப்பாக, 'உனக்கு என்னத்துக்கு இப்ப வேலை? இவை இரண்டு பேரையும் யார் பார்க்கிறது?' என்றான்.

'உங்களுக்கு அவை இன்னும் பேபியள் எண்ட நினைப்பு. அவங்கள் பெரிய ஆள்கள் ஆகீட்டினம். அவை இனி தங்கட பாட்டை தாங்களே பாப்பினம். நான் ஒரு வேலைதானே செய்யப் போறன். மிச்ச நேரம் வீட்டில நிற்பன்' என்றாள்.

'சரி... ஏதோ செய்,' என்று கூறிக் கொட்டாவி விட்டவன் தனக்கு நித்திரை வருவதாகக் கூறிவிட்டுப் போய் படுத்துக் கொண்டான்.

அன்று சுவேகா வீட்டிற்கு வந்திருந்தாள். கமலினியும் கரனும் வேலைக்குச் சென்று விட்டனர். சுந்தர் விளையாடுவதற்காய்த் தனது சிநேகிதி வீட்டிற்குச் சென்று விட்டான்.

அமைதியும் தனிமையும் அந்தரங்க மொழியில் பேசிக் கொண்டு இருந்தன. சகமனிதனின் பிரசன்னத்திற்காய் எப்போதும் ஏங்கும் மனித உள்ளங்கள், சில நேரங்களில் மட்டும் சகமனிதர் களில் இருந்து பிரிந்தோட எண்ணும் உணர்வைத் தோற்றுவிக்கும் அந்தரங்க எண்ணங்களின் புரட்சியில் சிக்கித் தவிக்கும். அதனால் பிரசவிக்கும் தனிமையின் மேலான வலுவான ஆசைகள்.

சுமிதாவின் அறையில் இருந்த சோபாவில் சுவேகா வந்து இருந்தாள். அது இரவில் படுக்கையாகவும் பகலில் சோபாவாகவும் பாவிக்கக் கூடியது. ஒரு கணம் சுமிதாவை அவள் பார்த்தாள்.

காந்தங்களான அவள் கண்களில் இருந்து பாய்ந்த பார்வை, கதிர்வீச்சாய் இதயத்தில் இறங்கிய ஒரு இன்ப வேதனையில் அவள் தடுமாறினாள். அழகிய பிரவுன் நிறம். கருநாகமான கற்றை முடி மார்பைத் தாண்டாத வளர்ச்சியோடு துண்டிக்கப்பட்ட கோலம். அழகிய மெல்லிய மேலிதழின் நளினம். சிறிது தடித்த கீழ் உதட்டின் சுழிப்பு. சரையான மணியோடு சாந்தம் பாடும் காதணிகள். சிறிதாகத் தெத்தி இருக்கும் வெட்டுப் பற்கள். கூரிய கிளிமூக்கு. அழகில் மயங்கிய சுவேகா தன்னை மறந்தவளாய் 'கள்வெறி கொள்ளுதடி' என்றாள்.

'என்ன?' என்றாள் சுமிதா.

'எங்க உதையெல்லாம் பொறுக்கினா?'

'எங்கையோ பொறுக்கினன். நான் சொன்ன வசனத்தைப் பார். அதை எங்க இருந்து கொண்டு வந்திருக்கிறன் எண்டதை விட்டிட்டு எதைக் கொண்டு வந்திருக்கிறன் எண்டு பார்.'

சுமிதா ஒருமுறை கண்ணை மூடிக்கொண்டாள். பின்பு அகலத் திறந்து சுவேகாவைப் பார்த்தாள். அவளது பார்வையில் எப்போதும் ஒரு புன்னகை தவழும். அது தன்னிடம் வந்து கரைந்து விடு என ஓயாது இரகசியத் தூதுவிடுவதாய் இருக்கும். அரையாக வெட்டிச் சுருட்டப்பட்ட அவள் கருமுடி கைகோர்த்து அளையும் காதலை உண்டு பண்ணும். இறுக்கமான அவள் அங்கங்கள். பெண்ணாக, ஆணாக, எல்லோரையும் பித்துக் கொள்ள வைக்கும் ஒன்றாகும். சுமிதா அவளைத் தொடர்ந்தும் பார்த்தாள். ஏதோ ஒரு உணர்வு அவளை இறுக அணைத்துக் கொள்ளுமாறு இடைவிடாது துரத்துவதாய் இருந்தது. ஏதோ ஒருவித அடங்காத மோகம் அதே கள் வெறி கொள்ள வைக்கும். சுமிதா சுவேகாவை இமை கொட்டாது ஊன்றிப் பார்த்தாள்.

'என்ன சுமிதா பேசாமல் நிக்கிறா' என்றாள் சுவேகா இப் போது.

'உன்னப் பார்த்தா இப்ப எனக்குப் பேச்சு வருகுதில்லை. ஏதோ ஏதோ உணர்ச்சிகள் மாத்திரம் மனதுக்குள் சிறகடித்துப் பறந்து என்னை எங்கெல்லாமோ இழுத்துச் செல்லுது. நானும் நீயும் பார்ப்பதில் அப்படியொரு பீலிங் ஏன்தான் வரவேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை? பெடியளுக்குப் பின்னால் திரியவேண்டிய வயசு இது. அதில் ஈடுபடாது நானும் நீயும் மாத்திரம் தனி அறையில் ஆளையாளைப் பார்த்துக் கொண்டு இருக்கிறம்! என்னில ஏதாவது பிழை?' என்றாள் சுமிதா.

'பிழையா? நீ என்ன அப்பா அம்மா மாதிரிக் கிழடுகளாட்டம் கதைக்கிறா? அவைதான் இங்கத்தே கலாசாரத்தைப் புரிஞ்சு கொள்ள முடியாமலும் மற்றவையின்ர உணர்ச்சிய மதிக்கத் தெரியாமலும் கதைப்பினம். நீயும் அப்பிடிக் கதைக்கிறதை என்னால் நம்ப முடியாமல் இருக்குது. பிழையா? எது பிழை? தனிமனிதனுக்கு இருக்கிற சுதந்திரத்தை அநுபவிக்கிறது பிழையா? அல்லது நான் நானாகவோ, நீ நீயாகவோ இருக்கிறது பிழையா? என்னுணர்ச்சி களை மற்றவைக்காகத் தியாகம் செய்யிறதோ அல்லது சமூகத் துக்காக மூடிமறைக்கிறதோ சரியெண்டு சொல்லுகிறாயா? நான் இப்பிடித்தான் படைக்கப்பட்டிருக்கிறேன். என் வாழ்க்கை இப்பிடித்

தான் இருக்கும். அதை நான் எதுக்காக மாற்றிக் கொள்ள வேண்டும்? யாருக்காக மாற்றிக் கொள்ள வேண்டும்? அப்பிடி அவர்கள் எதிர்பார்த்தால் அது நியாயம் எண்டு நினைக்கிறியா?' என்று முடித்தாள் சுவேகா.

'ஓகே. ஓகே. எனக்குத் தெரியும். என் வாழ்வின் சுதந்திரம் பற்றிப் புரியும். எனக்காகவே என் வாழ்வு என்பதும் விளங்கும். அதேவேளை என்னுடைய அப்பாவின் குணமும் உனக்குத் தெரியும். அதைப் பார்க்கிற போதுதான் ஒரே கலக்கமாக இருக்கிறது. அவரைப் பொறுத்தமட்டில் தன்னுடைய சுயகௌரவம்தான் முக்கியமாக இருக்கும். இப்பிடி ஏதாவது தெரிந்தால் அது ஒரு பரிதாபமான முடிவில்தான் போய் நிற்கும்' என்றாள் சுமிதா.

சுவேகா சுமிதாவுக்கு அருகில் வந்தாள். சுமியின் கையைப் பிடித்தாள். அது மென்மையாகத் தந்தியடித்துக் கொண்டு இருந்தது. சுமிதாவின் கண்களைப் பார்த்தாள் சுவேகா. சுமிதாவும் அவள் கண்களைப் பார்த்தாள். தாங்கமுடியாத ஒரு தவிப்பில் தன் கண்களை மூடிக் கொண்டாள்.

'இது வேதனையடி. இது தண்டனையடி. நாங்கள் ஏற்கனவே பெறும் தண்டனையைவிட இவர்களுக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்திருப்பது இன்னுமொரு மேலதிக தண்டனையடி.' கண்கள் மூடியிருக்க வெறுப்பில் வந்து விழுந்தன அந்த வசனங்கள். முகத்தில் பலவித உணர்ச்சிச் சுழிப்புகள்.

'சுமி கண்ணைத்திற' என்றாள் சுவேகா. சுமிதா கண்களைத் திறந்தாள்.

'கண்ணை மூடிக்கொண்டு நாங்கள் கனவு காணுவது தப்பு சுமிதா. இது எங்களுடைய வாழ்க்கை. நாங்கள்தான் அதை அநுபவித்து வாழவேண்டும். யாருக்காகவும் எதையும் விட்டுக் கொடுக்க முடியாது' என்றாள் சுவேகா.

'அதெல்லாம் புரியாது. ஆனா அப்பா இன்னும் கற்காலத் தமிழராய் இருக்கிறார். இந்தப் புது உலகத்தின் உணர்ச்சிகளை அவரால புரிந்துகொள்ள முடியுமா என்று எனக்குப் பயமாக இருக்கிறது சுவேகா,' என்றாள் சுமிதா.

'ஏன் அப்பா அப்பா எண்டு பாடுகிறாய்? நீயும் கிழடுகள் மாதிரிக் கதைச்சாய் எண்டா நான் வீட்ட போறன்.' சுவேகா கிறக்கத் தமிழில் இருந்து புழக்கத் தமிழுக்கு வந்தாள்.

'அப்பிடி இல்ல சுவேகா. யாரையும் வீணாகப் புண்படுத்தக் கூடாது எண்டு நினைக்கிறன்.' அவள் பதறியவளாய் சுவேகாவின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

சுவேகா சுமிதாவின் கண்களைக் குனிந்து கூர்மையாகப் பார்த்தாள். பின்பு, 'நீயொரு திடமான முடிவு எடு சுமிதா' என்றாள்.

'என்ன சொல்லுறா?' என்றாள் சுமிதா.

'எந்தப் பிரச்சனை வந்தாலும் நாங்கள் தைரியமாக அதைச் சந்திப்பம் எண்ட முடிவோட இருக்கோணும். உனக்கு அது இருக்குதா இல்லையா எண்டு தெரியேல்ல. பிரச்சனை எண்டு வந்தா எங்கட வாழ்க்கைக்குத்தான் நாங்கள் முக்கியம் கொடுக்கோணும் எண்டதில நீ தெளிவா இருக்கிறியா?'

'நான் சுயமாக எப்பவும் இருப்பன் சுவேகா. ஆனா அதை ஆறுதலா யாரையும் காயப்படுத்தாமல் சொல்ல வேணும், செய்ய வேணும் எண்டதிலயும் திடமா இருக்கிறன். அப்பா அம்மா இந்தப் பிரச்சனையை ஜீரணிக்கிறத்துக்கு கொஞ்சக்காலம் கொடுக் கோணும். அதுக்காகக் காத்திருக்கோணும். காத்திருப்பதில் சுகம் என்பார்களே, அதை அநுபவத்திலயும் அறியோணும்.'

'ம்... நீ சொல்லுறதில ஒருவித ஞாயம் இருந்தாலும் எந்தச் சந்தர்ப்பத்திலயும் நாங்கள் எங்களை எதற்காகவும் இழக்கேலாது.'

'ம்... நிச்சயமா. அது சரி உனக்குப் பயம் இல்லை எண்டுறியே? எங்கட விசயம் வெளியால தெரியேக்க எவ்வளவு நக்கலும் நளிப்பும் வரும் எண்டு உனக்குத் தெரியுமே? உந்தத் தமிழ்ப் பெடியள் எல்லாம் என்ன கதைப்பினம் எண்டு நினைச்சுப் பார்த்தியா?'

'I dont care. நல்லாக் கதைக்கட்டும். ம்.... நாங்கள் என்ன செய்ய முடியும்? ஆனா நாங்கள் நாங்களா இருப்பம். கொஞ்ச நாள்களில் அவங்கள் ஓய்ஞ்சு போவாங்கள்.'

'ம்... நீ சொல்லுறது சரி. ஆனா கொஞ்ச காலத்துக்கு பெரிய வேதனையா இருக்கும்.'

'நாங்கள் மற்றவையைப் பற்றி நினைச்சுக்கொண்டு இருந்தம் எண்டா அது வேதனையா இருக்கும். கண்டுகொள்ளாமல் போய்க் கொண்டு இருந்தா ஆருக்கும் வேதனை இல்லை?'

'ஒவ்வொரு மனிசரும் வித்தியாசமானவை. அப்பிடித்தான் அவையின்ர மனசும் வித்தியாசமானது. அதன் மாற்றங்களும் வித்தியாசமானது. உனக்கும் எனக்கும் உணர்ச்சிகள் ஒரே பாதையில் இருந்தாலும் மனசின்ர மென்மையில் வித்தியாசம் இருக்குது. உன்னால தாங்கிற சோகத்தை என்னால தாங்க முடியாது. நீ தட்டிப் போட்டுப் போற விசயம்கூட எனக்கு பூதாகர மாக இருக்கும். என்ர நிம்மதியைத் திண்டு கை கழுவும். நான் சோகத்தில சுருண்டு போயிடுவன்.'

'ம்... உண்மை. அதில் எனக்கு மறுப்பு இல்லை.'

'எனக்கு நிறையக் காலம் வேணும். தம்பியின்ர பிரச்சனை வேற இருக்குது. என்ன நீ நெருக்கக் கூடாது.'

'தேவையில்லாமல் நெருக்க மாட்டன்.'

'தங்ஸ் சுவேகா.'

'You welcome.'

சுவேகா மெதுவாக சுமிதாவின் நெற்றியில் முத்தம் வைத்தாள். கீழே கதவு திறக்கும் சத்தம் கேட்டது.

ஆதவனின் கரம்பட்டு பனியென்னும் பெண்ணவள் ஊனை உருக்கி உடலை அழித்து தன் இருப்புத் தொலைத்தாள். அவளின் தியாகத்தில் விதவைக்கோலத்து பூமித்தாய் குமரிப் பெண்ணாய் உருவெடுத்தாள். அவள் வெள்ளாடை களைந்து, பச்சைப் பட்டணிந்து மலராகவும் இலையாகவும் எங்கும் குதூகலித்தாள். வண்ண வண்ண

மலர்களின் திடீர் வரவில் திகைத்துப் போய்விட்ட வசந்த காலத் தேனீக்கள் எத்தனை மாதுக்கள் என்கின்ற களிப்பில் எப்போதும் ஒயாத ரீங்காரத்தோடு தாவித்திரியும் செயல் கண்டு ஏங்கும் சில மனிதர்கள். துருவ நாட்டில் தோன்றி மறையும் ஒவ்வொரு காலத் துக்குமான வெறிகொண்ட மாற்றங்களின் விளைவுகள். குளிரைக் கண்டு வீடுகளுக்குள் முடங்கிக் கிடந்த மனிதர்களுக்கு சுதந்திரம் வந்ததான பெரும் கொண்டாட்டம். சூரியனின் கதிரை ஞான ஒளியாக எண்ணுபவர்களின் அதீத நடமாட்டம் எங்கும் ஆர்ப்பரிக்கும் அழகிய வசந்தகாலக் கோலங்கள்.

சுபா 'சாள்ஸ்' என்னும் தனது மகனை வாணவொகினில் (குழந்தைப் பிள்ளைகளை வைத்துத் தள்ளும் வண்டி) வைத்துத் தள்ளியவண்ணம் வந்துகொண்டு இருந்தாள். சாள்ஸ் என்பதை தனது பிள்ளைக்கு வைப்பதில் சுபாவுக்கு விருப்பம் இல்லாவிட்டாலும் கண்ணனின் பிடிவாதத்தால் அதை ஒத்துக் கொண்டாள். எப்போதும் தனது கணவனின் விருப்பத்திற்கு எதிராய்ப் போவதை அவள் விரும்பியது இல்லை.

சிறிது நேரத்தில் அவள் கமலினி வீட்டின் அழைப்பு மணியை அழுத்தினாள். பின்பு கதவு திறப்பதற்காய்க் காத்திருந்தாள். கமலினி 'யாராய் இருக்கும்?' என்கின்ற யோசனையோடு கதவைத் திறந்தாள். கூலிங் கிளாசோடு புன்னகை தவழ நின்ற சுபாவைப் பார்க்க நகைப்போடு கூடிய மகிழ்ச்சியாய் இருந்தது. உள்ளே வாணவொகினை ஏற்றுவதற்கு உதவி செய்த கமலினி சாள்சைத் தூக்கிக் கொள்ள, சுபா தனது ஷூவைக் கழற்றினாள். பின்பு அவனைத் தான் வேண்டிக் கொண்டாள்.

'நான் இவனை வெளியால கொண்டு வந்த நேரம் உங்கட ஞாபகம் வந்திச்சு. அதுதான் உங்கள ஒருக்காப் பார்த்திட்டுப் போவம் எண்டு வந்தன்,' என்றாள் சுபா.

'நான் இண்டைக்கு பகல் வேலைக்குப் போய் வந்ததால வெளியால வெளிக்கிடேல்ல.'

'ஓ வேலைக்குப் போய் வந்தா அலுப்பாத்தானே இருக்கும்? அண்டைக்கு அக்கா நான் ஒரு பார்ட்டிக்குப் போயிருந்தன். அப்ப

சுந்தரைப் பற்றிக் கதை அடிபட்டுது. எப்பிடி உந்தச் சனத்துக்குச் சுந்தரைப் பற்றித் தெரிஞ்சது?' என்றாள் சுபா.

'ஆரும் சொல்லி இருப்பினம். அவனே கனபேருக்குச் சொல்லி இருக்கிறான். சும்மா கிடக்கிற வாய்க்கு அவல் கிடைச்ச மாதிரித்தானே? உதுக்கெல்லாம் நாங்கள் கவலைப்படேலாது. எண்டாலும் சிலவேளை விஷராத்தான் இருக்கும்' என்றாள் கமலினி.

'அவையின்ர பெட்டையா பெடியா எண்ட வாதத்தில எனக்கே சரியான விஷர் வந்திட்டுது. நல்லகாலம் நீங்கள் அங்கே வராமல் விட்டது.'

'நாங்கள் வந்தா நேரே கதைக்க மாட்டாங்கள். எல்லாம் முதுகுக்குப் பின்னால கதைக்கிற கூட்டங்கள்.'

'நீங்கள் சொல்லுறது உண்மையக்கா. ஆரும் ஆள்கள் இல்லாத நேரத்திலதான் அவையப்பற்றிக் கதைப்பினம். ஆள்கள் நிண்டா முகத்துக்கு அஞ்சி வேசையாடுவினம். இது தமிழ் ஆள்களின்ர பரவணிக் குணம் மாதிரி. அதாலதான் இப்ப அழிஞ்சு போயிருக்கினம். ம்... அவையின்ர கதைய காதில போடாமல் இருக்கிறதுதான் அவைக்கு நல்ல பாடமா இருக்கும். கொஞ்ச நாளில வாயோஞ்சு போயிடுவினம்.'

'ம். நீ சொல்லுறது சரி. அவன் எப்பிடி இருக்கப் போறான் எண்டதில மிகவும் தெளிவாக இருக்கிறான். யார் என்ன கதைச்சாலும் நானோ அவனோ எதுக்கும் கவலைப்படப் போறேல்ல. ஏதாவது கதைச்சுப் போட்டுப் போகட்டும். சில சனத்துக்கு இதுதானே பொழுது போக்கு.'

'அதுதான் சரியக்கா.'

'சுமிதா வீட்டில நிக்கிறாளே?'

'இல்ல அவள் சுவேகா வீட்ட போட்டாள்.'

'எப்பிடியோ உங்களுக்குத் தொந்தரவாகத்தான் இருக்கப் போகுது.'

'நீ எதைச் சொல்லுறா சுபா?'

'எல்லாத்தையும்தான்.'

'சொல்ல வந்ததைச் சொல்லு சுபா. உனக்கும் என்னிட்ட பயமே?'

'அப்பிடி இல்லையக்கா. சும்மா பார்த்ததை வைத்துக் கொண்டு கதைக்கிறது சரியில்லைத்தானே?'

'அதில ஒரு பிரச்சனையும் இல்லை. நான் அப்பிடி நினைக்கவும் மாட்டன். நீ என்னத்தைப் பார்த்தா எண்டு சொல்லு சுபா.'

'வேண்டாம் அக்கா விடுங்கோ.'

'இல்லை சொல்லு சுபா. சொல்ல வந்துபோட்டு இடையில விடாத.'

'சரி அப்ப சொல்லுறன். பிறகு என்னில கோவிக்கக் கூடாது. நான் அண்டைக்கு ஒஸ்லோ சிற்றிக்குப் போய் இருந்தன். அப்ப சுமியையும் சுவேகாவையும் பார்த்தன். ஆனா அவை என்னக் காணேல்ல. கீழ இருந்த மெனிக்கடையில ஒரு பக்கத்தில ஏதோ பொருள்களைப் பார்த்துக்கொண்டு நிண்டவை. சரி கிட்டப் போய் ஹாய் சொல்லலாம் எண்டிட்டு, நான் இவனுக்குப் பால்மா பார்த்துக் கொண்டு நிண்டன். தொடக்கத்தில இருந்தே கையைப் பிடிச்சுக் கொண்டு இருந்தவை. இது சாதாரணம்தானே எண்டிட்டு நான் அந்தப் பெரிசா எடுத்துக்கொள்ளேல்ல. அவை தொடர்ந்தும் ஏதோ தங்களுக்குள்ள கதைச்சதில என்னைக் கவனிக்காமல் அதைச் செய்தீச்சினம். எனக்கு அது தூக்கி வாரிப் போட்ட மாதிரி இருந்திச்சுது.'

அவள் அத்தோடு நிறுத்தினாள். கமலினி எதுவும் பேசாது அவளாய்ச் சொல்லட்டும் எனக் காத்திருந்தாள். கமலினிக்கு அவை பெரும் அவஸ்தையான வாழ்வின் கணங்களாகின. இதயத்தை எறும்புகள் அரிப்பதான வேதனையில் அவள் அந்தரித்தாள். சுபா தன்னை மீண்டும் தயார் செய்துகொண்டு சொல்லத் தொடங்கினாள்.

'அவை இரண்டு பேரும் என்னைக் கவனிக்காமல் கிஸ் பண்ணிச்சினம் அக்கா. கையப்பிடிச்சா அதில தப்பில்ல. ஆனால் கிஸ் பண்ணினா என்ன அர்த்தம்? அதுவும் இங்கே புதுமை இல்லைத்தான். எண்டாலும் நாங்கள் கொஞ்சம் கவனமாக இருக்கோணும். இல்லாட்டிக் கண்டதுகளும் கண்ட மாதிரியெல்லே கதைச்சுக் கொண்டு திரியுங்கள்,' என்றாள்.

'உண்மைதான் சுபா. ஆனா அது அவையின்ர வாழ்க்கை. அப்பிடித்தான் ·வாழப் போறம் எண்டா நாங்கள் என்ன செய்ய முடியும்? அவையின்ர உணர்ச்சியும் வேதனையும் அவைக்குத்தானே தெரியும்? வைபோசா நாங்கள் எதையும் செய்யக்கூடாது. அது சரியில்லை. அதோட சட்டத்தை மீறுவதாயும் இருக்கும்' என்றாள் கமலினி.

'உண்மையாகவே நீங்கள் கிரேற் அக்கா. உங்கள மாதிரி எனக்கு ஒரு அம்மா இருந்திருக்கோணும்.'

அவளின் குரலில் மண்டிக் கிடந்த ஏக்கத்தின் காரம் பற்றி அவள் ஒருமுறை கமலினியிடம் சொல்லி இருந்தாள். தனது காதல் எப்படி அழிக்கப்பட்டது என்பதை சொல்லிச் சொல்லி அழுதிருக் கிறாள். அப்படிக் கதைத்தால் தான் ஒருவித நிம்மதி அடைந்ததாயும் அவள் கூறி இருந்தாள். அவளின் வாழ்வு வலுக்கட்டாயமாக ஏதோ ஒரு திசையில் திருப்பப்பட்டிருக்கிறது. இனி இதுதான் விதியென அவள் ஏற்றுக் கொண்டு வாழவேண்டியதாகிவிட்டது.

'நீ தியாகம் செய்த மாதிரி எங்கட பிள்ளைகள் இருக்க மாட்டினம். அப்பிடி எதிர்பார்க்கிறதும் சரியில்லை. அவர்கள் தங்கள் சுதந்திரத்தை தாங்கள் எடுத்துக்கொள்ளப் போகினம். ஏலும் எண்டால் ஒத்துழைப்பைச் செய்ய வேணும். அல்லது ஒதுங்கிப் போகவேணும். எதைச் செய்வது என்பது அவர்கள் விருப்பம். அதுக்கு ஒத்துழைப்பு வழங்குவதா இல்லையா என்பதே எங்களுக்கு கொடுக்கப்படுகிற சந்தர்ப்பம்' என்றாள் கமலினி.

'உண்மையக்கா. நீங்கள் சொல்லுறது சரி. என்ன கொஞ்சம் ஒரு மாதிரி இருக்கும்.'

'நான் அதைப்பற்றி எல்லாம் இனிக் கவலைப்படப் போறேல்ல சுபா.'

சுபா அத்தோடு கதையை மாற்ற முயன்றாள்.

'எப்பிடி வேலை போகுது அக்கா?'

'ஓ, அது நல்லாப் போகுது. ஓடர் பண்ணுறது, அதைச் சரிபார்க்கிற வேலை தந்திருக்கிறாங்கள். அவங்களுக்கு என்ன நல்லாப் பிடிச்சுக் கொண்டுது,' என்றாள் கமலினி.

'கொஞ்சகாலத்தில எப்பிடி உங்களால நொஸ்க் இப்பிடிக் கதைக்க முடிஞ்சுது எண்டு எனக்கு இப்பவும் அதிசயமா இருக்குது,' என்றாள் சுபா.

'அதுதான் படைப்பின் விசித்திரம். ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மாதிரி. அவன் அப்பிடி இருக்கிறானே எண்டு மற்றைய மனிதன் ஏங்குவதில எந்த அர்த்தமும் கிடையாது.'

'உண்மையக்கா. எனக்குச் சுட்டுப் போட்டாலும் நொஸ்க் வருகுதில்லை. எண்டாலும் நான் விடுகிறதாகவும் இல்லை.'

'குட்.'

பின்பு சிறிது நேரம் கதைத்துவிட்டு, தேநீரும் அருந்தியபின்பு சுபா சென்றுவிட்டாள்.

கமலினிக்கு சற்று யோசனையாக இருந்தது. என்றாலும் தானாகக் கேட்பது அழகில்லையென எண்ணியவள் அவளாய்ச் சொல்லும்வரை காத்திருப்பதாய் முடிவு செய்து கொண்டாள்.

**வெ**ளியே பார்வையின் தூரத்தைக் குறுக்கி, அடர்ந்த தரைதொட்டு நின்ற வெண்மேகங்களின் திடீர் ஆக்கிரமிப்பு பிரமிப்பைத் தந்தது. திடீரென மேகத்திற்கு பூமிமீது காதல் மோகம் வந்துவிட, அவசரத்தில் ஓடிவந்து இறங்கி பின் திரும்பி மேலே

போக விரும்பாத கோலத்தில் அது இருந்தது. இயற்கை அழகானது. கவலையில்லா மனிதன் பார்த்து பிரமிக்கக்கூடியது. வேதனைகளும் கவலைகளும் அழுத்தும் போது எதுவுமே இரசிப்பதில்லை. கமலினிக்குப் பூமிமேல் மோகம் கொண்ட மேகத்தை இரசிக்கும் மனநிலை இல்லை. கமலினி சோபாவில் இருந்தவண்ணம் எங்கோ சஞ்சரித்தாள். பாடசாலையால் வந்த சுமிதா இதைப் பார்த்துவிட்டு, 'எந்தக் கப்பல் கவுண்டு போச்செண்டு இப்பிடி இருக்கிறா?' என்றாள்.

வாழ்க்கை என்கின்ற கப்பல் எப்போது தாழும் என்பதை எவரும் ஊகித்துவிட முடிவதில்லை. ஒன்று நினைக்க ஒன்று நடக்கும் விபத்துக்கள்தானே வாழ்க்கை. அதிலே சிந்தனையோடு கூடின தேடல்தானே உயிர்ப்பு. அந்தத் தேடல்கள் சில மனிதருக்கு மனித வாழ்வின் மறுபக்கத்தைத் திறந்து. காட்டும் சாவியாகிவிடும். தேடல் அற்ற மனித வாழ்வில் எந்த சுவாரசியம் இருக்கும் என்பது எனக்குப் புரியவில்லை' என்றாள் கமலினி.

'அந்தத் தேடலால்தான் மனிதன் உயிர்ப்புடன் வாழுகிறான் எண்டு சொல்லுகிறாயா அம்மா?' என்றாள் சுமிதா நொஸ்க்கில்.

'அப்படித்தான் இருக்க வேண்டும். எதிலும் எப்போதும் மனிதனுக்குத் தேடல் உண்டு. அவனை மிருகத்தில் இருந்து மாறுபட வைத்ததே அந்தத் தேடலாகத்தான் இருக்க வேண்டும். அது இல்லா விட்டால் மனிதன் வாழ்வதாய் அர்த்தப்படாது என்பதும் உண்மை யாகத்தான் இருக்கும். என்றாலும் அதே தேடல் சில வேளைகளில் அவனைத் தேவையில்லா சிக்கல்களிலும் மாட்டி விடுகிறது இல்லையா?'

'என்னம்மா சொல்ல வாறா?'

'எதையும் குறிப்பாக இல்லையம்மா...பொதுவாகவே சொல் லுறன். தேடல்கள் சிலவேளை உண்மைகளைச் சென்றடையும். அந்த உண்மைகளை உலகம் சிலவேளை ஏற்க மறுக்கும். பூமி உருண்டை என்பதைத் துணிவாக முதலில் கூறிய கலிலியோவுக்குக் கிடைத்த பரிசு சிறைச்சாலை. உண்மையை ஏற்க மறுத்து தண்டனை

வழங்கிய உலகம் இது. அப்போது தேடலின் உண்மை, காரணங்கள் இன்றி நிராகரிக்கப்படும். கண்மூடித்தனமான தண்டனையும் தரப்படும்.'

'எனக்கு நீ ஆழமாத் தமிழ் கதைச்சா விளங்காது அம்மா. இயலுமானவரை முயன்று பார்க்கிறேன்.'

'எனக்கு நீ ஆழமா நொஸ்க் கதைச்சா விளங்காதம்மா.'

'நீ ஏதோ சொல்லவாறாய் இல்லையா அம்மா.'

'ம்... தாயும் மகளுமாய் இருந்தே உன் மொழி எனக்கும் என் மொழி உனக்கும் புரியவில்லை பார்த்தியா?'

'நீ என்ன சொல்லவாறா அம்மா? அது யாற்ற பிழையம்மா? நீ வாழ்ந்த சமுதாயம் வேறு. அதன் மொழி வேறு. நாங்கள் வாழ்கிற சமுதாயம் வேறு. அதன் மொழி வேறு. நானும் நீயும் உருவத்தால் மாத்திரம்தான் ஒன்றாய் இருப்பதாக இருக்கிறது. மற்றும்படி நீங்கள் பயணிக்கிற திசைக்கும் நாங்கள் பயணிக்கிற திசைக்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. உனக்கு நிச்சயம் இது புரியுது இல்லையா அம்மா? '

'ம்... எங்கட விழுமியங்கள் எல்லாம் இத்துப் போறதா நான் கவலைப்படேல்ல. அது புதிய பரிணாமம் எடுப்பதாய்த்தான் நினைக்கிறன். அந்தப் பரிணாம மாற்றத்தில் ஏற்படும் வேதனையை சிலவேளைகளில் தாங்க முடியாது இருக்கிறது. இதுக்கு யாரைப் பிழை சொல்ல முடியும்? பிழை சொல்லுவதால் மட்டும் என்ன பிரயோசனம் உண்டாகும்?'

'நீ விட்டா தமிழில பிரசங்கம் செய்வாய். எனக்குத்தான் ஒண்டும் விளங்காது. அது சரி, நீ என்னத்தை தேடுகிறாய் அம்மா?'

'எதைத் தேடமுடியும்? தொலைஞ்சதைத்தானே தேடமுடியும். அல்லது புதிய ஒரு பரிணாமத்தை தேடலாம்... ஒரு நட்பைத் தேடலாம்.'

சுமிதா கோணலாகச் சிரித்தவண்ணம், 'நட்பு தேடுறியா அம்மா? எப்பிடியான நட்பு தேடுறா? நாங்கள் எல்லாம் உனக்கு நட்பாகத் தெரியேல்லையா அம்மா?' என்றாள்.

'நான் நட்பா உனக்கு?'

'ம்... நட்பு மாதிரி, அம்மா மாதிரி.... ஆனால் எல்லாத்தையும் கொட்டித் தீர்க்கிற நட்புக்கும் உனக்கும் கொஞ்சம் வித்தியாசம் இருக்கம்மா.'

'ஏன் அப்பிடி?'

'அதை நீதான் சொல்லோணும். நீதானே என்னை வளர்த்தா?'

'ம்... நான் ஒருவகையில அவமானப்படவேணும் இல்லையா? பிள்ளையோட நட்பாய் இருக்க முடியாதது ஒரு வகையில எங்களின் அறிவீனத்தைக் காட்டுதில்லையா?'

'சும்மா இரம்மா. நீ நல்ல பிறண்ஸ்தான். அதுக்காக உன்னால எங்கட வயசுக்கு மாற முடியுமே? நட்பு எண்டுறதுக்கு வயது போல நிறைய விஷயங்கள் தோதா இருக்கோணும் இல்லையா?'

'என்ன விசயங்கள் வேற தோதா இருக்கோணும்? நானும் அறிஞ்சா நல்லதெல்லே.'

'ம்... அம்மா ஏதாவது கேட்கோணும் எண்டா நேரடியாகக் கேளுங்கோ. நீங்கள் ஏதோ சுத்தி வளைக்கிறமாதிரி இருக்குது எனக்கு.'

'கேட்டுச் சொல்லுறது நட்பில்லையம்மா. நீயாச் சொன்னா அது நட்பு. நான் கேட்டு நீ அதைச் சொன்னா அதில அதிகாரம் ஒளிஞ்சு நிற்கும். சரி நான் சாப்பாடு போடுறன் நீ சாப்பிடு.'

போட்டுக் கொடுத்த சாப்பாட்டைப் பிசைந்தபடி ஏதோ யோசித்த சுமிதா, 'நீங்கள் வாழ்ந்ததுக்கும் நாங்கள் வாழுறத்துக்கும் இடையில நிறைய வித்தியாசம் இருக்குது அம்மா. சிலவேளை நான் சொல்லுறதை நீங்கள் விளங்கிக் கொள்ள மாட்டியள் எண்ட நினைப்புத்தான் என்னிட்ட இதுவரைக்கும் இருந்தது. அப்பாவைப் பாரம்மா.... அவர் இப்பவும் யாழ்ப்பாணத்தில சீவிக்கிறம் எண்ட நினைப்பில இருக்கிறமாதிரி இருக்குது. நீ பறவாய் இல்லை. எண்டாலும் உனக்கும் ஏற்கனவே சுந்தராலே ஆயிரம் கவலை. அதோட நானும் உன்னைக் கவலைப்படுத்தோணும் எண்டு

விரும்பேல்ல. ஆனா ஆராவது எங்களைப் பார்த்ததா வந்து சொல்லி இருப்பினம் எண்டு தெரியும். சுவேகா அண்டைக்கு சுபா மாமிதான் அதால போனவ எண்டு சொன்னவள். நீ தெரிஞ்சதாலதானே இப்படிச் சுத்தி வளைச்சுக் கேட்கிறா.'

கமலினிக்கு போலிஸிடம் பிடிபட்ட கள்ளனின் நிலை. பேசாமல் நின்றாள்.

'சுபா மாமி சொன்னவாவே?' எனச் சுமிதா கேட்டாள்.

'யார் சொல்லுறது பற்றியும் எனக்குக் கவலையில்லை. நீ என்ன சொல்லுறா எண்டுறதுதான் எனக்கு முக்கியம்.'

'உண்மைகளை ஒருநாளும் மறைக்க முடியாதுதானே அம்மா.'

'ம்... நிச்சயமா.'

'சுந்தர்ற பிரச்சனையோட இதுவும் உனக்குப் பெரிய தலையிடியா இருக்கும் எண்டு நினைச்சுப் போட்டு ஆறுதலாச் சொல்ல வேணும் எண்டு இருந்தன். தப்பு எண்டு நினைக்கிறீயா?'

'நான் அப்பிடி நினைக்கேல்ல. நீ எப்பிடிப் பீல் பண்ணுறா எண்டுறது உன்ர சுதந்திரம். இதையெல்லாம் யாரும் மாத்தேலாது எண்டதை விளங்கேலாத அளவுக்கு நான் ஒண்டும் டொச்சுக் காலம் இல்லை. நீ கவனமா இருக்கோணும். காய்ச்ச மரம் கல்லடி படும் எண்டுவினம்... எங்கட சனங்களைப் பற்றித் தெரியும்தானே? நோர்வேல வாழ்ந்தாலும் யாழ்ப்பாணத்துப் புத்தி மாறாத சனங்கள். என்னதான் நடந்தாலும் இந்த அம்மா உங்கள உங்கட விருப்பத் திற்கு எதிரா இருக்க கட்டாயப்படுத்தமாட்டன். அந்த அளவுக்கு புரிந்துணர்வு இல்லாதவள் இல்லை நான். அதே நேரம் உங்கட பாதுகாப்பும் எனக்கு முக்கியம்.'

'அது எனக்குத் தெரியும் அம்மா. உனக்கு கொஞ்சம் அவகாசம் கிடைக்கட்டும் எண்டுதான் நான் சொல்லேல்ல. அதைவிட அப்பாவின்ர குணத்தை நினைச்சாலும் எனக்கு நிம்மதி வாறேல்ல.'

'அது சரி, சுவேகாவின்ர அம்மா ஒண்டும் சொல்லேல் லையே?' என்றாள் கமலினி.

'அவவுக்கும் இது தெரியும். ஆனா அவ ஒண்டும் இதைப் பற்றிக் கதைக்கிறேல்ல. அவவுக்கு இப்பவும் சுவேகாவின்ர அப்பாவைப் பற்றின கவலைதான். மற்றும்படி தனிமனித உணர்ச்சி களுக்கு குறுக்காக நான் வரமாட்டன் எண்டு சொல்லி இருக்கிறா. இழப்பைப் பற்றிய வலி அவவுக்கு நல்லாவே புரியும். எந்த ஒரு சிறு இழப்பும் மற்றவைக்கு வரக்கூடாது எண்டு நினைக்கிற பண்பு அவவிட்ட இருக்குது.

கமலினிக்கு சுவேகாவின் அம்மாவின் சோக வரலாறு ஒருமுறை ஞாபகம் வந்தது.

சுவேகாவின் அப்பா புளோட்டில் (PLOT) சேர்ந்து இந்தியாவில் பயிற்சி எடுத்துவிட்டு பின்பு விலகி வந்து திருமணம் செய்து கொண்டு மல்லாவியில் வசித்து வந்தார். திடீரென ஒரு நாள் புலிகள் வந்து விசாரணைக்காக அவரை அழைத்துச் சென்றார்கள். சுவேகா அப்போது வயிற்றில் கருவுற்று இருந்தாளாம். என்ன அழுது கூத்தாடியும் அவர்கள் மசியாது அவரை இழுத்துச் சென்று விட்டார்கள். பின்பு அவர் வருவார் வருவார் எனப் பலமாதங்கள் காத்திருந்தும் பலனில்லாது போய்விட்டது. அவரை ஒருமுறைகூட அவர்கள் உயிருடன் காட்டவில்லையாம். பின்பு மகப்பேற்றுக்காய் கொழும்பிற்குத் தப்பி வந்த சுவேகாவின் அம்மாவை கனடாவிற்கு எடுப்பதற்கு அவரது உறவினர் உதவி செய்ய, அந்தப் பயணம் திசைமாறி அவர் சுவேகாவுடன் நோர்வேயில் வந்து குடியேற வேண்டியதாகிவிட்டது.

சில காலத்திற்குப் பின்பு புலியில் இருந்து விலகி வந்த உறவினன் ஒருவன் அவரைப் புலிகள் கொலைசெய்து எரித்துவிட்ட செய்தி அறிவித்தபோது சுவேகாவின் அம்மா மயங்கி விழுந்து. சில நாள்கள் உல்லவோல் ஹொஸ்பிற்றலில் பிசத்திக்கொண்டு இருந்தாராம். இன்றும் மறைந்த கணவனின் ஞாபகத்தோடு சுவேகாவுடன் தனித்து வாழும் அவளது அம்மாவின் சோகத்தை எப்படி இயம்ப முடியும் எனக் கமலினிக்குப் புரியவில்லை. நீதிக்குப் புறம்பாகத் தண்டனை கொடுத்தவர்களுக்குத் தண்டனை கொடுக்க இந்த உலகில் யாரும் இருப்பதாய்த் தெரியவில்லை என்பது இன்றும் அந்தப் பெண்ணின் சோகமாகத் தொடர்கிறது.

'என்னம்மா திடீர் யோசினை?'

'ச்... சுவேகாவின்ர அம்மாவைப் பற்றி யோசிச்சன். யாருடைய தனிமனித உணர்ச்சியையும் கொச்சப்படுத்தற அளவுக்கு தரம் இறங்கி எனக்குப் போகத் தெரியாது. நீ உன்ர விருப்பப்படி நடக்கலாம். என்ன பிறண்சா நினைச்சு உன்னுடைய பிரச்சனைகளை கதைக்க வேணும் எண்டாக் கதைக்கலாம். எனக்கு அதில எந்த ஆட்சேபணையும் கிடையாது. என்னாலான அனைத்து உதவியையும் செய்வன். எண்டாலும் அப்பாவ நினைக்க எனக்கும் ஒருவித கலக்கமாகத்தான் இருக்குது. எப்பிடி இருந்தாலும் அவரும் இதைச் சந்திக்கத்தான் வேணும். உண்மையைப் புரிஞ்சுகொண்டு மேற்கொண்டு வாழ்க்கையை நடத்தோணும்.'

'ஐயோ அம்மா. அவருக்கு இப்ப உது தெரிய வேண்டாம். தெரிஞ்சா திண்டு கை கழுவிப் போடுவார்.'

'இல்ல சுமிதா. மொட்டாக்கு போட்டுக்கொண்டு உலகம் மறைஞ்சு போச்சுது எண்டு கனவு காணக்கூடாது. எண்டைக்கோ இது தெரியவரும். யாரும் சொல்லித் தெரியவந்து குதிக்கிறதிலும் நாங்களே சொல்லித் தெரியட்டும்.'

'நீ ஏதாவது முடிவெடுத்தா யோசிச்சுத்தான் எடுப்பா. சரி செய்யம்மா... என்ன நடக்குதெண்டு பாப்பம்.'

# 5

மீண்டும் நிகழ்காலத்திற்கு...

நீனா இப்போது அதீத கவனமாய் இருந்து வருகிறாள். கதவு திறப்பதற்கு மூன்று நிமிடங்களாவது பிடிக்கிறது. சுமி கீழே இருந்து போன் செய்துவிட்டு வந்தால்கூட கதவு ஓட்டையால் பார்க்காது கதவைத் திறப்பதற்கு மறுக்கிறாள். இப்போது கதவுக்கு முதல் இருந்த சங்கிலியைவிட இன்னுமொரு சங்கிலி பொருத்தி வைத்திருந்தாள். எதற்கும் தான் முதலில் மிகவும் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்பதை அவள் நன்கு உணர்ந்து வைத்து இருந்தாள். இவ்வதீத பாதுகாப்பு ஏற்பாடு கண்ணுக்குத் தெரியாத சிறையொன்றை தன்னைச் சுற்றிக் கட்டிவிட்ட அந்தரிப்பை அவளுக்கு இடைக் கிடையே உண்டாக்கும் என்றாலும் அவற்றை மென்று சீரணித்து நாள்களை ஓட்டினாள்.

இன்று வேலைக்குப் போய்விட்டு வரும்போது மனது ஏனோ சோர்ந்துபோய் இருந்தது. வெய்யில் என்றால் என்ன, மழையென்றால் என்ன வேலைக்கு நிற்க வேண்டி உள்ளது. National Theatre இல் வந்து இறங்கியவளுக்கு அந்தப் புழுக்கம் இன்னும் அதிகரித்தது. சிக்னல் பிழையால் எல்லாத்

தோவாணும் ஸ்தம்பித்துப் போய் நின்றன. சலித்துக்கொண்டே சென்று ஏறமுடியாது மனிதர்கள் முண்டியடிக்கும் பஸ்ஸில் இடிபட்டு ஏறிக் கொண்டாள்.

ஒருவாறு வீடு வரும்போது ஐந்து மணி ஆகி இருந்தது. மாடிப்படியால் மேலே ஏறிப் போக முதலில் நினைத்தவள் தனக்கு இருந்த களைப்பின் உச்சத்தில் அந்த எண்ணத்தைக் கைவிட்டு லிப்ற்றில் ஏறினாள். நல்லவேளையாக யாரும் உள்ளே இருக்க வில்லை. அது அவளுக்கு சற்று சுதந்திரத்தைத் தந்ததாக எண்ணிய போதே இரண்டாவது எண்ணின் மின் விளக்கு எரிந்தது. நீனா சற்று உள்ளே ஒதுங்கி நின்று கொண்டாள். லிப்ற் கதவு திறந்தது. யாரோ வருகிறார்கள் என்றுவிட்டு நீனா வழமைபோல அசண்டையாக நின்றாள்.

உள்ளே அந்த உருவம் திடீரெனப் பாய்ந்தது. நீனா பேயைக் கண்டவளாகத் திகைத்துப் போய்விட்டாள். தன்னை அறியாது விரைவாக ஒரு மூலைக்குள் முதலில் ஒதுங்கிக் கொண்டாள். லிப்ற் ஒரு உந்தலுடன் மேல்நோக்கிப் புறப்பட்டது. பாய்ந்த உருவம் முகத்திற்கு நீல நிறத்தில் Finlandshette எனப்படும் முகமூடி அணிந்திருந்தது. உடல் பூராக மறையும் நீலநிற முழு அங்கி அணிந்து இருந்தது. அந்த அங்கிக்குள் மறைத்து வைத்திருந்த கத்தியை திடீரென வெளியே எடுத்தது. நீனா முதலில் மலைத்துப் போய் நின்றாள். பின்பு நிலைமையைப் புரிந்து கொண்டு உசாராகினாள். வாழ்வா சாவா என்கின்ற போராட்டத்திற்கு அவள் தயாரானாள். மெதுவாக பைக்குள் கையை வைத்து பெப்பர் ஸ்பிறேயை அந்த உருவம் அறியாவண்ணம் கடுகதியாகப் பற்றிக் கொண்டாள். உருவம் முன்னேறி வந்தது. முழுவீச்சுக் கொண்டு கத்தியைச் சடாரென இறுக்கியது. நீனா திடீரென விலகினாள். கத்தி அவள் தோள்மூட்டில் இறங்க மறுகையில் வைத்திருந்த பெப்பர் ஸ்பிறேயை உருவத்தின் கண்ணிற்குள் அடித்தாள். அவள் அப்படி அடிக்கும் போதே லிப்ற் நின்று கதவு திறந்தது. கத்தியோடு முகத்தைப் பிறாண்டியவண்ணம் தள்ளாடி வரும் உருவத்தைக் கண்டு லிப்ற்றுக்கு நின்றவர்கள் பயந்து வழிவிட்டனர். பின்பு

நீனாவைக் கவனித்துவிட்டு ஒரு பெண்மணி அவளது காயத்தை அழுத்திப் பிடித்து இரத்தப் போக்கைக் கட்டுப்படுத்த முயற்சி செய்தாள். வேறு ஒருவர் அம்புலன்சுக்குப் போன் செய்தார்.

சிறிது நேரத்தில் அம்புலஸ் வந்தது. அதைத் தொடர்ந்து போலிஸ் வந்தது. நீனாவை அம்புலன்ஸில் ஏற்றிவிட்டு அங்கு நின்றவர்களிடம் போலிஸ் என்ன நடந்தது என்பதை விவரமாகக் கேட்டு எழுதிக் கொண்டிருந்தது. ஒஸ்லோ போலிசுக்கு இன்னொரு தலைவலி ஒன்று கூடியது போன்று இருந்தது. கற்பழிப்பு, கொலை, இப்பொழுது கொலை முயற்சி எனப் பட்டியல் நீண்டு சென்றது. 'என்ன நடக்கிறது இந்தத் தமிழருக்குள்ளே?' என எண்ணிச் சலித்துக் கொண்டார்கள். கற்பழிப்புப் பிரச்சனையை இலகுவாகத் தீர்த்துக் கொள்ளக்கூடியதாக இருந்தாலும் இந்தக் கொலை முயற்சி, ஏற்கனவே லதா என்கின்ற பெண்ணின் கொலை என்பன சம் பந்தமாக இன்னும் எந்தத் துப்பும் கிடையாது விசாரணை கிடப்பில் இருப்பது அவர்களின் ரென்சனைக் கூட்டி இருந்தது.

போலிஸார் அதிக நேரமாக அங்கு நின்று விசாரித்தார்கள். பின்பு சிலரை மீண்டும் தொடர்பு கொள்வதாய் கூறித் திரும்பிச் சென்றார்கள். அந்தச் சிலரின் உதவியோடு ஒருசில நாட்களில் அந்த உருவம் எப்படி இருந்தது என்பதை வரைந்து எடுத்துக் கொண்டார்கள். பின்பு அந்தப் படத்தைப் பார்த்து மேலும் சோர்ந்து போனார்கள்.

மீண்டும் கடந்த காலத்தில்...

மேகம் என்னும் ஆடை விலகிப் போக நிர்வாணமாக நின்ற சூரியனைப் பார்க்க கண் கூசியது. ஆதவனின் அண்மிய வரவில் அனல் பற்றிக்கொண்ட மரவீடுகள் உள்ளே வைத்திருக்கும் வெப்பத்தை வெளியே விடத் தெரியாத சுண்ணாம்புப்பாறைகளாக கொதித்துக் கொண்டு இருந்தன.

குளிரைத் தாங்குவதற்காகக் கட்டப்பட்ட இந்த வீடுகள் காலமாற்றத்தைப் பற்றிக் கவலைப்படாது அவற்றின் பணியைச் செய்கின்றன. சிலவேளை அந்த வெப்பம் பாண் போறணைகளை ஞாபகப்படுத்துகிறது. என்னதான் யன்னல்களைத் திறந்து சுற்றி ஓடினாலும் அதன் காட்டம் குறைவதில்லை. சுமிதா வழமைபோல இன்றும் சுவேகாவிடம் சென்றுவிட்டாள். சுந்தரும் யாரோ சிநேகிதி வீட்டிற்குச் செல்வதாய்க் கூறிவிட்டு வெளியே போய்விட்டான். எப்படி என்றாலும் ஐந்துமணிக்கு அவர்கள் வந்துவிடுவார்கள். அப்போது Grilling (Barbecue) போட்டால் நல்லாய் இருக்கும் எனக் கமலினி நினைத்துக் கொண்டாள்.

அதற்குத் தேவையான பொருள்களைக் கொள்முதல் செய்வதற்காய் அருகில் உள்ள கடைக்குச் சென்றாள். சிறிது தூரம் நடந்து வருவதற்குள்ளாகவே கமலினிக்கு வியர்த்துப் போய்விட்டது. கமலினி தனக்குத் தேவையான பொருள்களை எடுத்துக் கொண்டு Kassa (கல்லாப்பெட்டி)வுக்கு வந்தாள். கசாவுக்குப் போவதற்கு முன்பு ஐஸ்கிறீம் பெட்டி இருக்கிறது. நோர்வே நாட்டு இளம் யுவதி ஒருத்தி ஐந்து வயது மதிக்கத்தக்க பையனை வைத்துக்கொண்டு நின்றாள். அவன் ஐஸ்கிறீம் பெட்டியைக் கண்டவுடன் ஐஸ்கிறீம் வாங்கித் தரும்படி அடம்பிடித்தான். அவள் அதற்கு முற்றுமாய் மறுப்புத் தெரிவித்தாள். சிறிது நேரம் அவர்களுக்குள் வாக்குவாதம் நடைபெற்றது. அந்தப் பெண் பொறுமை இழந்ததில் முகம் இரத்தச் சிவப்பாகி வீங்கிப் போய் இருந்தது. அதை உணராதவனாக இந்தச் சிறுவன் தொடர்ந்தும் அடம் பிடித்தான். பொறுமை இழந்த அவள் அவனது காதைப் பிடித்து இழுத்துச் சென்றாள். அவன் கூக்குரல் இட்டவண்ணம் அவளோடு இழுபட்டுச் சென்றான். ஒரு கணம் திரும்பிப் பார்த்தவர்கள் பின்பு தங்கள் அலுவலில் மூழ்கிப் போய்விட்டார்கள்.

கமலினிக்குச் சற்று வேதனையாக இருந்தது. பிரச்சனையை நட்பாகத் தீர்க்காது வன்முறையால் முற்றுப்புள்ளி இட்ட செயலைப் பார்த்து 'ஏன் இப்படிச் செய்கிறாய்' எனக் கேட்கவேண்டும் போன்ற உந்தல் உண்டாயிற்று என்றாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பொருள்களை ஷொப்பிங் பையிலே அடுக்கினாள்.

வீட்டே வந்தபோது கரன் வேலையால் வந்து சோபாவில் இருந்தான். கமலினியைக் கண்டதும், 'என்ன சாப்பாடு இல்லையே?' என்றான்.

'இண்டைக்கு கிறில் போடப் போறன்,' என்றாள் கமலினி.

'அப்ப நான் கிறில்ல மூட்டட்டே? பியரும் அடிச்சு சிக்கனும் சாப்பிட்டா நல்லாத்தான் இருக்கும்,' என்றான்.

'மூட்டுங்க. அவங்களும் வரக் கணக்கா இருக்கும்.'

'அவங்கள் எங்க போட்டாங்கள்?'

'வழமையாகப் போற மாதிரித்தான் போயிட்டினம்.'

'நீ உதையே சொல்லிச் சமாளி. உதுகள் பேய்க்கூத்து ஆடுதுகள் எண்டா நீயும் அவையோட சேர்ந்து கூத்தாடுகிறா. உங்க இப்பவே கண்ட நாய்களுக்கும் என்னக் கண்டால் நக்கலாயும் நளினமாயும் இருக்குது. 'அலிக்குஞ்சின்ர அப்பா' எண்டு வேற அடைமொழி வைச்சு கதைக்கிறாளவை. இவன் சுந்தருக்கு என்ன கோதாரி எண்டு அடம்பிடிக்கிறான்? இப்படி எத்தின ஆக்கினை யோட ஊரில சனம் இருந்திருக்கும். ஆனா ஆருக்கும் வெளியில தெரியுமே? எல்லாம் சமாளிச்சுத்தானே நடக்கோணும். இப்படிக் கிலிசகேடு படுகிறது எண்ட முடிவோடு அடம்பிடிக்கக்கூடாது. நான் எல்லா நேரமும் ஒரேமாதிரி இருக்கமாட்டன். ஓ சொல்லியாச்சுது.'

'சனங்கள் கதைக்கிறதுக்கு எல்லாம் காது குடுத்துக் கொண்டு இருந்தா வாழேலாது அப்பா. ஊரில ஆயிரம் ஆசைகளை மனசுக்க புதைச்சுப் புழுங்கிக்கொண்டு இருந்தது மாதிரி இந்த நாட்டில, அதுவும் இந்தக் காலத்தில ஆரும் இருப்பினமே. அதுக்கேத்த மாதிரி நாங்கள்தான் விட்டுக்கொடுத்து நடக்கோணும். இல்லையெண்டு நாங்கள் வலோக்காரம் பண்ணினா, பிள்ளையள் வாழ்க்கை பூராவும் எங்களை வெறுப்பாங்களோ இல்லையோ? இப்ப சுந்தர் தன்னைப் பெண்ணாக நினைக்கிறான். அவனைக் கொண்டே இன்னொரு பெண்ணோட விட்டா என்ன மாதிரி இருக்கும் எண்டு நினைச்சுப் பாருங்க். அதுக்கு என்ன பெயர்? எந்த வழியில

பார்த்தாலும் தப்பாத் தெரியும். இதேமாதிரி ஒரு பெண்ணுக்கு இன்னொரு பெண்மேலதான் ஆசையெண்டு தெரிஞ்சும் அவளை ஒரு ஆணுக்குக் கட்டி வைச்சா ஒவ்வொரு இரவும் அவளைக் கெடுக்கிற மாதிரியெல்லே இருக்கும்? கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க. தேவையில்லா வரட்டுக் கௌரவங்களை விட்டிட்டு யோசிங்க.'

'ஓ, நீ நல்லாப் பிரசங்கம் செய்யிறமாதிரிச் சோக்கா சொல லிப்போட்டு இருப்பா. நான் எல்லே உங்க போய் வரோணும். அப்ப ஒருத்தற்ற முகத்திலையும் என்னால் முழிக்க முடியாத அவமான மாக இருக்குது. சிலவேளை எங்கையாவது கண்காணாத இடத்துக்கு ஓடிப்போகணும் எண்டு நினைக்கிறன்.'

'சும்மா மனசப் போட்டு அலட்டாதேங்க. சுந்தர்ற்ற பிரச்சனையவிட வேற பிரச்சனையும் வரலாம். அதுக்காக எல் லாம் கவலைப்படலாமே? இதை நாங்கள் பெரிசுபடுத்தினாத்தான் பிரச்சனை. இல்லாட்டி இது ஒரு பிரச்சனையே இல்லை. நாங்கள் இதைப் பிரச்சனை எண்டு நினைக்கிறதுதான் முட்டாள்தனம். இல்லையே அப்பா. அவையவை தங்களுக்கு விரும்பினமாதிரி நடக்க விரும்பினா அதைத் தடுக்கிறது இங்க முறையில்லையப்பா. சட்டப்படி பார்த்தா நாங்கள்தான் குற்றவாளியாக நிற்பம். இது உங்களுக்குத் தெரியாத ஒண்டே?'

'பொறு பொறு. சுந்தரின்ர பிரச்சனையவிட வேற பிரச்சனையோ? என்னது? என்ன பொடி வைச்சுக் கதைக்கிறா? நான் இப்பவே அரைவிஷரனாகி விட்டன். என்னை முழு விஷரன் ஆக்காத.'

'நீங்கள் ஏன் இப்பிடிக் கொதிக்கிறியள். கொஞ்சம் எண்டாலும் வாழ்க்கையப் புரிஞ்சுகொள்ள முயற்சி செய்யுங்கோ.'

'என்னத்தப் புரிஞ்சுகொள்ள வேணும். நீ பெரிய மேதாவி மாதிரிக் கதைக்காத. முதல்ல ஒழுங்கான அம்மாவாக இருக்கப் பார்.' கூறியவண்ணம் நெருப்பை மூட்டினான். அவன் உடல் எல்லாம் பற்றி எரிவதான அந்தரத்தில் நுனிக்காலில் நின்றான். காரி விளாசி எரிந்து கொண்டு இருந்தது. கமலினியின் மனதும் இவருக்கு

எப்படிப் புரிய வைப்பது என்பது புரியாது தவித்தது. கரன் ஒரு பியரை எடுத்துவந்து அருந்தத் தொடங்கினான்.

'அது சரி,' சுந்தரின்ர பிரச்சனையை விட வேற என்ன பிரச்சனை இருக்குது? சும்மா சுத்தி வளைக்காமல் பிரச்சனையைச் சொல்லு,' என்றான்.

'நீங்கள் துள்ளாமல் கேட்பியளே? பிறகு உதில நிண்டு மானத்தைக் கெடுக்கிறேல்ல. எண்டைக்கோ ஒருநாளைக்கு உங்களுக்குத் தெரிய வரும் எண்டு எனக்குத் தெரியும். இதைக் கேட்டு நீங்கள் முதல்ல பிரச்சனையைப் பெரிசுபடுத்தக் கூடாது. பழைய கனவில நிண்டு கூத்தாடக் கூடாது. நாங்கள் எல்லாம் இலங்கையை விட்டு வெளியேறேக்க எப்பிடி இருந்திச்சோ அதிலேயே உறைஞ்சுபோய் இருக்கிறம். உண்மை என்னண்டா இங்கத்தையவிட அங்க நிறைய மாறிட்டுது. அதைச் சிந்திக்காமல் சும்மா பாயுறதில ஒரு பிரயோசனமும் இல்லை.'

'உன்ர பிரசங்கம் கேட்டா எனக்கு நித்திரை வந்திடும்.'

'ம்... அப்பிடிப் பிரச்சனைகளையும் பார்த்து அமைதியாய் இருந்தியள் எண்டா எவ்வளவு நல்லா இருக்கும்.'

வீட்டிற்கு வெளியே மரத்தால் அமைக்கப்பட்ட terrace எனப்படும் பகுதிக்கு அருகில் வைத்து கிறிலில் நெருப்பு மூட்டப்பட்டு இருந்தது. அது எரிந்து இப்போது தணலாகி இருந்தது. அதைப் பார்த்த கரன், 'கொண்டா இறைச்சியை. நீ பிரச்சனையச் சொல்ல மாட்டா. நான் அதையாவது கிறில் பண்ணி எடுப்பம்.'

பக்கத்து வீட்டில் குடியிருக்கும் நோர்வே நாட்டுக்காரரும் வெளியே வந்து ஹாய் சொல்லிவிட்டு, கிறில் போடுவதற்கு ஆயத்தம் செய்யத் தொடங்கினார். அவரது பிள்ளைகள் ஓடிவிளையாடிக் கொண்டு இருந்தார்கள். கமலினிக்கு பிரச்சனையைச் சொல்ல வேண்டும் என்பது புரிந்தாலும், சொன்னால் 'என்ன விஷர்க்கூத்து ஆடுவரோ' எனப் பயந்தவளாகத் தயக்கத்தோடு நின்றாள். தணலின் மேல் இறைச்சியை வைக்க அதில் இருந்து வழிந்த கொழுப்பில்

மீண்டும் நெருப்புப் பற்றிக் கொண்டதில் புகையும் நெருப்பும் அதிகம் வந்து கொண்டு இருந்தது.

கமலினி சிறிது நேரம் யோசித்த பின்பு, 'எப்பொழுதோ சொல்ல வேண்டியதுதானே. அதை இப்பொழுதே சொல்லி விடுவோம்' என முடிவு செய்தவளாய். 'அப்பா' என்றாள்.

'என்ன அப்பாவும் சுப்பாவும்?' என்றான் கரன் எரிச்சலோடு.

'பொறுமையா நான் சொல்லுறதை கேட்கோணும்.'

கோழிக்காலைப் புரட்டிக் கொண்டு நின்றவன் அதை நிறுத்தி விட்டு கமலினியைப் பார்த்தான். பின்பு, 'சும்மா சும்மா தொண தொணக்காமல் சொல்லுறியே' என்றான்.

'ம்... சுமி ஒரு விசயம் சொன்னாள்,' எனக் கமலினி தொடங்கினாள்.

'என்ன?' கரன் தற்போது யோசனையோடு கேட்டான்.

'அவளுக்கு ஒரு பிரச்சனை!'

'என்ன அது?'

'அவளுக்கு பெடியள்ள விருப்பம் இல்லையாம்.'

'அதுக்கு இப்ப என்ன அவசரம்? இந்த வயசிலேயே அவளுக்கு ஏன் உந்த நினைப்பெல்லாம் வருகுது? ஒழுங்கா இருக்கிறதை விட்டிட்டு என்ன கூத்து இது? ம்... அதெல்லாம் கொஞ்சக் காலம் போக அவள் மாறிடுவாள். உதுக்கே நீ உந்தப் பீடிகை போட்டனீ. நான் ஏதோ என்னவோ எண்டு பயந்துதான் போயிட்டன்.'

'ச், உங்களுக்குச் சரியா விளங்கேல்ல?'

'என்ன?'

'அவள் தான் லெஸ்பியனாம்.'

'என்ன... பாய்ஞ்சு அறைஞ்சு போடுவன். என்னடி கதை கதைக்கிறா? லெஸ்பியனும் ஹோமோவும் எண்டுகொண்டு. இங்கே

தேவையில்லாத ஆட்டம் இருக்கக்கூடாது. பிறகு நான் என்ன செய்வன் எண்டு எனக்கே தெரியாது,' என்றான் கரன். அவன் தனது நிலையை இழந்து இருந்தான்.

'சும்மா துள்ளாதேங்க அப்பா. அவளென்ன வேணும் எண்டே அப்படி நினைக்கிறாள். அது இயற்கையான உணர்ச்சி. நானோ நீங்களோ ஒண்டும் செய்யேலாது. அவள் அதில தெளிவா இருக்கிறாள்.'

'கமலினி நீ உந்தக் கதைய நிப்பாட்டு. எனக்கு இனி உதைக் கேட்கிறதுக்குப் பொறுமையில்லை.' கோபத்தின் உச்சியில் கரன் தவித்தான்.

'உங்களுக்காக யாரும் மாறப் போறேல்ல. நீங்களும் அதை எதிர்பார்க்காமல் நடந்தீங்க எண்டாச் சரி. மற்றதை நான் சமாளிப்பன்.'

'என்ன அர்த்தத்தில இதைச் சொல்லுறா?'

'நாங்கள் யாரையும் மனசாலகூடத் துன்பப்படுத்தக்கூடாது. அதுவும் என்ர பிள்ளையள அவங்கட விருப்புக்கு எதிரா எந்த விதத்திலும் வலுக்கட்டாயப்படுத்தப் போறேல்ல.'

'அப்ப அவையின்ர இஷ்டத்துக்கு விடப்போறியே?'

'அவங்கள வலுக்கட்டாயப்படுத்துறது இல்லை. அவ்வளவு தான்.'

'அப்ப நீ கண்டமாதிரி அவையள துள்ள விடப் போறன் எண்டுறா?'

'ஏனப்பா புரிஞ்சுகொள்ளமாட்டன் எண்டு அடம் பிடிக்கிறியள்?'

'ஓமடி நான் புரிஞ்சு கொள்ளேல்ல!' கரன் கோபத்தில் கண்ணை இழந்து, என்ன செய்வது என்பது புரியாமல் வெறி கொண்டவனாய் கிறில்லை எட்டி உதைத்தான். அது சரிந்து விழுந்து நெருப்பாக தணலாகக் கொட்டிற்று. Terraceஇல் இருந்த பிளாஸ்ரிக் உறை ஒன்றில் திடீரென நெருப்புப் பற்றிக் கொண்டது.

பக்கத்து வீட்டுக்காரர் சத்தத்தைக் கேட்டவுடன் ஓடிவந்து பார்த்தார். அவர் கண்ட காட்சியில் திகைத்துப் போய் செய்வதறியாது நின்றார். பின்பு அவசரமாக வீட்டிற்குள் ஓடித் தொலைபேசிமூலம் தீயணைப்புப் படைக்குத் தகவல் கொடுத்துவிட்டு, பூங்கன்றிற்கு அடிப்பதற்கு வைத்திருந்த நீர்க் குழாயை எடுத்துப் பிடித்தார். நெருப்பு Terraceஇல் பற்றிக்கொண்டது. கரன் திகைத்துப் போய் நின்றான். பின்பு வீட்டுக்குள்ளே ஓடித் தீயணைக்கும் கருவியைக் கொண்டு வந்து பவுடரைச் சுழற்றி அடித்தான். தீ அதற்கும் கட்டுப்படுவதாய் இல்லை. மீண்டும் அயல்வீட்டாரின் கருவியில் இருந்த பவுடரையும் அடித்து முடித்தான். சிறிது அடங்கிய தீ மீண்டும் உருக்கொள்ளவும் தீயணைப்புப் படை வரவும் சரியாக இருந்தது.

போலிஸ் விசாரித்த போது அது ஒரு விபத்து எனக்கூறி ஒருவாறு சமாளித்தனர். சிறிது நேரத்தில் போலிஸ்காரர்கள் போய் விட்டார்கள். கமலினிக்கு பெரியதொரு அவலத்தில் இருந்து தாங்கள் தப்பியது புரிந்தது.

சிறிது நேரத்தில் கரன் கோபமாகப் புறப்பட்டுச் சென்றுவிட்டான்.

**சு**மிதா வந்தபோது வீட்டில் இருந்து தீயணைப்புப்படை திரும்பிப் போவதைப் பார்த்தாள். ஏதோ விபரீதம் நடந்து இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு உள்ளே ஓடினாள். வீட்டிற்குள் இன்னும் புகை இருந்தது. சுமிதா மேலும் யன்னல்களை விரியத் திறந்துவிட்டாள். சத்தமில்லாது அழுதுகொண்டு இருந்த அம்மாவை அணைத்துக் கொண்டாள். அப்போது சுந்தரும் உள்ளே வந்தான்.

கரன் எங்கு இருந்து திடீரென வந்தவன் என்று புரியவில்லை. பாய்ந்து சுமிதாவின் தலைமயிரைப் பிடித்து கன்னத்தில் மாறி மாறி அறைந்தான். நிலைமை புரிந்து தடுக்கப்போன கமலினியை காலால் எட்டி உதைத்தான். சுந்தர் பயத்தில் தூரே விறைத்துப் போய் நின்றான். வேதனை பொறுக்க முடியாது முகத்தைத் திருப்பிக்

கொண்ட சுமிதாவின் முதுகில் ஓங்கி ஓங்கி கரன் அடித்தான். அவள் தடுமாறி விழுந்தாள். அவளைக் காலால் எட்டி ஒரு உதை உதைத்துவிட்டு கமலினிக்கும் பாய்ந்து உதைத்தான். பின்பு மறுபடியும் கோபமாக புயல்போலே வெளியே சென்றான்.

அம்மாவின் சோகம் சுமிதாவை அரித்துத் தின்றது. இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்பதாய் அவள் எண்ணிக் கொண்டாள்.

அடுத்தநாள் ஐந்து மணிபோல் வீட்டிற்கு வந்த போலிஸ் கரனை அழைத்துச் சென்றது. கமலினி புரியாது சுமியைப் பார்த்தாள். அவள், 'வேற வழியில்லையம்மா...' என்றாள்.

'எதையும் எடுத்தம் கவுட்டம் எண்டு செய்யக்கூடாது. பிறகு நெடுங்காலமாக அதுக்காக கலைப்படுவம். நீ தப்பு செய்யிறதை உணர்ந்தா அதுக்கான பிராயச்சித்தம் செய்யப்பார்...' என்றாள் கமலினி.

'நான் தப்பு செய்யிறதா உணர்ந்தா நிச்சயம் நீ சொல்லுற மாதிரிச் செய்வன். ஆனா நான் இப்ப தப்பு பண்ணுறதா நினைக் கேல்ல. என்னால உன்ன மாதிரி ஆக்கினையைத் தாங்கிக் கொண்டு இருக்கேலாது. இதுக்கு எப்பிடி என்றாலும் ஒரு முற்றுப் புள்ளி வைக்கோணும். அதுதான் இந்த ஏற்பாடு' என்றாள் சுமிதா.

அடுத்தநாள் கோபமாக வந்த கரன் ஒரு பெட்டி நிறைய உடுப்பை அள்ளி அடைந்துகொண்டு, தனது பாஸ்போட்டையும் எடுத்துக் கொண்டு சென்றான்.

**வெ**ளிப்பகுதி மட்டுமே எரிந்திருந்ததால் DBOSற்கு இன்சூரன்ஸ் நிறுவனம் அதைத் திருத்துவதற்காகப் பணவுதவி செய்தது. வெகு விரைவிலேயே வெளிப்பகுதியைத் திருத்தி பெயின்ரும் அடித்து முடித்தார்கள்.

வீட்டில் அப்பா இல்லாதது சுமிதாவுக்கும் சுந்தருக்கும் ஒருவித வெறுமையைத் தந்தது. கரனோடு சண்டைகள் தொலைந்து

போயிருந்தமை கமலினிக்குப் புரிந்தது. சுமிக்கு அம்மாவின் பொருளாதாரக் கஷ்டம் புரிந்தது. அவள் பின்நேரங்களில் ஒரு கடையில் பகுதி நேர வேலை செய்யத் தொடங்கி இருந்தாள். சுந்தரும் அம்மாவுக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்தான். சிலவேளைகளில் மிகவும் கவலையாக பாடசாலையால் வருவான். பாடசாலையில் யாராவது சக மாணவர்கள் கிண்டல் செய்தாலே அவன் அப்படி வருவான் என்பது கமலினிக்குத் தெரியும். அவள் அவனுக்கு ஆறுதல் கூறுவாள். மற்றைய மனிதர்களிடம் இருந்து வித்தியாசமாய் இருந்துவிட்டால் அது எங்கும் விவாதப் பொருளாகி விடுகிறது.

அன்று மிகவும் கோபமாகச் சுந்தர் வந்தான். வந்ததில் இருந்தே கையில் வைத்திருந்த தனது செல்லைப் பார்த்து முறைத்துக்கொண்டு இருந்தான். கமலினி அவனை அவ்வளவு கோபமாக எப்போதும் பார்த்ததில்லை. அவனுடன் இப்போது பேசுவதா அல்லது கோபம் அடங்கிய பின்பு பேசுவதா என்பது புரியாமல் அமைதியாகச் சமையலைத் தொடர்ந்தாள். சுந்தருக்கு அது இன்னும் கோபத்தையும் கவலையையும் உண்டு பண்ணி இருக்க வேண்டும். அவன் அதிக ஆத்திரத்தோடு, 'உந்தச் சனியன் எனக்கு இனி வேண்டாம்' எனக் கத்தியவண்ணம் தனது செல்லைச் சுழற்றி சுவரோடு எறிந்தான். அது துண்டம் துண்டமாக உடைந்து தெறித்துப் பறந்தது. கமலினி தன் பிழையை உணர்ந்தவளாக பதைத்துப் போய் அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். சுந்தரும் அவளைக் கட்டிப் பிடித்தவண்ணம் அதுவரை கோபமாக வைத் திருந்த உணர்ச்சியைக் கரைத்தான்.

கமலினி அவன் அழுவதற்கு நேரம் கொடுத்து பின்பு அது தணிய, 'என்ன நடந்தது? ஏன் இப்பிடிக் கோபமா இருக்கிறா?' என்றாள்.

'நீயே என்னைக் கண்டும் காணாமல் இருக்கிறா.'

'தப்பு. நான் பேசாமல் இருந்தது தப்பு. சரி அதை விடு. இப்ப என்ன நடந்தது எண்டு எனக்குச் சொல்லு?'

அந்த சுரேன் எனக்கு `Du er en homo' எண்டு ரெக்ஸ் அனுப்பி இருக்கிறான். எனக்கு வாற கோபத்துக்கு அவனை ஒருநாளைக்கு கொலை செய்வன். ஓ...' என்றான்.

'அப்படி எல்லாம் கதைக்கக்கூடாது. என்னதான் கோபம் வந்தாலும் நிதானம் இருக்கோணும். தன்னைவிட வித்தியாச மாக இருந்தா எல்லோருக்கும் ஒரு ஐயம் இருக்கத்தான் செய்யும். அதாலதான் அப்பிடிச் செய்யிறாங்கள். அதுக்கு கொலை செய்வன் எண்டெல்லாம் சொல்லக்கூடாது' என்றாள் கமலினி.

'நான் என்ன வித்தியாசமாக இருக்கிறன்? வகுப்பில இருக்கிற ஒரு Jenter ரோடையும் (பெண்களுடனும்) பிரச்சனைப்படாமல் போறவன். என்னை மட்டும் ஹோமோ ஹோமோ எண்டு நக்கலடிக் கிறான். எப்ப பார்த்தாலும் என்னப் பார்த்து கிண்டலாகச் சிரிச்சுக் கொண்டு போவான். இனி அவன் அப்பிடிச் சிரிச்சான் எண்டா நான் ஏதாவது செய்வன்.'

'அப்பிடி எதுவும் செய்யக்கூடாது. அது உனக்கு இன்னும் பாதிப்பா வரும். நான் வேணும் எண்டா பள்ளிக்கூடத்தில வந்து கதைக்கிறன்.'

'ம்... அதுகூட எனக்கு அவமானம். என்னை யாரும் நம்புகினம் இல்லை.' கூறியவண்ணம் சுந்தர் மீண்டும் அழுதான்.

கமலினி அவனை மீண்டும் கட்டிப்பிடித்தவண்ணம். 'நான் உன்ன நம்புறன் கண்ணு' என்றாள்.

'நான் கெதியா மாறோணும் அம்மா.'

'ம்...நிச்சயமா.'

'நீதான் உதவி செய்யோணும். நான் காசு சேர்க்கிறன். அதோட லோனும் எடுத்துச் செய்வம்.'

அடுத்தநாள் கமலினி பாடசாலை சென்று வகுப்பு ஆசிரியையோடு கதைத்தாள். அவள் மிகவும் அக்கறையோடும்

கவலையோடும் விடயத்தைக் கேட்டுவிட்டு தான் அதைப்பற்றி விபரமாக வகுப்பில் கதைப்பதாகவும். இனிச் சுந்தருக்கு யாராலும் தொந்தரவு வராது பார்த்துக் கொள்வதாகவும் உறுதி அளித்தாள். தனது மகன் ஒருவனும் போதைப் பொருளுக்கு அடிமையாகி, சமுதாயத்தால் அசிங்கமாகப் பார்க்கப்பட்ட வேதனை பற்றிய அநுபவம் இருப்பதாகவும் கூறினாள்.

கமலினி அந்த சோகத்திற்காக தான் மிகவும் வருந்துவதாகக் கூறிவிட்டு கனத்த மனதோடு பாடசாலையை விட்டு வெளியே வந்தாள்.

# 6

மீண்டும் நிகழ்காலத்தில்...

முதுமையில் தனிமை கொடியது என்பதை அன்று சுமியின் அம்மா உணர்ந்து கொண்டிருந்தா. சுமி அன்று பிற்பகல் வழமைபோல வேலைக்குச் சென்றுவிட்டாள். அவள் வருவதற்குப் பதினோரு மணியாகும். நேரம் போக மறுத்துச் சண்டையிட்டுக் கொண்டு இருந்தது. சரி, இதற்கு ஒரு வழி உண்டு என எண்ணிய சுமியின் அம்மா தமிழ்ப்படம் ஒன்றைப் பார்க்கத் தொடங்கினா. சுமியின் அம்மா வுக்கு ஆங்கிலப்படங்கள் பிடித்தாலும் இடைக் கிடையே தமிழ்ப்படங்களும் பார்த்துக் கொள்வா.

சோளம் பொரித்து Pepparkaka பெட்டியில் அடைத்து வைத்திருந்தது ஞாபகம் வர அதை எடுத்து வந்து கொறித்த வண்ணம் படம் பார்த்துக் கொண்டு இருந்தா. திடீரென பெரியதொரு சத்தம் காதுக்கு அருகில் கேட்பது போன்று இருந்தது. அந்தச் சத்தத்தில் சுமியின் அம்மா அதிர்ந்து போய்விட்டா. ஹோல் யன்னல் கண்ணாடி பொல பொலவென்ற சத்தத்தோடு கொட்டுண்டது. ஹோலுக்குள் பெரிய கல்லொன்று வந்து விழுந்து இருப்பதை அவதானித்தா. யாரோ

நீல நிற உடுப்போடு ஓடுவது சுமியின் அம்மாவுக்குத் தெரிந்தது. தூரத்தில் ஓடிக்கொண்டு இருந்ததில் யார் என்பது அவருக்குத் தெரியவில்லை. 'நீனாவோடு சேட்டைவிட்ட பெடியனாய் இருக்குமோ?' என ஒருகணம் நினைத்த சுமியின் அம்மா தனக்கேன் தேவையில்லாத ஆராய்ச்சியென எண்ணியவண்ணம் போலிஸுக்குப் போன் செய்தா.

போலிஸ் யாருக்கும் காயமா எனக் கேட்டார்கள். இல்லை என்பதை அறிந்தபின்பு தாங்கள் வேறு முக்கிய அலுவல்களை முடித்துக் கொண்டு ஆறுதலாகத்தான் வருவோம் என்றார்கள்.

போலிஸ் வந்தபோது சுமி வீட்டிற்கு வந்திருந்தாள். அவளால் அதை நம்ப முடியாமல் இருந்தது. இப்படி ஒரு கல்லைத் தூக்கி யார் வீசி இருப்பார்கள் என்று புரியவில்லை. இதனால் அவர்கள் சாதித்தது என்ன என்பதும் அவளுக்குப் புரியவில்லை. அம்மாவைக் கொலை செய்வதால் யாருக்கு என்ன லாபம் என்பதும் புரியவில்லை.

போலிஸார் சுற்றிச் சுற்றிப் படம் எடுத்தார்கள். பின்பு அதில் வந்த பெண் போலிஸ்...சுமிதாவோடு தன்னை அறிமுகம் செய்து கொண்டு கதைத்தாள்.

'என்ன நடந்தது?' என்றாள்.

'அம்மா தனியத்தான் வீட்டில் இருந்தவா. நான் இப்பதான் வேலையால வாறன்' என்று தொடங்க.

'ஓ நீங்கள் என்னவா வேலை செய்யிறியள்?' என்று கேட்டாள் அவள்

'நான் சீக்கப்பிளையராக வேலை செய்யிறன்.'

பின்பு சுமியின் அம்மாவை நோக்கி என்ன நடந்தது என அந்தப் போலிஸ் அதிகாரி கேட்க, சுமியின் அம்மா நடந்தவற்றை மீண்டும் ஒருமுறை ஒப்புவித்தா.

'யாரிலயாவது சந்தேகப்படுறியளா?' என அந்தப் பெண் அதிகாரி சுமியைப் பார்த்துக் கேட்டாள்.

'யாரைச் சந்தேகப் படேலும்? கல்லைத் தூக்கி கண்ணாடி மேல எறிஞ்சுபோட்டு ஓடுறமாதிரி யார் செய்வினம் எண்டு எனக்குத் தெரியேல்ல. ஆனா இப்ப கொஞ்சக்காலமா நடக்கிறது எல்லாம் மர்மமாக இருக்குது. எங்களை யாரோ ஃபலோ பண்ணுறமாதிரியே இருக்குது.'

'ம்... இப்ப லேற்றாப் போச்சுது. நாளைக்கு வந்து ஒவ்வொரு வீடாய்ப் போய் யாரும் வித்தியாசமான ஆளைக் கண்டவையோ எண்டு விசாரிக்கிறம். நீங்கள் நாளைக்கு இன்சூரன்ஸ்க்கு கதைச்சு யன்னலைத் திருத்துங்க.'

'நாங்கள் வேற ஏதாவது செய்யலாமே?' என அவள் மற்றைய அதிகாரியிடம் கேட்க,

'இப்ப இனி எதுவும் செய்ய முடியாது. எதுக்கும் நாளைக்கு வந்து விசாரிச்சுப் பாப்பம்' என்று அவன் கூறவும், அவர்கள் புறப் படத் தயாரானார்கள்.

அடுத்தநாள் மாலை வந்த போலிஸார் சில வீடுகளுக்குச் சென்று விசாரித்துவிட்டுப் போய்விட்டார்கள். காயம் இல்லாத வகையில் அவர்கள் இதைப் பெரிதாக எடுத்துக் கொள்ள மாட்டார் கள் எனச் சுமி எண்ணிக் கொண்டாள்.

கடந்த கால நினைவில்...

நட்பு இருக்கும் இடத்தை அபகரிக்க பகை காத்திருப்பது போல, உறவு உள்ள இடத்தை பிரிவு உறவாடப் பார்த்திருக்கிறது. பிரிய முடியாத உறவை இறப்பாவது உறவாடிப் பிரித்து விடுகிறது. பிரிக்க முடியாத உறவு என்கின்ற கற்பனையில் இறுமாந்திருக்க அது திடீரெனப் பிரிந்து மறைந்து போகிறது. அப்போது தாங்க முடியாத வேதனையில் இதயம் பொசுங்கிப் போகிறது.

கரன் சில நாள்களில் திரும்பி வருவான் என்கின்ற ஆருடம் பிழைத்துப் போனது கமலினிக்குச் சற்று வியப்பைத் தந்திருந்தது.

சுமிதா கரன் அடித்த கோபத்தில் போலிஸ்•க்குப் போயிருந்தாலும் பின்பு அப்பா இல்லாததில் ஒருவித சோகத்திலும் மன நெருடலிலும் சோர்ந்து போய் இருந்தாள். அப்பா அம்மா என்கின்ற உறவுடன் மட்டுமே நாலு சுவருக்குள் வாழ்வதால் அது இங்கு அதிக பாதிப்பை பிள்ளைகளுக்கு உண்டுபண்ணி விடுகிறது. அதன் கோரப்பிடி பிரிவு வரும்போது முதலையாகத் தலை நீட்டுகிறது.

அன்று வேலையால் வந்த கமலினி வழமைபோல சாப்பாட்டு அலுவலை முதலில் கவனித்தாள். பின்பு தொலைக்காட்சி பார்க்க எண்ணியவள் கடிதம் பார்க்கவில்லை என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டு கடிதம் எடுக்கச் சென்றாள். சுமிதா பாடசாலையால் வந்து தானே சாப்பாட்டைப் போட்டு எடுத்துக் கொண்டு சோபாவில் வந்து இருந்தாள். கமலினி கடிதத்தை எடுத்துக்கொண்டு வந்து சோபா மேசையில் வைத்துவிட்டு தொலைக்காட்சியை ஓன் செய்தாள். பின்பு சில பில்களை எடுத்து பிரித்துப் பார்த்தாள். எல்லாம் பணத்தைக் கொண்டா கொண்டா எனக் கேட்கும் மஞ்சள் துண்டுகள் எனச் சலித்துக் கொண்டாள். உழைத்து உழைத்து அவர்களுக்குக் கட்டுவதே வாழ்க்கையாகி விட்டது என எண்ணிக் கொண்டாள்.

பின்பு கடைசியாக இருந்த கடிதத்தின் லோகோவைப் பார்த்தாள். அது பமிலிய கந்தோர் (குடும்பப் பிரச்சனைகளைக் கதைக்கும் அலுவலகம்) உடையதாக இருந்தது. ஏன் அங்கு இருந்து கடிதம் வந்திருக்கிறது என்கின்ற யோசனையோடு அவள் பிரித்து வாசித்தாள். வாசிக்க வாசிக்க தேகம் எல்லாம் அனல் பற்றியது போன்று எரிந்தது. அந்த அனலைத் தடுப்பதுபோல திடீரென வியர்க்கத் தொடங்கியது. கடிதத்தின் லோகோவைப் பார்த்துவிட்டு அம்மாவைக் கவனித்துக் கொண்டு இருந்த சுமிதா, 'என்னம்மா ஏன் உனக்கு இப்பிடித் திடீரெண்டு வேர்க்குது?' என்றாள்.

'அங்...'

'என்ன இருக்குது அந்தக் கடிதத்தில்? நான் பார்க்கலாமே?'

கமலினிக்கு ஒருகணம் என்ன செய்வது என்று புரியவில்லை. பின்பு தோளுக்கு மேல வளர்ந்தவள் தோழியே என எண்ணியவளாய் சுமிதாவிடம் அதைக் கொடுத்தாள்.

அவள் வாசித்துவிட்டு 'ஏன் அம்மா நீ கவலைப்படுகிறா? கூப்பிட்டுக் கதைக்கத்தானே போகினம்? அதுக்கேன் இப்பிடிப் பயப்படுகிறா?' என்றாள்.

'நீ என்ன நினைக்கிறா?'

'எதப்பற்றி அம்மா?'

'உங்களை உங்கட விருப்பப்படி இருக்கவிடாமல் தடுக்கிற அப்பாவைப் பற்றி நீ என்ன நினைக்கிறா?'

'நாங்கள் என்ன நினைக்கிறம் எண்டதைவிட இது உனக்கும் அப்பாவுக்குமான உறவு அம்மா. அதில நீ என்ன நினைக்கிறா எண்டதுதான் முக்கியம்.'

கமலினிக்கு முதலில் மண்டையில் அடித்தது போன்று இருந்தது. அவள் அதைச் சமாளித்த வண்ணம், 'அப்பிடியில்ல. ஒரு அம்மாவாக உங்கட நன்மைதான் எல்லாத்தையும் விட முக்கிய மானது. உனக்கும் சுந்தருக்கும் நிம்மதியான வாழ்வு இருக்கோணும். அதுக்கு நான் எதுவும் செய்வன்.'

'அம்மா எதுக்கும் நல்லா யோசியம்மா,' என்றாள் சுமிதா.

கமலினிக்கு அதற்குப் பின்பு தொலைக்காட்சி பார்க்கும் ஆர்வம் இருக்கவில்லை. அவள் எழுந்து மேலே சென்று படுத்துக் கொண்டாள்.

அன்று கமலினி Meklingற்குச் (சமாதானம்) சென்று இருந்தாள். அங்கு ஒரு மனோதத்துவம் படித்தவர் தன்னை றொபேட் கன்சன் என அறிமுகப்படுத்திக்கொண்டார். அவரோடு மூனா ஈவர்சன் என்பவளும் இருந்தாள். அவளும் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டாள். பின்பு காப்பியா தேநீரா வேண்டும் எனக் கேட்க, காப்பி எனத் தனது விருப்பைத் தெரிவித்து அதைப் பெற்றுக் கொண்டாள். கரன் இன்னும் வரவில்லை. கமலினி ஒன்றும் செய்ய

முடியாதவளாய் அந்த அறையை ஒருமுறை துழாவினாள். எந்த ஆடம்பரமும் இல்லாமல் அறை மிகவும் எளிமையாக இருந்தது.

கமலினியின் அவஸ்தையை அறிந்துகொண்ட மூனா, 'நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்?' என இறுக்கத்தைப் போக்கக் கேட்டாள். 'கடையில வேலை செய்யிறன்' என்றாள் கமலினி.

'வேலை பிடிச்சிருக்கா?'

'யா நல்ல வேலை. எனக்கு அந்த வேலை பிடிச்சிருக்கு.'

'உங்கட பமிலியப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறியள்?' திடீரென மூனா கேட்ட கேள்வியில் கமலினி சிறிது திகைத்துப் போய்விட்டாள்.

பின்பு தன்னைச் சமாளித்துக்கொண்டு, 'நோமலான பமிலியாத்தான் இருந்தம். அது வழமையான ஒன்றுதான். அவை அப்பிடி வளர்க்கப்பட்டு இருக்கிறார்கள். அதை ஒரு வசதியாக எடுத்துக்கொண்டு இங்கேயும் சுகபோகம் அநுபவிக்கிறார்கள். அதையெல்லாம் ஒரு பெரிய பிரச்சனையாக நான் எடுத்துக் கொள்ளவில்லை. எங்கட கலாசாரத்தில அது ஒரு பெரிய நடை முறைப் பிரச்சனை இல்லை என்பதுதான் உண்மை. வெளியில இருந்து பார்க்கிறவைக்கு அநியாயமாக இருந்தாலும் எங்கட சமுதாயத்தில ஏற்கப்பட்ட ஒன்றாக அது உள்ளது. இதெல்லாம் எனக்கும் ஒரு பிரச்சனையாக இருந்ததில்லை. ஆனா பிள்ளைகள் இங்கேயே பிறந்து வளர்ந்தவர்கள். இந்தக் கலாசாரத்தின் பெரும்பகுதியைத் தமதாக்கிக் கொண்டவர்கள். அவர்களை எங்களின் கலாசாரத்தைப் பின்பற்றுமாறு கட்டாயப்படுத்த முடியாது. சரி, கலாசாரத்தில்தான் அப்படிச் செய்ய நினைக்கிறோம் என்றால், பிறப்பில பரம்பரை அலகுகளால் நிர்ணயிக்கப்பட்ட இயற்கையின் சூட்சமத்தைப் புரியாமல், அதை வலுவுக்கு மாற்ற நினைப்பதை என்னால் ஏற்க முடியவில்லை. பிள்ளைகளை அவர்களின் விருப்புக்கு எதிராக, வலுக்கட்டாயமாக, தனது விருப்பப்படி நடக்குமாறு நிர்ப்பந்தித்தால் அதைப் பொறுத்துக் கொண்டு இருக்க என்னால் முடியாது.'

'உங்களை அல்லது பிள்ளையள அடிச்சு துன்புறுத்துவாரா?' கன்சன் திடீரெனக் கேட்டார்.

கமலினி சிறிது நேரம் பேசாது வார்த்தைகளைத் தேடி அலைந்தாள். ஆம் என்று சொல்லுவதா இல்லை என்று சொல்லுவதா? அவளுக்கு சிலகணம் குழப்பமாகியது. பின்பு மூளையில் ஒரு பொறி தட்டியது. அது உண்மையைச் சொல் என்றது.

'என்னை அவர் பெரிசாகத் துன்புறுத்தியது இல்லை. ஆனால் பிள்ளைகளை சில நேரங்களில் அடிச்சு இருக்கிறார்.'

'அப்பிடியெண்டா இந்த Meklingகே தேவையில்லை. உங்களுக்கு விருப்பம் எண்டா நேரடியாவே அப்ளை பண்ணலாம்.'

'பகிடி என்னண்டா நான் இதைக் கேட்டு அப்ளை பண்ணேல்லையே!'

'எங்களுக்குத் தெரியும்' என்றாள் மூனா. பின்பு ஏதோ நினைத்தவளாய், 'இங்க மற்றைய மனிசருக்கு அடிக்கிறதை வெக்கக்கேடா நினைப்பினம். அது ஒருவகையில சமுதாயத்தால ஏற்றுக்கொள்ளப்படமுடியாத செய்லாக இருக்கிறதால பொதுவா யாரும் அதைச் செய்யிறது இல்லை. அதுக்காக எங்கட சமுதாயம் வன்முறையில இருந்து விடுதலை பெற்றுவிட்டது எண்டு சொல்ல முடியாது. இங்கையும் மனைவிமாரை அடிக்கிற கணவனை, பிள்ளைகள அடிக்கிற அப்பா அம்மாவைக் காணலாம்.'

'ம்... தெரியும். சொந்தப் பிள்ளையக் கொல்லுற அப்பா அம்மாவும் இருக்கினம். எல்லோரும் மனிசர்தானே? மிருக குணத்தின் எச்சம் மூப்பெய்தாத மனிதர்தானே?'

'நீங்கள் சொல்லுவது உண்மை. அதைவிட நீங்கள் நல்லா நியூஸ் எல்லாம் பார்ப்பியள் போல இருக்குதே?' என அவள் கேட்கவும் கரன் கதவைத் தட்டவும் சரியாக இருந்தது.

கரன் அவசரமாக உள்ளே வந்தான். கரனைப் பார்த்த கமலினிக்குப் பரிதாபமாய் இருந்தது. கோலத்தில் நிறைய மாற்றம். வலுவில் குடியேறிய தோற்றம். தலைமயிர் வெட்டாது அங்கும் இங்கு

மாய்ப் பறந்தது. தாடி வளர்ந்து ஆட்டுத்தாடியாக நீண்டு இருந்தது. உடலின் பருமனில் ஒரு பகுதியைக் கவலையும் கோபமும் அரித்து எலும்பைக் காண்பதில் வெற்றி கண்டிருந்தது. கண்கள் தாண்டு கொண்டதாக முகத்தில் எலும்புகள் மாத்திரம் துருத்திக் கொண்டு நின்றன. அந்தக் கண்களில் மாத்திரம் கோபமும் வெறுப்பும் அதீத மாய் மின்னிக் கொண்டு இருந்தன. அந்தக் கதிரையில் இருப்பதா, அல்லது இந்தக் கதிரையில் இருப்பதா என அலமலக்கப்பட்டு விட்டுப் பின்பு ஒரு கதிரையில் இருந்தான். கமலினியை ஒருகணம் பார்த்தவன் கோபத்திலோ வெறுப்பிலோ அதைச் சட்டென விலக்கிக் கொண்டு அவர்களைப் பார்த்தான். கமலினியை இனம் புரியாத சோகம் ஒன்று இம்சிக்கத் தொடங்கி இருந்தது.

சிறிது அமைதிக்குப் பின்பு மூனா மெதுவாகத் தொடங் கினாள்.

'கரன்,' நீங்கள்தான் இந்த சந்திப்பை ஏற்பாடு செய்து இருந்தீர்கள். உங்களுடைய மனசில என்ன இருக்கின்றது என்பதைச் சொல்ல ஏலுமா?'

'இது ஒரு தேவையில்லாத வேலை. யாராவது பிரியோணும் எண்டாப் பிரிஞ்சு போறதுக்கு இடமளிக்கோணும். தெரியாதவைக்கு முன்ன வந்து எங்கட பிரச்சனைய சொல்லிக் கொண்டு இருக்கிறது எனக்கு அறவே பிடிக்கேல்ல. எப்பிடிப்பட்ட பைத்தியக்காரத்தனம் இது? எனக்கு இது கொஞ்சமும் பிடிக்கேல்ல. ஒண்டும் ஒத்து வாரது மாதிரித் தெரியேல்ல. பிரியோணும். அவ்வளவுதான். நான் இதைவிட உங்களுக்கு விளக்கம் ஒண்டும் சொல்லிக்கொண்டு இருக்கப் போறேல்ல.'

'நீங்கள் அப்பிடிப் பீல் பண்ணத் தேவையில்லை. எங்களுக்குச் சொல்லுற எந்த விடயமும் யாருக்கும் வெளிய தெரியவராது. அப்பிடி வெளிய வராமல் பாதுகாக்க வேண்டியது எங்கட கடமை.'

'அது எனக்கும் தெரியும்.'

'நாங்கள் உங்களுக்கு உதவி செய்யோணும் எண்ட நோக்கத்திலதான் இருக்கிறம். அதைவிட வேற எந்த நோக்கமும்

எங்களுக்குக் கிடையாது. நீங்கள் மனம் விட்டு எங்களிட்ட உங்கட பிரச்சனையைச் சொல்லலாம்.'

'எனக்கு இதில எல்லாம் பெரிய நம்பிக்கை இல்லை. நான் நினைக்கிற மாதிரி நடக்க கமலினி தயாராக இல்லை. பிறகு எதுக்கு நேரத்தை வீணடிக்கிறியள்?'

'ம்... கமலினி எப்படி இருக்கோணும் எண்டு நீங்கள் நினைக்கிறியள்?' என மூனாவே கரனைப் பார்த்து தொடர்ந்தும் கேட்டாள்.

'எப்படி இருக்கோணும் எண்டு அவளுக்குத் தெரியும்.'

'என்ன சொல்லுறா கமலினி?' என மூனா கமலினியைப் பார்த்துக் கேட்டாள்.

'எனக்கும் இவருக்கும் குறிப்பிடுகிற அளவுக்குப் பெரிய பிரச்சனை நடக்கேல்ல. ஒருநாள் மாத்திரம்தான் கொஞ்சம் மோசமா நடந்திருக்கிறார். அது என்னைப் பொறுத்தவரையிலும் தொடர்கதையாகும் எண்டு நினைக்கேல்ல. ஆனா பிள்ளைகளின்ர வாழ்க்கைமுறை, அவையின்ர உறவுமுறைகளை மாற்றோணும் எண்ட எண்ணத்தில், அவைய மனதாலேயோ உடலாலேயோ தண்டிக்கிற எண்ணம் இருந்தா, நாங்கள் இவரோட வாழ்கிறத்துக்கு தயாராக இல்லை. அதில நான் தெளிவா இருக்கிறன்.'

'அதுதானே சொன்னனன் இது சரிப்பட்டு வராது எண்டு.' கதிரையில் இருந்து திமிறினான் கரன்.

'அப்பிடி இல்ல... நீங்கள் மற்றவையில வலோக்காரமாக உங்கட எண்ணத்தைத் திணிக்கக்கூடாது. அதுதானே கமலினி கேட்கிறது?' என்றாள் மூனா.

'பார் இதைத்தான் நான் சொன்னன். உங்களுக்கு எங்கட கலாசாரமும் தெரியாது ஒழுக்கமும் தெரியாது. நீங்கள் இப்பிடித்தான் கதைப்பியள். ஊரில இருந்திருந்தா இப்பிடி யெல்லாம் போயிருக்காது.'

'அப்ப நீங்கள் கமலினியிட்ட, பிள்ளைகளிட்ட எதிர்பார்க்கிறது எல்லாம் சரி எண்டு நினைக்கிறியளா?' மூனா மீண்டும் கேட்டாள்.

'அதில எந்தப் பிழையும் இல்லை. அப்பா சொல்லுறபடிதான் நாங்கள் நடந்தம். எங்கடை அம்மா நடந்தா. அதையேதான் நானும் எதிர்பார்க்கிறன். அப்பிடித்தான் இவையும் நடக்கோணும்.'

'அது இலங்கையில பல பத்தாண்டுகளுக்கு முதல் இருந்த நிலைமை. நீங்கள் அப்படியே இங்கேயும் இருக்கோணும் எண்டு இப்ப நினைக்கிறது சட்டவிரோதமானது.'

'அது எனக்குத் தெரியும். உங்களோடயெல்லாம் கதைக்கேலாது. நீங்கள் மனிசருக்கு மூளைச்சலவைதான் செய்வியள்.'

கோபமாகக் கூறியவன் கதிரையைப் பின்தள்ளிவிட்டு எழுந்து சென்றுகொண்டு இருந்தான். மூனா இதை எதிர்பார்க்கவில்லை. அவள் அப்படியே சிறிது நேரம் உறைந்து போய் இருந்தாள்.

றொபேட் அதைச் சமாளிப்பதுபோல, 'நீங்கள் என்ன சொல் லுறியள் கமலினி?' என்றார்.

'அவரில மனரீதியாக எந்த மாற்றமும் இல்லாதபோது அவரோட சேர்ந்து இருக்கிறது எல்லாரின்ர வாழ்க்கையையும் நரகமாக்கிப் போடும். பிள்ளைகளின்ர வாழ்க்கை எனக்கு மிகவும் முக்கியம். எனக்காக நான் வாழோணும் எண்ட சுயநலத்தோட நான் அலையேல்ல. அவரால பிள்ளைகளுக்கு பாதிப்பு வரும் என்பதே வெளிப்படையா இருக்கேக்க தேவையில்லாத ரிஸ்க் எடுக்க நான் விரும்பேல்ல.'

'நீங்கள் முடிவு பண்ணினால் சரி. அதோடு உங்களுக்கு பிறியா அற்வுகேற் உதவி உண்டு. பிள்ளைகளுக்கு அவர் Barnebi-drag (குழந்தைகளுக்கு படி) கட்ட வேண்டும்.'

'ம். தெரியும். மகளுக்கு வயதாகிக்கொண்டு வருகுது. மகனுக்கு அவர் கொஞ்சக்காலம் கட்ட வேண்டி வரும்.'

'நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. உங்களுக்கு இனி ஒரு நல்ல வாழ்க்கை அமையும்,' என்றாள் மூனா.

'நன்றி.'

அன்று சுவேகா வீட்டிற்கு வந்திருந்தாள். Ungdomsskole (10 ஆம் வகுப்பு வரை) முடிந்து Videregandeskole ஸ்கூல் (AL) தொடங்க இருந்த சமயம் அது. சுவேகா இப்போதெல்லாம் வந்தால் கமலினிக்கு ஹாய் சொல்லிவிட்டு நேரடியாக சுமிதாவின் அறைக்குச் சென்று விடுவாள்.

இன்றும் கமலினியைக் கண்டதும் 'ஹாய்' என்றாள்.

'ஹாய்... நீங்கள் நல்ல அர்த்தநாரீஸ்வரர். அவள் மேலதான் இருக்கிறாள். போய்க்கதை,' என்றாள் கமலினி.

'தாங்ஸ் அன்ரி,' என்றுவிட்டு அவள் மேலே சென்றாள்.

இன்று சுவேகா வரும்போது Videregandeskole ஸ்கூலுக்கு அப்ளை பண்ணுவதற்கான கற்லொக்கும் அதற்கான படிவங்களும் கொண்டு வந்திருந்தாள்.

சுமியின் அறைக்குள் வந்த சுவேகா அவளும் கற்லொக்கைப் பார்த்துக் குறித்துக் கொண்டு இருந்ததைக் கவனித்தாள்.

'என்ன சுமிதா எங்க ஸ்கூல் பார்க்கிறா?'

'ஏன் அப்பிடிக் கேட்கிறா? நான் வேற எங்க Soke (விண்ணப்பிக்க) பண்ண முடியும்? அம்மா வீடு எல்லாம் இஞ்ச இருக்குது. அப்ப நான் ஒஸ்லோவுக்குத்தானே சேர்க்க பண்ண வேணும்? இதில என்ன குழப்பமிருக்குது? நீ சில வேளை விசித்திர மாகக் கேள்வி கேட்பாய்,' என்றாள்.

சுவேகா சுமியின் அருகில் வந்து இருந்து கொண்டாள். பின்பு சுமியின் கைகளைத் தனது கையில் எடுத்து வைத்துத்

தடவியவண்ணம் அவளின் க்ண்களை நோக்கினாள். சுமிதாவும் அவளை ஆசையாகப் பார்த்தாள்.

பின்பு இதன் நோக்கம் என்ன என்பதை அறிய வேண்டும் என எண்ணியவளாய், 'என்ன, ஏனடி இந்தச் சாலம்,' என்றாள்.

'அப்பிடி ஒண்டும் இல்ல...'

'அப்ப?'

'ஒரு தனிமையான இடத்தில நானும் நீயும் மட்டும் இருக்கோணும் எண்டு ஆசை இருக்குது.'

'ம்... அப்ப நாங்கள் சந்திரமண்டலம்தான் போகோணும்...'

'சும்மா உன்ர பகிடிய விட்டிட்டு நான் சொல்லுறதைக் கேளு.'

'சரி சொல்லு.'

'ஒஸ்லோவில நாங்கள் ஸ்கூல் எடுத்தா நிம்மதியாப் போய் வரேலாது. எங்க பார்த்தாலும் தமிழ் ஆள்கள். அவையின்ர பார்வையெண்டா நாறல் மீனைப் பூனை பார்க்கிற மாதிரி இருக்கும். எனக்கு இதில இருந்து எல்லாம் கொஞ்சம் விடுதலை வேணும் போல இருக்குது. அதுக்கு இது நல்ல சந்தர்ப்பம். நாங்கள் நோத் பக்கமா ஒரு ஸ்கூல் எடுத்துக் கொண்டு போனா நல்லது...'

'ஆ...' சுமிதா சிறிதாகத் துள்ளிவிட்டு இருந்தாள். பின்பு மெதுவாக நிலைமையைப் புரிந்தவளாய், 'உது நிலவுக்குப் பயந்து பரதேசம் போறமாதிரி எண்டு அம்மா அடிக்கடி சொல்லுறமாதிரி இருக்குது. அங்கை தமிழர் இல்லாட்டிப் பாக்கிஸ்தான்காரர் இருக்க மாட்டினம் எண்டு ஏதாவது கரண்டி இருக்கா? இல்லாட்டி அங்க இருக்கிற நொஸ்குகள்தான் எங்களைச் சீண்ட மாட்டாங்கள் எண்டு ஏதாவது உறுதி இருக்குதா? சுவேகா நாங்கள் யாருக்கும் பயந்து எங்கையும் ஓடமுடியாது. இரண்டு நாள் வாயை ஆவெண்டுறவன் மூண்டாம்நாள் பேசாமல் போவான். நாங்கள் பிரச்சனையைக் கண்டு பயந்தெல்லாம் ஓடேலாது. உன்ர அம்மாவையும் என்ர அம்மாவையும் கொஞ்சம் நினைச்சுப் பார். நாங்களும் போனா

அவைக்கு எப்பிடி இருக்கும் எண்டு கற்பனை பண்ணிப்பார். Suvega my dear Suvega, don't think about moving to another place.' கூறியவண்ணமே சுமிதா சுவேகாவை அணைத்து முத்தமிட்டாள்.

சுவேகா தனது முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டாள். கோபத்தில சிவந்த கன்னங்களும் குடம் குடமாய் வழியும் சோகமும் சுமிதாவுக்கு கலக்கத்தைத் தந்தது. சுமிதாவுக்கு அந்தச் சோகத்தின் அர்த்தம் முதலில் புரியவில்லை. வேறு இடம் போகவேண்டும் என்பதை அவள் மிகவும் பாரதூரமாய் எடுத்துக் கொள்வாள் என்று அவள் நினைத்திருக்கவில்லை.

சிறிது நேரம் யோசனையில் இருந்த சுவேகா, 'நாங்கள் நோத்துக்குத்தான் போறம்,' என்றாள் முடிவோடு.

'பைத்தியக்காரத்தனமாய் கதைக்காத சுவேகா. நானும் நீயும் ஏதோ வனாந்தரத்தில தனிச்சு இருக்கிற இரண்டு மிருகங்கள் இல்லை. எனக்கும் உனக்கும் உறவுகள், சிநேகமான மனிதர்கள் என நிறையச் சமுதாயத் தொடர்புகள் இங்க இருக்குது. அதை யெல்லாம் உதறித் தள்ளிப் போட்டு நாங்கள் எங்கையும் ஓட முடியாது. அதுவும் நான் சுந்தரையும் அம்மாவையும் விட்டிட்டு... It's not possible. நீ உதைப்பற்றி இனிக் கதைக்காத.'

'நீ வராட்டியும் நான் போறதா முடிவு பண்ணீட்டன்,' என்றாள் சுவேகா.

'நீ முடிவு எடுத்துப் போட்டுத்தான் இங்க என்னோட கதைக்க வந்தனீயே?'

'எப்பிடி எண்டாலும் எடுத்துக் கொள். ஆனா நீயும் சந்தோசமா இதை ஏற்றுக் கொள்வாய் எண்டு நினைச்சு ஓடியந்தன்.'

'நீ எப்படி அந்த முடிவுக்கு வரமுடியும்? காதலும் அதால வாற உறவும் மட்டும் வாழ்க்கை இல்லை. அதைவிட நிறைய விடயங்களும் இருக்குது. என்னைப் பொறுத்தவரை காதலும் அதால வாற உறவும் எவ்வளவு முக்கியமோ அதைமாதிரியே அம்மா வும் சுந்தரும் முக்கியம். நாங்கள் இரண்டுபேரும் கட்டிப்பிடிச்சுக்

கொண்டு இருக்கிறது மட்டும் வாழ்க்கை இல்லை. என்னைப் பொறுத்தவரையில் என்ர வாழ்க்கைதான் முக்கியம். நான் அதை யாருக்காகவும் தியாகம் செய்ய முடியாது.'

'சொந்த அம்மாவுக்காக, எனக்காக... கொஞ்சமும் விட்டுக் கொடுக்க மாட்டியா?'

'நோ. யாருக்காகவும் என்ர சுதந்திரத்தை, வாழ்க்கையை விட்டுக் கொடுக்கோணும் எண்டு நான் நினைக்கேல்ல. அது அவசிய மும் இல்லை. யாரும் அப்படி எதிர்பார்க்கவும் முடியாது.'

சுமிதாவுக்கு அது மிகவும் கோபத்தைத் தர, 'நீ சரியான சுயநலம் பிடிச்சவள். சரி இப்பிடிச் சுயநலமா விட்டுக் கொடுப்பில் லாமல் கதைக்கிற நீ, எங்கையெண்டாலும் போ. ஒரேடியாப் போ. பிறகு என்னிட்ட திரும்பி வராத,' என்றாள்.

சுவேகா சுமிதாவை முறைத்துப் பார்த்துக்கொண்டு இருந்தாள். அவள் வதனம் மேலும் சிவந்து போய் இருந்தது. உதடுகள் கோபத்தில் துடித்தன. இதுவரை பிடித்திருந்த சுமிதாவின் கையை கோபத்தோடு எறிந்தாள்.

'உங்களுக்கு மாத்திரம் சுயநலம் இல்லையாக்கும். என்னை விட உனக்கு அம்மாவும் சுந்தரும் பெரிசாப் போச்சுது. நான் அம்ம ாவும் வேண்டாம் உறவும் வேண்டாம், நீ மாத்திரம் என்னோட வந்தாப் போதும் எண்டா நீ என்னைச் சுயநலக்காரி எண்டுறா. சரி, நீ சொல்லுற மாதிரியே நான் சுயநலக்காரியா இருந்திட்டுப் போறன். நீ பெரிய அன்னை திரேசாவாக இருந்து சேவை செய்துகொண்டு இரு. Farvel.' சுவேகா கோபத்தோடு எழுந்து கொண்டாள்.

'சுவேகா, எதுக்கும் நல்லா யோசி. மற்றவையின்ர உணர்ச்சி களுக்கும் கொஞ்சம் மதிப்பு குடு.'

'ம் எல்லாம் வேஷம். சும்மா நீ பசப்பிக் கொண்டு இருக்கிறா.' அவள் கோபமாகச் சென்றாள். வெளிக்கதவைப் பலமாக அடித்துச் சாத்தும் சத்தம் கேட்டது.,

சுமிதாவுக்கு என்ன செய்வது எனப் புரியவில்லை. செல் போனை எடுத்து சுவேகாவுக்குப் போன் செய்தாள். அவள் அதற்கு 'இனி என்னோட நீ கதைக்காத' எனக்கூறி தொலைபேசியைத் துண்டித்துக் கொண்டாள். சில மணித்தியாலங்களில் கோபம் அடங்க மீண்டும் வருவாள் எனச் சுமிதா எண்ணி இருந்தாள்.

அவள் அடுத்து வந்த இரண்டு நாளும் சுமிதாவின் வீட்டிற்கு வராது விட்டுவிடவே, சுமிதா சுவேகாவைத் தேடிப் போனாள்.

சுவேகாவின் அம்மா கதவைத் திறந்தா. சோகம் பரந்த அவளின் முகத்தில் சுதாரித்துக்கொண்ட ஒரு சிறிய சிரிப்பு வலுவிற்கு வந்து குந்திக் கொண்டது. சுமிதா மெதுவாக. 'சுவேகா எங்க?' எனக் கேட்டாள்.

'அவள் மேலதான் இருக்கிறாள். உன்ன தான் இப்ப பார்க்க விரும்பேல்ல எண்டு சொல்லி இருக்கிறாள். உங்களுக்க என்ன பிரச்சனையோ எனக்குத் தெரியாது. ஆனா அவள் உன்மேல சரியான கோபத்தில இருக்கிறாள் எண்டு தெரியும். அவள் தான் ஏதும் நினைச்சா அதைச் செய்யோணும் எண்டு பிடிவாதமாய் இருப்பாள். இப்பவும் அந்தக் கலைதான் அவளுக்கு ஏறியிருக்குது எண்டு நினைக்கிறன். அவளுக்கு யாரைப் பற்றியும் இனிக் கவலை இருக்காது. நீ நல்ல பிள்ளை எண்டது எனக்கு நல்லாத் தெரியும். அவள் கொஞ்சம் ஆறுதல் அடைஞ்சபிறகு போன் பண்ணச் சொல் லுறன். நீ என்ன நினைக்கிறா சுமிதா?'

சுமிதா மென்று விழுங்கிவிட்டு, 'நீங்க சொன்னாச் சரியன்ரி. நான் போயிட்டு வாறன்,' எனத் திரும்பினாள்.

'ம்...'

சுவேகாவின் அம்மா வெகுநேரமாக கதவில் நின்றவண்ணம் சுமிதா திரும்பிப் போவதைப் பார்த்துக் கொண்டு நிற்பதை, சுமிதா திடீரெனத் திரும்பிப் பார்த்தபோது கண்டுகொண்டாள். அவள்

கனத்த இதயத்தோடு, நகரமுடியாத கால்களைப் பிரயத்தனப்பட்டு நகர்த்தியவண்ணம் வீட்டே சென்றாள்.

வீட்டுக்கு வந்தபோது கதவைத்திறந்த அம்மா 'என்னவாம் சுவேகா' என்றாள்.

'எல்லாம் முடிஞ்சுபோச்சுதம்மா,' என்றவள் மேற்கொண்டு எதுவும் கதையாது மேலே சென்று தனது அறையைப் பூட்டிவிட்டுப் படுத்துக் கொண்டாள்.

சுமிதா ஒரு 70ccl Famous Grouse எடுத்துத் தரவேண்டும் என்று கமலினியைக் கேட்டாள். சுவேகாவின் பிரிவால் வாழ்க்கை வெறுத்துப் போய் இருந்தவளைக் காப்பாற்ற அந்த சில கணங்கள் வேண்டும் என்று அம்மாவை உருக்கமாக வேண்டினாள். கமலினி சிலநாள்கள் யோசித்த பின்பு இதுவே முதலும் கடைசியும் என்று கூறிச் சம்மதித்தாள்.

அம்மாவைச் கூட்டிச் சென்று Vinmonopolஇல் ஒரு 70 ccl Famous Grouse ஐ எடுத்தாள். இதன் சுவையும் எரிவும் சற்று வில்லங்கம் என்றாலும், அதிகமாகக் குடித்துக் கொண்டு இருக்க வேண்டி வராது என நோர்வே நாட்டு நண்பிகள் கதைத்ததை ஞாபகப்படுத்திக் கொண்டாள். இப்போது இருக்கும் சோகத்தில் அதைப் பரீட்சித்துப் பார்த்து விட வேண்டும் என அவள் எண்ணிக் கொண்டாள்.

கவுண்டரில் இருந்தவள் சுமிதாவை மேலும் கீழும் பார்த்தாள். அம்மாவோடு வந்ததில் சுமிதா அலட்டிக் கொள்ளவில்லை. பதினெட்டு வயது தாண்டியவர்களுக்கே மது இங்கு விற்கப்படும். கவுண்டரில் இருந்தவள் தனது பார்வையைத் திருப்பி விலையைப் பதிவு செய்யும் இயந்திரத்தில் கண்ணைப் பதித்து போத்தலின் விலைக்கோட்டுப் பகுதியை அந்த இயந்திரத்திற்குக் காட்டினாள். அது சத்தத்தோடு விலையைப் பதிவு செய்து கொண்டது.

பணத்தைக் கட்டிவிட்டு போத்தலோடு வெளியே வந்தபோது கமலினியைவிட சுமிதாவுக்கு வியர்த்துப் போய் இருந்தது. மெதுவாக தன்னை ஆசுவாசப்படுத்திக்கொண்டு போத்தலை அம்மாவிடம் இருந்து வேண்டித் தனது கைப்பையிலே பத்திரமாக வைத்துக் கொண்டு, மெதுவாக அந்த ஷொப்பிங் சென்ரரை விட்டு வெளியே வந்தாள். கமலினி மௌனமாக அருகில் வந்து கொண்டு இருந்தாள். மனதில் எரிமலையொன்று வெடித்தாலும் மௌனத்தை மாத்திரம் மொழியாக்கி அவள் சுமிதாவோடு நடந்தாள்.

சுவேகாவால் எப்படி முடிந்தது என்பதை சுமிதாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒளித்து ஒடுவதற்கு ஒரு புனிதமான உறவை ஒதுக்கித் தள்ளியது விசித்திரமாய் இருந்தது. பிரிவு என்பது வருமென சுமிதா கனவுகூடக் கண்டதில்லை. அது சடுதியாக வந்தபோது இதயம் தனது இயக்கத்தை நிறுத்தி ஊதிப் பெருத்து வெடிப்பதான வலியில் அவள் துடித்தாள். உயிரோடு கலந்துவிட்ட உறவுகூட ஒருநாள் பிரிந்து போகும் என்பதை அன்று அறிந்தபோது அவள் உயிரை விடலாமா என்று பலமுறை யோசித்தாள்.

கமலினி அன்று மாலை தொலைக்காட்சி பார்த்துக்கொண்டு இருந்தாள். சுமிதாவுக்கும் அன்று பின்னேர வேலை இருக்கவில்லை. இதுநாளும் அடைத்து வைத்திருந்ததையெல்லாம் இன்று வேண்டி வந்ததுடன் கொட்டித் தீர்க்க வேண்டும் என்கின்ற எண்ணத்தோடு அவள் இருந்தாள். அதற்கு ஏதாவது நல்ல சாப்பாடும் வேண்டும் என எண்ணிக் கொண்டாள். அதைச் செயற்படுத்த எண்ணிய வளாய்க் கமலினியைப் பார்த்து, 'அம்மா கோழிக்கால் கொஞ்சம் முதல்ல பொரிச்சுப் போட்டு ஏதாவது நல்ல சாப்பாடு சமைக்கிறியே' என்றாள்.

'சரி, நான் செய்து தாறன். இந்த வீட்டில இதுதான் கடைசியும் முதலுமா இருக்கோணும். நான் எல்லாத்துக்கும் சுதந்திரம் கொடுப்பன். இதுக்கு மாத்திரம் எந்தக் காரணத்தைக் கொண்டும் என்னிட்ட இனி வரப்பிடாது.'

8 'நிச்சயமா நான் வரமாட்டன் அம்மா.'

'நீ உதையெல்லாம் எடுத்துக் கொண்டு உன்ர ரூமுக்குப் போ. இங்க ஹோலிலையோ இல்லாட்டி வேற இடத்திலயோ இந்த ஆட்டம் இருக்கக்கூடாது.'

'சரியம்மா நீ கோழியப் பொரிச்சா. கன்னாவும் வாறம் எண்டவள். இன்னும் கொஞ்ச நேரத்தில வந்திடுவாள்.'

'ஆரடி அவள்?'

'பிறண்ட் அம்மா. அவளுக்கு உறைப்பு போடாமல் கொஞ்சம் பொரி.'

'இது எனக்குத் தேவையான வேலைதான்.'

'என்ர வேதனை தெரியும்தானே அம்மா உனக்கு.'

'அதுக்கு உதைக் குடிச்சா தீருமேடி?'

'தெரியும் அம்மா. சரி நித்தமும் கவலைப் படுகிறன்... கொஞ்ச நேரம் எண்டாலும் இண்டைக்கு நிம்மதியா இருப்பம் எண்டுதான்.'

'உது நிம்மதியைத் தராது. உதைக் குடிச்சுப் போட்டு அவளை நினைச்சு இன்னும் வேதனைப்படுவாய் பார்.'

'உனக்கு...உண்மையிலேயே பெரிய மனசு அம்மா. எங்கட நிலைமையைப் பற்றி எங்கட நிலைமைக்கே வந்து சிந்திக்கிற பக்குவம் உனக்கு மட்டும்தான் இருக்குது.'

'ஓ அதுதான் செய்யக்கூடாத உதவியெல்லாம் செய்து கொண்டு இருக்கிறன்.'

'இது first and last அம்மா. உன்மேல சத்தியமா இனி ஒருநாளும் உன்னை இந்தச் சங்கடத்துக்கு ஆளாக்கப் போறேல்ல.'

'நான் தப்புச் செய்யிற மாதிரி ஒரு பீலிங்கடி.'

'இல்லையம்மா. உனக்கு அந்தப் பீலிங் வராமல் நான் இனிப் பார்த்துக் கொள்ளுவன்.'

சிறிது போதையேறவும் சுமிதா ஒப்பாரி வைக்கத் தொடங்கினாள். சுவேகா தன்னை ஏமாற்றிவிட்டதாய் கூறிக் கூறி குமுறிக் குமுறி அழுதாள். கன்னா அவளின் அழுகையையும் ஆக்கினையையும் தாங்க முடியாது சமையல் அறைக்கு வந்துவிட்டாள். சிறிது நேரத்தில் கீழே வந்த சுமிதா அம்மாவைக் கட்டிப்பிடித்து அழுதாள். அவள் வாய் மணம் தாங்க முடியாமல் இருந்தது கமலினிக்கு. அவள் நடை தள்ளாடியது. சிறிது நேரத்தின் பின்பு தலையைப் பிடித்துக்கொண்டு இருந்தாள். பின்பு கமலி னிக்குப் போதும் போதும் என்று ஆகும் வரை சத்தி எடுத்தாள். கமலினி ஓடிஓடித் துப்புரவு செய்தாள்.

கன்னாவை சாப்பிட்ட பின்பு செல்லறில் (besment) உள்ள படுக்கையில் போய்ப் படுக்குமாறு கூற, அவள் அங்கு சென்று படுத்துக் கொண்டாள். சத்தி எடுத்த களைப்பில் சுமிதா சாப்பிடாது தூங்கிப் போய்விட்டாள். கமலினி மீதம் இருந்ததையெல்லாம் ரொயிலற்றில் ஊற்றி போத்தலைச் சொப்பிளில் போட்டாள். எல்லாம் முடித்துவிட்டு படுக்கைக்குப் போகும்போது 'பிரிவே இல்லாத உறவு இல்லையா' என்கின்ற அங்கலாய்ப்பு மாத்திரம் அவளிடம் மிஞ்சி இருந்தது.

**அ**ன்று வேலை முடிந்து கடைக்கு வெளியே வந்தபோது கரன் அங்கு நின்று கொண்டு இருந்தான். பமிலியக் கந்தோரில் சந்தித்த இரு மாதத்திற்குப் பின்பு இது நடந்தது. அவனின் பார்வையில் வழமைபோல அசுரக் கோபம் தெறித்தது. அவன் கமலினியை நோக்கி வந்தான். கமலினிக்கு என்ன செய்வது என முதலில் தடுமாற்றமாய் இருந்தது. பின்பு எதற்குப் பயப்பட வேண்டும் என எண்ணியவளாய் தொடர்ந்தும் தனது பாதையில் நடந்தாள். கரன் வேகமாக வந்து 'நில்லடி,' என்றவண்ணம் கமலினியின் கையைப் பிடித்தான். கமலினிக்கு இப்போது சற்றுக் கோபம் வந்திருந்தது.

'இப்பிடி இனிச் செய்தியள் எண்டா உங்களுக்கு besokforbud வேண்டித் தரவேண்டி இருக்கும். பிறகு பெத்த பிள்ளைகளையே பார்க்க முடியாமல் போயிடும். இனிமேலைக்கு உந்தச் சேட்டையளை என்னோட வைச்சிராதேங்கோ. விளங்குதே. நாங்கள் சிலோனில இல்ல, நோர்வேல இருக்கிறம் எண்டதாவது புரியதே?'

பிடித்த கையை கரன் வேகமாக விட்டான். கடையில் கமலினியோடு வேலை செய்யும் தூர் என்பவன் உள்ளே இருந்து நடப்பதைப் பார்த்தான். பின்பு வெளியே வந்து, 'ஏதாவது பிரச்சனையே?' என்றான்.

'இல்ல இல்ல பிரச்சனை ஒண்டும் இல்லை,' என்றான் கரன் அவசரமாக. அவன் அதை நம்ப மறுப்பவனாய் 'கமலினி?' என்றான். 'நான் சமாளிப்பன்' என்று கமலினி கூறியபின்பு அவன் உள்ளே சென்றான்.

'எல்லாம் காலம் மாறிப் போச்சுது. கண்டவன் எல்லாம் சப்போட் பண்ண வாறான் என்ன?'

'நீங்கள்தானே வேண்டாம் எண்டு விட்டிட்டு ஓடினீங்கள். பிறகு உங்கட அலுவலைப் பார்த்துக்கொண்டு போறத்துக்கு, இப்ப எதுக்கு உங்களுக்கு என்னப் பற்றின ஆராய்ச்சி?'

'அப்ப என்ர காசு மாத்திரம் வேணும். அதையும் வேண்டிக் கொண்டு என்ர பிள்ளையளப் பார்க்கேலாமலும் செய்வியாக்கும்.'

'நீங்கள் வழிமறிச்சு கலாட்டா செய்யாட்டி யார் அப்பிடிச் செய்யப் போகினம்? உங்கட பிள்ளையள விட்டிட்டு ஓடினது நீங்கள்தான்.'

'ஆ, அவ்வளவு திமிர் வந்திட்டுதே உனக்கு?' கேட்டுவிட்டு பல்லை நறுமிக் கொண்டு முன்னே வந்தவனை,

'ஓரடி எடுத்து வைச்சியள் எண்டாலும் besokforbud நான் அப்ளை பண்ண வேண்டி வரும்.'

கரன் அதே இடத்தில் நின்றான். பின்பு, 'எல்லாம் என்ர தலையெழுத்து - என்ன விஷரனாக்கிறது எண்டு நீ முடிவு பண்ணீட்டா. நல்லா சந்தோஷமா இரடி.'

'நானே அப்பிடிப் பண்ணுறன்? நீங்களா அப்பிடி ஆகோணும் எண்டு அடம்பிடிச்சா யார் என்ன செய்யிறது?'

'மூதேவி மூதேவி, உன்னில முழிக்கிறதே பாவம்,' என்று கூறியவண்ணம் கரன் கடைக்கு எதிர்த் திசையில் ஓடிப் போனான்.

கமலினி உறைந்து போய் அப்படியே சிலகணங்கள் நின்றாள். துார் அருகே வந்து 'கமலினி நீ ஓகேயா?' என்றான்.

'ஓ... ஓ... நான் ஓகே.'

'சரி' என்றுவிட்டு அவன் மீண்டும் கடைக்குள் செல்ல கமலினி வீடு நோக்கி நடக்கலானாள். ஏன் இப்படியெல்லாம் நடக்க வேண்டும் என்பது அவளுக்குப் புரியவில்லை. எந்தப் பிறவியில் என்ன பாவம் செய்தேன் என்பதையும் அவளால் ஊகிக்க முடியவில்லை.

சிறிது காலத்திற்கு முன்பு...

காட்டு வெள்ளமாகக் காலம் தடையின்றி வீறாப்போடு ஓடிக்கொண்டு இருந்தது. அது விரைவாக ஓடிவிடவேண்டும் என்பதே சுந்தரின் ஒரே வேண்டுதலாக இருந்தது. பதினைந்து வயதில் இருந்து பகுதிநேர வேலை செய்து சுந்தர் அதிக பணம் சேர்த்து வைத்திருந்தான். அவன் பணத்தை எந்தத் தேவையில்லாத காரணத்திற்காகவும் பாவிப்பதில்லை. அவனது எண்ணம் நிறைவேற வேண்டும் என்பதில் சுமிதாவும் மிகவும் ஒத்துழைப்புக் கொடுத்தாள். அவளும் தன் உழைப்பில் ஒரு பகுதியைச் சுந்தருக்காகக் கமலி னியிடம் கொடுத்து வந்தாள். கமலினியும் எதில் எல்லாம் மிச்சம் பிடிக்க முடியுமோ அதில் எல்லாம் மிச்சம் பிடித்துச் சேர்த்தாள். பணம் சேர்ந்தது. தேவைக்கு அதிகமாகப் பணம் இப்போது

வங்கியில் இருப்பது கமலினிக்கு மிகவும் நம்பிக்கை தந்தது. எதைச் சுந்தர் விரும்பினானோ அதைச் செய்யும் துணிவு அவளிடம் வந்து இருந்தது.

அவனது பதினெட்டாவது பிறந்தநாளை பல நண்பிகளை அழைத்துக் கொண்டாடினான். தான் புது மனிதனாக மாறும் எல்லைக்கோடான வயதுக் கட்டுப்பாடு அன்றோடு அழிந்து விட்டதில் அவன் பூரித்துப் போய் இருந்தான்.

சுந்தருக்கு மருத்துவர்கள் ஹோமோன் சிகிச்சை செய்து வந்தார்கள். அவன் இப்போது வெகுவாக மாறி இருந்தான். பெண்களுக்கான ஜீன்சும் சேட்டுமே அநேகம் அணிந்து செல்வான். தாய்லாந்து போய் வந்தபின்பு பெயர் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று கூறினான். கமலினியிடம் தனது புதுப்பெயரை ஒருநாள் காட்டி இருந்தான். 'ஏண்டா வேற நல்ல தமிழ்ப் பெயரா இல்லையே?' எனக் கமலினி கேட்டதிற்கு 'இது எனக்குப் பிடிச் சிருக்குது. அதோட நடைமுறைக்கும் சாத்தியமாக இருக்கும்' என்பதோடு அதற்கு அவன் முற்றுப்புள்ளி வைத்துவிட்டான்.

**கோ**டைகாலம் வந்ததும், ஒருமாத விடுமுறை எடுத்துக் கொண்டு கமலினி, சுந்தர், சுமிதா ஆகிய மூவரும் தாய்லாந்திற்குச் சென்றார்கள். விமானத்தில் சுந்தர் மிகவும் ரென்சனாக இருப்பதாய்த் தோன்றியது. அவனது எதிர்பார்ப்பு பற்றி கமலினி நன்கு அறிந்து இருந்ததில் அவனை ஆசுவாசப்படுத்தினாள். பாங்கொக் சென்று Suvarnabhumi Airportஇல இறங்கியதும் ' இவ்வளவு மோடோனா இருக்கா தாய்லாந்து?' எனச் சுமிதா வாய் பிளந்தாள். அவளுக்கு சுந்தரின் பிரச்சனை தீர்ப்பதோடு இன்னுமொரு நாடும் பார்ப்பதில் இருப்புக் கொள்ளாத சந்தோசம்.

டொக்ரர் வரன் என்னும் தாய்லாந்து நாட்டு மருத்துவரும் சில உதவியாளரும் சுந்தரை வரவேற்பதற்கு அங்கு வந்திருந்தனர். அவர்கள் தங்களை அறிமுகம் செய்தபின்பு சுந்தர் அவர்களோடு

போக, கமலினியும் சுமியும் டாக்ஸியொன்றில் Prince Palace Hotelக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஹோட்டல் எதிர்பார்த்ததைவிட வசதியாக இருந்தது. ஒரு மாதத்திற்கு எந்தக் கவலையும் இல் லாமல் இருக்க வேண்டும் எனச் சுமிதா எண்ணிக் கொண்டாள். போய்க் குளித்துவிட்டு பாங்கொக்கைப் பார்ப்பதற்காக வெளியே சென்றார்கள். ஹோர்ட்டலின் கீழ்த்தளத்திலேயே ஷொப்பிங் சென்ரர் ஒன்று இருந்தது. அதிலே உடுப்புப் பார்த்துக்கொண்டு இருக்கும்போது 'நீங்க கரன்ர மனிசியும் பிள்ளையும்தானே?' என்ற தமிழ் வசனம் கேட்டு வியப்போடு சுமிதாவும் கமலினியும் திரும்பிப் பார்த்தார்கள். அங்கே ஒரு ஆறடி உயரமான, நல்ல பருமனான ஒருவன் நின்றிருந்தான். அவனது பார்வையில் கண்ணியம் இருப்பதாக கமலினிக்குத் தென்படவில்லை. கமலினி ஒப்புக்காக 'நீங்கள்'? என்றாள்.

'நானும் கரனும் கீபிள்ல இப்ப ஒண்டா இருக்கிறம்,' என்றான் அவன்.

'ஓ...' கமலினிக்கு சற்று அதிர்ச்சியாக இருந்தது.

'கரன் உண்மையிலேயே நல்லவன்,' என்றான் அந்த மனிதன்.

'ம்... எனக்குத் தெரியும். சும்மா பழகிறதவிட வாழ்க்கையில நிறையச் சிக்கலான விடயங்கள் இருக்கும். அதை புரிஞ்சு கொள்ளுறதிலதான் நீங்கள் எவ்வளவு நல்ல மனிதராய் இருக்கிறியள் எண்டு கணிப்பிடலாம்,' என்றாள் கமலினி.

'அப்பிடியே? நீங்கள் அவனால உங்களப் புரிஞ்சுகொள்ள முடியேல்ல எண்டுறியள். அவன் என்னெண்டா உங்களுக்கு அடக்கமா இருக்கத் தெரியேல்ல எண்டுறான். எதுதான் உண்மை?'

'Tullprat (பிரயோசனம் இல்லாத கதை)' என்றாள் சுமிதா கோபத்தோடு. அவள் பார்வையில் அனல் கக்கியது.

'என்ன tullprat? எங்கட சமுதாயத்துக்கு ஏத்தமாதிரிக் கொஞ்சம் கட்டுப்பாடா ஒழுக்கமா இருக்கோணும். கண்டமாதிரியும் நடந்தா நோர்வேல இருந்தாலும் கெட்ட பெயர்தான் வரும்.'

'Hva snakker du om? (என்ன நீ கதைக்கிறா?)' எனக் கோபமாகக் கேட்டாள் சுமிதா. இந்தக் கேள்வி அவனுக்கு கோபத்தை வரவழைத்திருக்க வேண்டும். கோபத்தில் பாஷையின் பண்பு குறைந்து இருந்தது.

'என்ன பெரிய கற்புக்கரசியள் மாதிரி ஏறி விழுகிறியள்? உங்கள அவன் அடங்காப் பிடாரியள் எண்டுறது சரிதான். நான் நினைச்சா அம்மாவையும் மகளையும் இங்க வைச்சுத் தூக்க முடியும்,' என்று கூறியவன் மேற்கொண்டு அங்கு நிற்காது தொடர்ந்து சென்று கொண்டு இருந்தான்.

'போடா நாயே. Idiot. எங்க வந்து ஆரை வெருட்றா? அனா ஆவன்னா தெரியாத சனமாப் பார்த்து உந்தச் சேட்டைய வை. வா நீ நோர்வேக்கு. அங்க போலிஸ் இருக்குது தெரியும்தானே, சோமாறி' என்று கத்தினாள் சுமிதா. தமிழ்ப் படங்கள் பார்ப்பதில் கற்றுக் கொண்ட சொற்களில் சோமாறி என்பதும் ஒன்று என்பதாய்க் கமலினி எண்ணிக் கொண்டாள்.

ஷொப்பிங் சென்ரரில் நின்றவர்கள் ஒருகணம் இந்த திடீர் சத்தத்தால் என்ன நடந்தது என்று தங்களது அலுவல்களை நிறுத்திவிட்டு, விடுப்பு பார்த்தார்கள். பின்பு மீண்டும் வியாபாரத்தில் ஈடுபட்டார்கள்.

கமலினி அப்படியே விறைத்துப் போய் நின்றாள். 'கரன் உதவி செய்யாவிட்டாலும் உபத்திரவமாவது செய்யாமல் இருக்கலாம். கண்டவர்களிடமும் எங்களைப் பற்றி தரக்குறைவாகச் சொல்லுவ தால் எங்களுக்கு மட்டும் அவமானம் என நினைப்பவனை என்ன செய்ய முடியும். அது தனக்கும் அவமானம் என்பது அவனுக்குப் புரியவில்லை.' கமலினி மனதிற்குள் வெந்து கொண்டாள்.

'என்னம்மா விறைச்சுப் போய் நிக்கிறா?' என்றவண்ணம் கமலி னியைத் தள்ளிக்கொண்டு ஷொப்பிங் சென்ரரின் மறுபகுதிக்குச் சென்றாள் சுமிதா.

'இவன் என்னடி இப்பிடி வெருட்டிப்போட்டுப் போறான். ஏதாவது செய்வானோடி?'

'சும்மா இரம்மா. அவன் எங்களோடையே நிண்டு கதைக்கேலாமல் ஓடுறான். சும்மா குரைக்கிற நாயெல்லாம் கடிக்குமே?' என்றாள் சுமிதா.

'கொப்பர் ஏன் இப்பிடிச் செய்யிறார் எண்டுதான் தெரியேல்ல.'

'எல்லாம் மண்டப் பழுதுதான்.'

அன்றைய பொழுதை அவன் உருக்குலைத்தது கமலினிக்கும் சுமிதாவுக்கும் வேதனை தந்தது. அவர்களால் அதிக நேரம் நின்று உடுப்பு பார்க்கும் மனநிலை இருக்கவில்லை. சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொண்டால் அலுப்புத் தீரும் என எண்ணியவர்கள் அதற்கான வழியைப் பார்த்தார்கள். அவர்கள் நின்ற இடத்தில் நல்ல சாப்பாட்டுக் கடைகள் இருப்பதாய்த் தெரியவில்லை. சுமிதா McDonaldsஇல் சாப்பிட்டால் நல்லாய் இருக்கும் என்றாள். பின்பு இருவரும் ஒரு வாடகைக் காரில் MBK சென்ரருக்குச் சென்று அங்கு இருந்த McDonaldsஇல் சாப்பிட்டுவிட்டு திரும்பி ஹோட்டலுக்கு வந்து படுத்துக் கொண்டார்கள்.

அடுத்தநாள் காலைச் சாப்பாட்டை ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு ஆஸ்பத்திரிக்கு அவசரமாக வாடகைக் கார் ஒன்றைப் பிடித்துக் கொண்டு சென்றார்கள். வாடகைக் காரால் இறங்கி அவசரமாக றிசப்சனில் சுந்தரின் அறையைக் கேட்டு அறிந்து கொண்டு போனபோது, அங்கு அவனது மருத்துவ அறிக்கைகளைப் பரிசோதித்துக் கொண்டு இருந்தார்கள். அங்கே இவர்கள் போனவுடன் சுமிதா ஒரு தாதி என்பதைச் சுந்தர் ஏற்கனவே கூறி இருந்ததால் அவர்களது சந்தேகங்கள் பலதை சுமிதாவிடம் கேட்டு அறிந்து கொண்டார்கள். அதன்பின்பு மனோதத்துவ மருத்துவருடனான சந்திப்பு நடந்தது. சுமியும் கமலினியும் வெகுநேரம் காத்திருக்க

வேண்டி வந்தது. அதன் பின்பு சுந்தரை ஒப்றேசன் செய்வதற்கான மருத்துவமனைப் பகுதிக்கு அழைத்துச் சென்றார்கள். அப்படி அழைத்துச் செல்லும்போது 'நீங்கள் வந்து இனி என்ன செய்யப் போறியள்? நாளைக்கு வந்து பாருங்கோவன்' என்றான் சுந்தர். கமலினி அதை மறுத்துவிட்டு அங்கு காத்திருந்தாள். அம்மாவையும் அழைத்துக்கொண்டு மீண்டும் ஹோட்டலுக்கு சுமி வந்தபோது இரவாகி இருந்தது. சுந்தர் அவனில் இருந்து அவளாகி இருப்பான் என கமலினி எண்ணிக் கொண்டாள். அது அவளுக்கு புதிய பிரசவ மாய்த் தோன்றியது.

அடுத்தநாள் காலை போனபோது சுந்தர் மிகவும் வதங்கிப் போய் இருந்தான்; இல்லை இருந்தாள். அம்மாவைப் பார்த்ததும் கண்களால் பொலபொலவென முத்துக்கள் உதிர்ந்ததில் கமலி னிக்கும் சுமிக்கும் சங்கடமாய்ப் போய்விட்டது. கமலினி அவளது கையைப் பிடித்தவண்ணம், 'என்ன செய்யுது பிள்ளைக்கு?' என்றாள்.

'வலி தாங்க முடியல்ல அம்மா. கற்பனை செய்து பார்க்க முடியாத வலியாய் இருக்குதம்மா' என்றபோது மீண்டும் அவளுக்கு கண்ணீர் வந்துவிட்டது.

சுமிதா வெளியே சென்று நேர்சோடும் டொக்ரரோடும் கதைத்தாள். அவர்கள் மருந்தின் அளவு அதிகமாகப் போய்விடும் என பயப்படுவதாய் வந்து கூறினாள். பின்பு தனது வாதத்தால் வேண்டி வந்த ஒரு சிறிய குளிசையை அவளிடம் கொடுத்தாள். அதை வேண்டி 'அவள்' விழுங்கிக் கொண்டாள்.

பின்பு சிறிது நேரத்தில் மீண்டும் 'அம்மா' என்றாள்.

'என்ன' என்றாள் கமலினி.

'எனக்கு இங்க இருந்து நிறைய உடுப்புகள் வேண்டிக் கொண்டு போகோணும்.'

'தாராளமா வேண்டுவம். 60 கிலோ கொண்டு போகலாம் தானே. விரும்புறதை வேண்டிக்கொண்டு போவம்,' என்றாள் கமலினி.

'நல்ல வடிவான உடுப்புகள் பார்த்து எடுக்கோணும்.'

'எடுப்பம். முதல்ல காயம் ஆறட்டும். பிறகு நடக்கத் தொடங்கு. அதுக்குப்பிறகு எல்லாம் பார்த்து எடுப்பம்,' என்றாள் கமலினி.

பேசிக்கொண்டு இருந்ததில் நேரம் சொல்லாமல் கொள் ளாமல் களவாக ஓடிவிட பசி சுமிதாவின் வயிற்றை செல்லமாகக் கிள்ளத் தொடங்கியது. அப்போது நர்ஸ் ஒருத்தி உள்ளே வந்தாள். அவள் சுந்தருக்கு மேல் கழுவி பெட்சீட்டும் மாற்றிவிடுவதாகக் கூறினாள். சுமிக்கும் வெளியே போய்ச் சாப்பிட்டால் நல்லா இருக்குமெனத் தோன்றியது. அவள் அதை கமலினிக்குக் கூற அவளும் புறப்பட்டாள்.

ஆறாவது நாள் கட்டைப் பிரித்து பரிசோதித்த பின்பு 'அவளை' ஹோட்டலுக்குக் கூட்டி வந்தார்கள். 'அவள்' அம்மாவை யும் சுமிதாவையும் தனது புதிய பெயரைக் கூறியே அழைக்க வேண்டும் என்றாள். சுமிதாவும் அம்மாவும் கட்டாயமாக அப்படிச் செய்வதாக ஒப்புக் கொண்டு, அப்படியே செய்யத் தொடங்கி இருந்தார்கள்.

அவள் தொடர்ந்து வந்த நான்கு நாள்களும் அறையில் இருந்தாள். பின் ஐந்தாவது நாள் அவளை வெளியே அழைத்துச் சென்றார்கள். அவளுக்கும் தாய்லாந்தைப்பற்றி மிகவும் நல்ல அபிப்பிராயமே ஏற்பட்டு இருந்தது. அடுத்தநாள் இவளை நன்கு பரிசோதித்தபின்பு அவள் பெண்ணாக மாறியதற்கான அத்தாட்சிப்பத்திரம் தரப்பட்டது. அது அவளுக்குக் கொடுத்த மகிழ்வைப் பார்த்து கமலினி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

அடுத்த நாள் புக்கம் புறப்பட்டுச் சென்றார்கள். அவள் இப்போது பெண்களின் ஆடைகளை மட்டும் அணியத் தொடங்கி இருந்தாள். கடவுச் சீட்டில் ஆண் என்று இருந்தது சிலவேளைகளில் சிக்கலைத் தந்தது. அப்படியான இடங்களில் டொக்ரர் தந்த அத்தாட்சிப் பத்திரத்தைக் காட்டவேண்டி இருந்தது. நோர்வே வந்ததும் பெயர் மாற்ற வேண்டும் எனவும் அவள் கூறிக் கொண்டாள்.

புக்கத்தில் சுனாமியின் சில சுவடுகளே மிச்சமாக எஞ்சி இருந்தன. வெளிநாட்டவர் திருவிழாவிற்கு வந்தவராய் அங்கு குவிந்து போய் இருந்தார்கள். மாலையில் சில வீதிகளில் போக முடியாதவாறு சன நடமாட்டமாய் இருந்தது.

புக்கத்தால் திரும்பி வந்து பாங்கொக்கில் பார்க்க வேண்டிய இடங்களைப் பார்த்தார்கள். அதன்பின்பு அங்கு நின்ற காலம் எல்லாம் MBK சென்ரரில் உடுப்பு எடுப்பதிலேயே அதிகமாகச் செலவாயிற்று. ஒரு நாள் அங்கே இருந்த தியேட்டரில் ஆங்கிலப் படம் ஒன்று பார்த்துவிட்டு வரும்போது திடீரென கமலினியின் தோள்மூட்டைப் பிடித்துத்திருப்பினாள். பின்பு முன்னே போய்க் கொண்டு இருந்த அந்தச் சோடியைக் காட்டினாள். அன்று Prince Palace Hotel இன் கீழ் இருந்த ஷொப்பிங் சென்ரறில் 'என்ன கற்புக்கரசியள் மாதிரி ஏறிவிழுகிறியள்' என்றவன் தனது கற்பை யார் யாருக்கோ எல்லாம் காசு கொடுத்து விற்றுக் கொண்டு சென்றான்.

'நோர்வேல இவனைக் காணட்டும்...' எனப் பல்லை நறுமினாள் சுமிதா.

'விடடி, நாய் கடிக்குதெண்டு நாங்களும் விழுந்து கடிக்க முடியுமே' என்றாள் கமலினி.

'என்ன நடந்தது?' அறியாதவளாய் அவள் கேட்டாள். பின்பு அவளுக்கு அதைப்பற்றி முழுமையாக விவரிக்க வேண்டி இருந்தது.

# 7

உறவுகள் எப்போதும் பிரிவுக்காய் காத்திருப்பதாக கமலினிக்கு உருவகம் ஆயிற்று. அது அழிக்க முடியாததாய் மனதில் பதிந்து போயிற்று. அவள் இப்போது சற்று கலங்கிப் போய் இருந்தாள்.

அன்று கமலினி தொலைக்காட்சி பார்த்துக் கொண்டு இருக்கும்போது அவள் கீழே வந்து கமலினியோடு அமர்ந்து கொண்டாள்.

'அம்மா,' 'தாயும் பிள்ளையும் என்றாலும் வாயும் வயிறும் வேறை'யாமே, உண்மையா அம்மா?' என்றாள்.

'என்னது நீ இப்படிக் கதைக்கிறா? உன்ர மனசில என்ன இருக்குது? நீ அதைத் தாராளமாக என்னிட்டச் சொல்லலாம்.'

'இல்லையம்மா. என்னதான் இங்க பிறந்து வாழ்ந்திட்டாலும் சில விஷயங்கள அம்மாவோட கதைக்க இன்னும் கூச்சமாக இருக்கிற மாதிரி ஒரு பீலிங்.'

'நீ உன்ர உணர்ச்சியக் கதைக்கப் பயப்பிட மாட்டா. அதைச் சொல்லித்தானே உன்னையே நீ

மாத்தி இருக்கிறா. இப்ப என்னத்தக் கேட்க வேணும் எண்டு நினைச்சு இந்தப் பீடிகை போடுறா?'

'இல்ல அம்மா. உங்களுக்கு முன்னாலயே யாரையும் கூட்டி வந்து சுதந்திரமாக இருக்க முடியும் என்ற மாதிரி எனக்குத் தெரியேல்ல. எனக்கு ஏதோ அது பெரிய சங்கடமா இருக்குது.'

'அப்ப வேற வீடு எடுத்துக் கொண்டு போகப் போறியோ?'

'ம்...' தலையைக் குனிந்து கொண்டு இருந்தாள் அவள்.

'சரி உன் விருப்பப்படி செய். ஆனா ஒரு விசயம். நீ யாரைக் கூட்டியாற எப்படி இருக்கிறா எண்டதில நான் ஒருநாளும் தலை யிடமாட்டன். அந்த நாகரிகம் கூடத் தெரியாதவள் இல்ல உன்ர அம்மா.'

'அம்மா, உன்னைப் பற்றி தெரியாமல் நான் இதைக் கேட்க கேல்ல. என்னாலதான் ஏனோ அப்பிடிப் பீல் பண்ண முடியாமல் இருக்குது. ஏன் எண்டு எனக்கே புரியேல்ல.'

'சரி விடு. நீ வீட்டை எடுத்துக் கொண்டு போ. உனக்கு எப்ப வேணும் எண்டாலும் திரும்பி அம்மாகிட்ட வரலாம்.'

'அம்மா நீ என்னைத் தப்பா நினைக்கக்கூடாது.'

'நான் அப்பிடி நினைக்கமாட்டன். என்ர பிள்ளைய என்னா லேயே புரிஞ்சு கொள்ள முடியாதே? எனக்கு ஒவ்வொருவரின் மனசும் ஓரளவுக்கு எண்டாலும் புரியும். நீ பயப்பிடாமல் எதை வேணும் எண்டாலும் செய். அம்மாவின்ர சப்போட் எப்பவும் உனக்கு இருக்கும்.'

'தாங்க்ஸ் அம்மா.' அம்மாவுக்கு ஒரு முத்தம் வைத்தாள்.

'சரி, வீட்டுக்கு என்ன செய்யிறதா உத்தேசம்?' எனக் கமலினி கேட்டாள்.

'எனக்கு நல்ல சம்பளம் வருகுதுதானே அம்மா. நான் ஒரு Leilighet வேண்டுவோம் எண்டு இருக்கிறன். கொஞ்சம் சென்ரராய் இருந்தா வேலைக்குப் போய் வாறது ஈசியா இருக்கும்.'

'ம்... அது நல்ல ஐடியாதான். அப்ப பேப்பரில வாற வீடுகளைப் பார்த்து Visning க்குப் (வீடு பார்த்தல்) போய்வா. நல்லா பிடிச்சா ஒண்டை வேண்டிப் போடு. வட்டிக்கும் வருமானத்தில் கழிவு தாறதோட சில வருஷத்தில ஒரு வீடும் சொந்தமாப் போயிடும்.

'ஓம் அம்மா, நானும் அதைத்தான் நினைச்சன்.'

கமலினி அவளை வீடு மாறச் சொல்லியபின்பு அவளும் சென்றுவிட சுமிதா மட்டுமே கமலினியோடு இருந்தாள். அவள் இல் லாத குறை ஆரம்பத்தில் மிகவும் நெஞ்சைப் பிழிவதான வெறுமை யைத் தந்திருந்தது. அதற்காக அவளது சுதந்திரத்தில் தலையிட கமலினி சிறிதும் விரும்பவில்லை.

பிறந்த பிள்ளைகள் பெற்றோரை விட்டுப் பிரிந்து போகும் போது இதயமே பிரிந்து போவதான வேதனையை அநுபவிக்க வேண்டி இருப்பதாக அவள் உணர்ந்து கொண்டாள். சிலவேளை களில் அவள் இன்னும் வீட்டில் இருப்பதாக கமலினி நினைத்துக் கொண்டு சமைத்து முடிந்ததும் சாப்பிட வருமாறு அழைப்பாள். பின்பு தனது பிழையை உணர்ந்து கொண்டு வெறுமையாகச் சிரிப்பாள்.

ஒரு நாள் சுமிதா கமலினியின் இந்தச் செயலைக் கவனித்துவிட்டு 'உனக்கு தொடர்ந்தும் கவலையாக இருந்தால் சொல்லம்மா. நான் திரும்ப அவளைக் கூட்டியாறன்' என்றாள். கமலினி துடித்துப் பதைத்து அதை உறுதியாக மறுத்துவிட்டாள்.

காலம் போகப் போக கமலினி இந்தப் புதிய வாழ்க்கையைப் பழக்கப் படுத்திக் கொண்டாள்.

**அ**ன்று கமலினி கோயிலுக்குப் போக வேண்டும் என்று ஒரே பிடியாக நின்றாள். அம்மறாட்டில் இருந்த முருகன் கோயிலுக்கு ஒருவாறு சுமிதாவோடு சென்று இருந்தாள். இந்தக் கோயில்களைப் பற்றி சுமிதாவுக்கு நன்கு தெரியும். வழிபாட்டுத் தலங்களைக்கூட அரசியலாக்கி, பின்பு பணம் பறிக்கும் இயந்திரம் ஆக்கிய கேவலம்

இங்கு நடைபெறுகிறது. பொதுநலம் என்கின்ற பெயரில் பல சுயநல முதலைகளின் ருத்திரதாண்டவம் எங்கும் தலை நீட்டுகிறது. மனதாலும் செயலாலும் சுத்தமில்லாத இடத்தில் மனிதனே இருக்க முடியாது என்றால் கடவுள் எப்படி இருப்பார்? எனச் சுமிதா எண்ணிக் கொள்வாள். அவள் இப்படியான இடங்களை விரும்புவதில்லை. நாங்கள் மற்றவர்களிடம் ஏமாறுவதற்கு சந்தர்ப்பம் கொடுக்கக்கூடாது என்பதில் அவள் மிகவும் கண்டிப்பாக இருந்தாள்.

கோயிலுக்கு வந்தபின்பு கமலினி விழுந்து விழுந்து கும்பிட்டாள். சுமிதா மனிதர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றாள். அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அவன் அங்கு வந்திருந்தான். அதுவும் ஒரு தமிழ்ப் பெண்ணோடு வந்து இருந்தான். திருமணம் செய்திருக்க வேண்டும் என்பது சுமிதாவுக்குப் புரிந்தது. அவளுக்கு தங்களை அவன் தாய்லாந்தில் வைத்துக் கேட்ட கேள்விகள் என்றும் குறைந்து போகாத வலியுடன் இதயத்தில் அறையப்பட்ட ஆணிகளாய்த் துருத்திக் கொண்டு இருந்தன. சுமிதா மீண்டும் பார்த்தாள். அவனேதான். யாரிது? எப்போது திருமணம் செய்து கொண்டான்? அவள் பதில் இல்லாத கேள்விகளைத் தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

சுமிதா கொதிப்போடு வேகமாக அவர்களை நோக்கிச் சென்றாள். அவன் சுமிதாவைக் கண்டவுடன் சற்றுத் திகைத்துப் போய்விட்டான். சுமிதா துணிவாக அவனுக்கு முன்னே போய் நின்றாள். சுமிதாவின் பார்வை ஈட்டிகளாய் வந்து நெஞ்சைப் பிளப்பதாக அவன் அவஸ்தைப்பட்டான். தப்பி ஓடமுடியாத அந்தரிப்பில் அவன் நின்றான்.

‘ஹலோ அங்க தாய்லாந்தில் வைச்சு வீரம் பேசி , சவால் விட்டீங்கள். இப்ப இங்க ஏலுமெண்டா செய்யுங்கோ பாப்பம்!’

‘நான் ஒண்டும் தப்பா சொல்லேல்லையே.’

தகராறைக் கண்டவுடன் மற்றவர்களும் அங்கு வந்து சேர்ந்து கொண்டார்கள். அவனுக்கு அது அவமானமாய் இருந்தது. சுமிதா எதைப் பற்றியும் கவலைப்படாதவளாய் தொடர்ந்தும் பேசினாள்.

'அடி செருப்பால. அம்மாவையும் மகளையும் இங்கயே வைச்சு தூக்க முடியும்' எண்டு தாய்லாந்தில நிண்டு கொக்கரிச்சியளே. இப்போ தூக்குங்க பாப்பம். பொம்பிளையள தனியாக் கண்டா மாத்திரம் சவால் விடுவியளாக்கும்?' என்றாள் சுமிதா.

'நான் அப்பிடி ஒண்டும் சொல்லேல்ல,' என்றான் அவன்.

கமலினி எப்போது வந்தாள் என்பது தெரியவில்லை. அவள் சுமிதாவுக்கு பக்கபலமாய் வந்தாள்.

'இவர் தாய்லாந்தில் வைச்சு அப்பிடிச் சொன்னவர். இப்ப நல்ல மனிசாரா நடிக்கப் பார்க்கிறார்,' என்றாள் கமலினி.

'ஓ இவர் நல்ல மனிசர்தான். அதை நாங்கள் MBK சென்ரருக்க பார்த்தம்,' என்றாள் சுமிதா.

அவன் இப்போது கள்ளனைப் போன்று முழிக்கத் தொடங்கி இருந்தான்.

'என்ன பார்த்தியள்?' இதுவரை அமைதியாக இதைப் பார்த்துக் கொண்டு நின்ற அவனோடு வந்த பெண் கேட்டாள்.

'வேண்டாம் சுமிதா. வா நாங்கள் போவம். ஏன் இன்னொரு குடும்பத்துக்கு பிரச்சனைய ஏற்படுத்துவான்?' என்றாள் கமலினி.

'இல்லை, சொல்லிப்போட்டுப் போங்க,' என்றாள் அந்தப் பெண் திடமாக.

'இல்ல, ஆக்களுக்க அதெல்லாம் வேண்டாம்,' என்றாள் சுமிதா.

'அதெல்லாம் பறுவாய் இல்லை. எனக்கும் இவரைப் பற்றிக் கொஞ்சம் தெரியும்,' என்றாள் அந்தப் பெண்.

'எதெண்டாலும் சரி. நீ இப்ப வா சுமிதா. நாங்கள் ஒரு குடும்பத்தைக் கெடுத்த மாதிரி இருக்கக்கூடாது,' என்றவண்ணம் கமலினி சுமிதா கையைப் பிடித்து இழுத்தாள். சுமிதாவின் மறுகையைப் பிடித்துக் கொண்ட அந்தப் பெண் 'இல்ல, நீங்கள் சொல்லிப் போட்டுத்தான் போகோணும்' என்றாள்.

சுமிதா திடீரென அவளின் காதுக்குள் ஏதோ கூறினாள். அந்தப் பெண் சுமிதாவின் கையை விட்டாள்.

'Take care,' என்றுவிட்டு சுமிதா அம்மாவோடு காரை நோக்கி நடந்தாள்.

'தேவையில்லாமல் ஒரு குடும்பத்துக்க பிரச்சனைய உண்டு பண்ணி இருக்கிறா. இப்பிடி எல்லாம் செய்யக்கூடாதடி.' என்றாள் கமலினி.

'மற்றவைய குற்றம் சொல்லுறவை முதல்ல தாங்கள் சுத்த மாக இருக்கோணும். இல்லாட்டி இப்படித்தான் இருக்கும். தானே ஒரு கேடுகெட்டவனாய் இருந்துகொண்டு எங்களைக் குற்றம் சொல்லக் கூடாது. அவனுக்கு ஒரு பாடமாக இருக்கட்டும். அதோட மற்றவைக்கும் ஒரு எச்சரிக்கையாக இருக்கட்டும்.'

'எனக்கு ஏதோ இதெல்லாம் நல்லதாத் தெரியேல்ல.'

'சரி வாண புறுபுறுக்காமல். நீ இன்னும் பழைய காலத்து மனிசியாகவே இருக்கப் பார்க்கிறா,' என்று கூறிய சுமிதா காரில் ஏறி அமர்ந்து கொண்டாள்.

சுமி போன் பண்ணி விடயத்தைக் கூற நீனா பதறியடித்து வந்து இருந்தாள். சுமி அவளிடம் கடிதம் ஒன்றைக் காட்டினாள். அவள் மிகவும் கோபமாகவும் நிம்மதியின்றியும் இருந்தாள். அப்படிக் கடிதத்தைக் காட்டும்போது நீனா அதைத் தொடாதவாறு தடுத்து விட்டாள். போலிஸில் கொடுக்கும்போது ஏதாவது கைரேகை இருந்தால் கண்டுபிடிக்கும் சந்தர்ப்பத்தை கெடுத்துவிடக்கூடாது என அவள் நீனாவுக்கு பின்பு விளக்கம் கூறினாள். அது மிகவும் சரியென நீனாவும் ஒப்புக் கொண்டாள். அது தமிழில் கணிணிமூலம் எழுதிப் பிறிண்ட செய்யப்பட்டிருந்தது. 'ஒழுக்கம் கெட்டு அலையும் உங்களை நான் விரைவில் கொலை செய்வேன்' என்கின்ற வசனம் மட்டுமே அந்தக் கடிதத்தில் மீண்டும் மீண்டும் எழுதப்பட்டிருந்தது.

நீனாவுக்கு என்ன சொல்வது எனப் புரியவில்லை. 'என்ன செய்யிறது அக்கா?' என்றாள்.

'போலிஸிட்ட குடுக்கத்தான் வேணும். இதைச் சாதாரணமாக எடுக்கேலாது. இது ஒரு கொலை மிரட்டல்தானே? துணிவு இருந்தால் நேர வந்து சொல்ல வேணும். ஒளிச்சு ஒளிச்சு முதுகெலும்பு இல்லாதவங்கள் ஆரோ எங்களோட சேட்ட விடுறாங்கள். ஆம்பிளைத் துணையில்லாமல் தனியா இருக்கிறம் எண்ட துணிவு அவங்களுக்கு. இதுக்கு எப்பிடி எண்டாலும் ஒரு முடிவு கட்டோணும்.'

'ஓமக்கா, கட்டாயம் கொம்ப்ளையின் பண்ணத்தான் வேணும். ஆனால் உந்த போலிஸிலதான் எனக்கு ஒரு நம்பிக்கையும் இல்ல. சுரேனையே வெளியில விட்டிட்டாங்கள். இந்தக் கடிதத்தைப் பெரிசா எடுப்பாங்களே?'

'ச்... வொறி பண்ணாத. அவங்கள் ஏதாவது காரணத்தோட விட்டிருப்பாங்கள். சிலவேளை சிவில்ல ஆள ஃபலோ பண்ணு வாங்கள்,' எனச் சுமி சமாதானம் கூறினாள்.

'யார் செய்திருப்பினம் அக்கா? உவன் சுரேன்தான் செய்திருப்பான் இல்லையே?'

'தெரியல்ல. ஆரெண்டு சொல்லுறது லேசு இல்லை. தாய்லாந்தில் பிரச்சனைப்பட்ட சுகுமாரா இருக்கலாம். அல்லது வேறு யாராயும் இருக்கலாம். இது எங்களால ஊகிக்கக் கூடிய விஷயம் இல்லை. போலிஸ்தான் கண்டுபிடிக்கோணும்' என்றாள் சுமி.

'உனக்கு எப்பிடி அவனுக்கு சுகுமார்தான் பெயர் எண்டு தெரியும்?' என்றாள் நீனா.

'அம்மாவத் திரும்ப கோவிலுக்கு கூட்டிக் கொண்டு போகேக்க அவன்ர பெண்டாட்டியே வந்து என்னோட கதைச்சாள். ஆள் எல்லாத்தையும் ஒத்துக் கொண்டுட்டான். அப்பதான் அவன்ர பெயர் சுகுமார் எண்டு தெரிஞ்சது. ஆனா யாரையும் நம்பமுடியாது. மனசுக்க என்ன வைச்சிருக்கிறான் எண்டு யாருக்குத் தெரியும்?'

'அப்ப இப்ப என்ன செய்யப் போறியள்?' எனக் கமலினி கேட்டாள்.

'போலிஸில கொண்டு போய்க் குடுக்கப் போறம்,' என்றாள் சுமி.

'சனங்கள் எங்களச் சும்மா இருக்க விடுகுதுகள் இல்லை. ஏதோ நெடுகப் பிரச்சனை குடுத்துக்கொண்டே இருக்குதுகள். மனிசரில கொஞ்சம்கூட வித்தியாசம் இருக்கக்கூடாது. அப்பிடி இருந்தா அதை மற்றைய மனிசரால புரிஞ்சுகொள்ளவே முடியு தில்லை. என்ன சனங்கள் இதுகள்?' என்றாள் கமலினி சலிப்போடு.

'சனத்துக்கெல்லாம் பயந்தா வாழேலாது அம்மா. உந்த தமிழ் சனத்தைப் பற்றி நாங்கள் கேயார் பண்ணிக்கொண்டு இருந்தா சும்மா எங்க நிம்மதியைக் கெடுக்கிற மாதிரிதான் இருக்கும்,' என்றாள் சுமி.

பின்பு சுமியும் நீனாவும் புறப்பட்டு குரன்லாண்டுக்குச் சென்றார்கள். அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற கமலினிக்கு நெஞ்சு பூராவும் வலித்தது. எதற்காக இந்தச் சோதனைகள் என்பது அவளுக்குப் புரியவில்லை.

# 8

ஒரு வெள்ளிக்கிழமை மாலை நேரம். அந்தி சாயும் மம்மல் வேளை. சுமிதா வேலைக்குப் போயிருந்தாள். ஐஸ்கிறீம் விற்கும் வான் மணி யடித்துக் கொண்டு போகும் சத்தம் கேட்டது. கமலி னிக்கு சந்திக்குப் போய் ஏதாவது ஐஸ்கிறீம் வாங்கி வரவேண்டும் போல இருந்தது. அவள் பணத்தை எடுத்துக் கொண்டு கதவைப் பூட்டிவிட்டு சந்திக்குச் சென்றாள். சந்தியில் நிறுத்தி இருந்த ஐஸ்கிறீம் வானுக்குப் பின்பக்கமாக ஒருசிலர் நின்று தமக்கு விருப்பமான பக்கேற்றைத் தெரிவு செய்து கொண்டு இருந்தார்கள்.

சுவேகாவின் அம்மா உலாத்திவிட்டு வரும்போது கரன் வந்துகொண்டு இருப்பதைக் கவனித்துவிட்டாள். பின்பு எதற்கும் அவன் முன்னே சென்றால் தேவையில்லாத பிரச்சனை உண்டாகும் என்பதால், சிறிது அந்த இடத்திலேயே நின்று கொண்டாள். பின்பு மெதுவாக சிறிது தூரம் விட்டு அவனைத் தொடர்ந்து நடந்து வந்தாள். கரன் சுமிதாவின் வீட்டிற்குச் சென்றது அவவுக்கு பெரும் வியப்பையும் கவலையையும் உண்டு பண்ணியது.

கமலினி நூற்றி எண்பது குரோனுக்கு ஐந்துவகையான ஐஸ்கிறீம் கொண்ட ஒரு பக்கேற்றை வாங்கினாள். அதில் ஒவ்வொரு வகையிலும் ஆறுப்படி இருந்தது. ஐஸ்கிறீமோடு திரும்பி வந்து கதவைத் திறப்பதில் அவள் மும்முரமாய் இருந்தாள்.

'என்ன ஆத்தைக்கும் மகளுக்கும் இப்ப ஐஸ்கிறீம்தான் சாப்பாடுபோல இருக்குது?' என்ற குரலைக் கேட்டு சடுதியாகத் திரும்பியவள் கரனைக் கண்டு சற்றுத் திகைத்துப் போய்விட்டாள். ஒரு கணம் அவளுக்கு என்ன செய்வது எனப் புரியவில்லை. உள்ளே வரச் சொல்வதா அல்லது கதவைப் பூட்டுவதா என்பதே புரியாத திகைப்பில் தொடர்ந்தும் அசையாது நின்றாள். எதற்காக இன்று வந்தான் என்பதும் அவளுக்குப் புரியவில்லை.

'என்ன உள்ள வரச் சொல்லமாட்டியே' என்ற வண்ணம் கரன் கதவை உள்ளே தள்ளிக்கொண்டு புகுந்தான். ஒன்றும் செய்ய முடியாதவளாய் கதவை மீண்டும் சாதுவாகச் சாத்திவிட்டு பின்னே சென்றாள்.

'என்னடி வீட்ட வந்தாலும் விசாரிக்க மாட்டா போல இருக்குது?' என்றான் கரன்.

'அப்பிடி இல்ல...'

'அப்ப? இப்ப வாயில கொழுக்கட்டையே வச்சிருக்கிறா?'

'ஏன் சும்மா இப்ப வில்லங்கத்துக்கு கதைக்கிறியள்.'

'ஓ நான் வில்லங்கத்துக்கு கதைக்கிறன். நீ எல்லாம் அறிஞ்சு சமாதானம் செய்யிறா!'

'இப்ப என்னத்துக்கு வந்தநீங்கள்? சண்டை பிடிக்கவே இஞ்ச வந்தநீங்கள்? நீங்கள் இஞ்சயெல்லாம் வரக்கூடாது எண்டெல்லே சொல்லி இருக்கிறாங்கள்?'

'ஏனடி உங்கட ஆட்டத்தையெல்லாம் பாக்கிறன் எண்டு பயமா இருக்குதே? அதுக்கே வரக்கூடாது எண்டுறா? உங்கட ஆட்டம் ஊருக்கே தெரிஞ்சதுதானே?'

'வாய அடக்கிப் பேசுங்க. நாங்களும் எங்கட பாடும் எண்டு இருக்கிறம். தேவையில்லாமல் நீங்களும் பிரச்சனைக்கு வராதேங்க.'

'ஓமடி... நீயும் உன்ர பாடும் எண்டு இருக்கிறியே?' பெடியத் தாய்லாந்துக்கு இரகசியமாக எதுக்கெடி கூட்டிக்கொண்டு ஓடிப் போனனீயள்? அங்க அவனை அலங்கோலப்படுத்திக்கொண்டு வந்திருக்கிறியள்? பெட்டைய வேற நீ ஏத்திவிட்டு கண்டவனோட சண்டைபிடிக்க வைக்கிறா என்ன?'

'ஓ உங்கட பிறண்ட் சொல்லிட்டாராக்கும். நீங்களும் தூக்கிக் கொண்டு இங்க கதைக்க வந்திட்டியளாக்கும்.'

'ஆட்டக்காரியளாட்டம் திரிஞ்சா எல்லோரும் கதைப்பினம் தான். வாறியா எண்டுகூடக் கேட்பாங்கள். உங்களுக்குதான் வெட்கம், ரோசம், மானம் எதுவும் இல்லை. வெள்ளைக்காரன் மாதிரித் திறந்து போட்டுத் திரியலாம் எண்டு நினைக்கிறியள்.'

'நீங்க வெளியால போங்க பாப்பம். பண்பாகப் பேசவே தெரியாத உங்களையெல்லாம் பார்க்கிறதே பாவம்.'

'இது என்ர வீடடி. நான் உழைச்ச காசில வேண்டின வீடடி. கோட்டும் நீயுமாச் சேர்ந்து என்ன ஏமாத்தினாப்போல உன்ர வீடாகுமே? இந்த வீட்டுக்கும் உனக்கும் ஒரு நாளைக்கு நான் கொள்ளி வைப்பன். அப்ப தெரியும் நான் யாரெண்டு. யாரையும் தட்டிச் சுத்திப் போட்டு, பண்பைப் பற்றி நீ கதைக்கிறாயாக்கும்? பெரிய றோயல் பமிலி எண்ட நினைப்பு உனக்கு. அப்பக்காரியின்ர குடும்பத்துக்கு இங்க பெரிய அரண்மனை தேவைப்படுகுது. இதுக்க ஒரு பெரிய ரீவி செற்று...' கூறியவண்ணம் கரன் பாய்ந்து ரீவிக்கு உதைத்தான். அது பின்பக்கமாகச் சரிந்து விழுந்தது.

'ஆ எனக்கு நீ வாய் காட்டுறியே?' பல்லை நறுமியவண்ணம், கமலினியை நோக்கி அவன் நெருங்கினான். கமலினிக்கு கரன் ஏதோ கெட்ட நோக்கத்தோடு வந்திருப்பது புரிந்தது. கொலை செய்து

விடுவானோ என்கின்ற பயம் திடீரென தாக்கியது. அவள் அவனிடம் பிடிபடாது சமையல் அறைக்குள் ஓடினாள். கரன் விடுவதாய் இல்லை.

'எங்கயடி ஓடறா? இஞ்சவா மூதேவி. உனக்கு இண்டைக்கு முறையான பாடம் படிப்பிக்காமல் நான் போக மாட்டன்...'

கரன் சமையல் அறைக்குள் கோபமாகப் போனான். அங்கே கமிலினி நின்ற கோலம் அவனுக்கு சற்றுத் தயக்கத்தையும் கோபத்தையும் சிரிப்பையும் வரவழைத்திருந்தது. அவள் கத்தி யொன்றைக் கையில் வைத்திருந்த வண்ணம் நடுங்கிக் கொண்டு இருந்தாள. கரனுக்கு முதலில் சற்று தயக்கமாக இருந்தது. பின்பு கோபம் அதைத் தின்று தீர்த்தது. அதன் மூர்க்கத்தில் 'என்ன... குத்திப் போடுவியே? குத்தடி பார்ப்பம்' என்று கத்தினான்.

'கிட்ட வராதேங்க. உண்மையாகவே நான் குத்திப் போடுவன்.' கமலினிக்கு அழுகை வந்துவிட்டது.

'அட உவ குத்தப் போறாவாம்.' கரன் அட்டகாசமாகச் சிரித்தான். சிரித்ததில் அவனுக்கு கண்ணீர் வந்து இருந்தது.

'என்ர கனவில கடவுள் நேற்று வந்து தன்னிட்ட வரச் சொல்லிக் கேட்டவர். பாவப்பட்ட சனத்துக்கை எல்லாம் நீ இருக்காமல் என்னோடு வந்திடு எண்டவர். குத்து நான் போறனா எண்டு பாப்பம். கடவுளைச் சந்திக்க எனக்கு ஆசையா இருக்கடி. குத்து.'

கரன் மிகவும் நெருங்கினான்.

'ஐயோ கடவுளே! இனியும் கிட்ட வந்தியள் எண்டா நான் குத்துவன். ஓ சொல்லிப் போட்டன். பிறகு ஊரெல்லாம் சங்கேனமாய் இருக்கும்,' கமலினி அழுதாள்.

'இந்த பாழ்பட்ட பிண்டம் இருக்கும் வரைக்கும் தானெடி சங்கேனம்? நீ பத்தினியா அதுக்கு விடுதலை தாறம் எண்டுறா? அதுக்குப் பிறகு எனக்கு ஏதடி சங்கேனம்? வாடி வந்து குத்து. இப்பிடியாவது ஒரு நல்ல காரியம் செய்.'

கமலினி செய்வதறியாது தடுமாறினாள். கரன் மிகவும் அருகில் வந்தான். கமலினி பயத்தில் கத்தியைச் சரித்து நிலம் பார்க்கப் பிடித்தாள். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி கரன் திடீரென பாய்ந்து கமலினியின் கையைப் பிடித்து முறுக்கினான். கமலினி எதிர்பார்க்காத இந்தத் தாக்குதலால் நிலைகுலைந்து கத்தியைக் கைவிட்டாள்.

கரன் அவளை இறுக்கிப் பிடித்து, 'உனக்கு இவ்வளவு துணிவு வந்துட்டுதோடி? ஆ உனக்கு இவ்வளவு துணிவு வந்திட்டுதோடி' என மீண்டும் மீண்டும் கேட்டவண்ணம் முழங்கையை மடித்து வயிற்றில் இடித்தான்.

'ஐயோ ஐயோ என்னக் கொல்லாத' எனக் கமலினி கெஞ்சத் தொடங்கினாள்.

திடீரென சாத்தி இருந்த கதவைத் தள்ளிக் கொண்டு போலிஸ் வந்தது. அவர்களோடு சுமிதா வந்திருந்தாள். அவளின் கண்களில் கோப அனல் பறந்து கொண்டு இருந்தது.

' Ikke rore deg,' எனக் கத்தியவண்ணம் பாய்ந்துவந்து போலிஸ் கரனைப் பிடித்து நிலத்தில் அழுத்தினார்கள். பின்பு விலங்கிட்டுத் தூக்கி நிறுத்தினார்கள். அவன் திமிறிக்கொண்டு நின்றான். அதைப் பார்த்த அவர்கள் கரனை வெளியே அழைத்துச் சென்றார்கள். அழைத்துச் செல்லும் போது கரன் பாய்ந்தான்.

'அப்பாவையே காட்டிக் குடுத்திட்டாயெல்லே? உனக்கு நான்தான்ரி யமன்,' கரன் கத்தியவண்ணம் திமிறிக்கொண்டு சென்றான்.

'நீங்க அப்பாவே இல்ல. எனக்கு அப்பா செத்து நிறையக் காலமாச்சுது.' சுமி குலுங்கிக் குலுங்கி அழுதாள். கமலினி அவளை மெதுவாக அணைத்துக் கொண்டாள்.

நீனா அவனைக் கண்டுவிட்டாள். அவன் வெகுநேரமாய் தங்களைத் தொடர்ந்து வருவதை அவள் அவதானித்துவிட்டாள். குரன்லாண்டில் வைத்து ஏதாவது அவமானப்படுத்தினால் நோர்வேத் தமிழர் எல்லோருக்கும் முன்னே வைத்து அவமானப்படுத்தியது போன்றாகிவிடும். இதில் இருந்து தப்பித்து விடவேண்டும் என்பது அவளது ஒரே நோக்கமாக இருந்தது. எதற்கு இதில் நின்று கிலுசகேடுப்படுவான் என்பதே அவள் ஆதங்கமாயும் அவசரமாயும் இருந்தது. அதைப் புரியாதவளாக சுமி ஆடிப்பாடி அன்னநடை நடந்தாள். சுமியையும் நீனாவையும் தெரிந்தவர்கள் ஒரு புன்னகை வீசிச் சென்றனர். அதில் முகத்திற்கு அஞ்சி வேசை யாடும் வேடச்சிரிப்பு எது, உண்மையான நட்பின் சிரிப்பு எது என்பதை அறிவது சிரமமாக இருக்கவில்லை.

ஒரு தமிழ்ப் பெடியன் விசில் அடித்துக்கொண்டு போனான். சுமிதான் நின்று ‘என்ன பெம்பிளையளக் காணேல்லயே நீ’ என்று கேட்டாள். அவன் அதற்கு நின்று பதிலளியாது அவசரமாக ஓடிப் போனான்.

நீனா சுமியின் கையைப் பிடித்து இழுத்தாள். நீனாவுக்குப் பிரச்சனைப்படுவது அறவே பிடிப்பது இல்லை. இப்போதும் சுரேனிடம் இருந்து தப்பித்துக் கொண்டால் போதும் என்கின்ற ஒரே தவிப்பில் அவள் இருந்தாள்.

‘அக்கா எட்டி நட,’ என்றாள்.

சுமி சுரேனைக் காணாதவளாய் ‘ஏன்? என்ன அவசரம் உனக்கு?’ என்றாள்.

‘திரும்பிப் பார். சுரேன் எங்களைக் கனதூரமாக ஃபலோ பண்ணிக் கொண்டு வாறான்.’

‘பரதேசி நாய். அவன் வரட்டும். நான் கதைக்கிறேன். இண்டைக்கு அவன் நாக்கப் பிடுங்கிக்கொண்டு சாகிறமாதிரி

எதையாவது செய்யோணும். அவனுக்கு நெடுகச் சேட்டையாப் போச்சுது. அவன் தடியனா இருந்தா நாங்கள் பயந்து ஓடோணுமே?' என்றாள்.

'ஐயோ அக்கா. சும்மா என்னத்துக்குப் பிரச்சனை. நாங்கள் கெதியாப் போவம் வா,' என்றாள் நீனா.

'இல்லை. இண்டைக்கு அவனோட கதைக்காமல் நான் வரமாட்டன்.'

நீனா சுமியின் கையைப்பிடித்து இழுத்துக் கொண்டு சென்றாள். அப்படிச் செல்லும்போதும் சுரேன் இவர்களைத் தொடர்ந்தும் வந்து கொண்டு இருந்தான். கார் குரன்லாண்டுக்கு வரும் முகப்பில் இருந்த பாக் பண்ணும் இடத்தில் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தது. சுமிதாவுக்கு திடீரென இது ஒரு நல்ல இடமாகத் தோன்றியது. அதிகமான தமிழரும் இல்லை. அதேவேளை ஒதுக்குப் புறமும் இல்லை. இங்கும் வாலாட்டிக் கொண்டு வந்தால் சுரேனுக்கு நல்லதொரு பாடம் படிப்பித்து அனுப்ப வேண்டும் என மனதிற்குள் கறுவிக் கொண்டாள். சுமிக்கு அடக்க முடியாத கோபம் வந்தது. காரடிக்குச் சென்றதும் நீனாவை காருக்குள்ளே தள்ளி இருக்கப் பண்ணினாள். அவள் உள்ளே இருந்து, 'அக்கா வா அக்கா வா நாங்கள் போவம்' என்று கெஞ்சிக் கொண்டு இருந்தாள்.

சுரேன் சிரித்துக்கொண்டு இவர்களை நோக்கி அவசரமாக வந்தான். சுமிக்கு உடல் எல்லாம் அனல் பற்றி எரிந்தது. வா வாவெனக் கறுவியவண்ணம் டிக்கியைத் திறந்துவிட்டு நின்றிருந்தாள். சுரேன் அவசரமாய் வந்து, 'எங்க நீனா?' என்று கேட்டான்.

'ஏன்?' என்றவண்ணம் சுமி அவன் அருகே சென்றாள். தனது பையில் வைத்திருந்த பெப்பர் ஸ்பிறேயைத் திடீரென எடுத்து அவன் எதிர்பார்க்காத வேளை முகத்தில் அடித்தாள்.

'ஐயோ சுமி கண்ணெரியுது. கண்ணில என்னத்தை அடிச்சனீ?' என்று சுரேன் கத்தினான்.

சுமிதா டிக்கிக்குள் பனி வெட்ட வைத்திருந்த சவளை எடுத்து, அதன் பிடியைத் திருப்பிப் பிடித்து சுரேனை சடுதியாகத் தாக்கினாள். அலகால் தாக்கினால் கொலை முயற்சி ஆகிவிடும் என்கின்ற பயத்தில் பிடியால் மாத்திரமே தாக்கினாள்.

'ஐயோ அடிக்காத சுமி, அடிக்காத சுமி' என்று கத்தியவன் 'நான் நீனாவிட்ட மன்னிப்பு கேட்க வந்தநான், நீ என்ன இப்பிடி அடிக்கிறா சுமி. பிளீஸ் சவள் பிடியால அடிக்காத,' எனக் கெஞ்சினான்.

'என்ன செய்ய வந்தனீ?' சுமி அடிப்பதை நிறுத்திவிட்டுக் கேட்டாள்.

'உண்மையா. என்ர பெற்ற தாயாண நான் நீனாவிட்ட மன்னிப்பு கேட்கத்தான் இப்ப துரத்திக் கொண்டு வந்தனான்.'

சுமி சவளை டிக்கிக்குள் எறிந்தாள். சுரேனைப் பார்க்க சுமிக்கு பரிதாபமாயும் நகைப்பாகவும் இருந்தது. கையைக் கொடுத்து அவன் எழுந்து கொள்வதற்கு உதவி செய்தாள்.

'நீ செய்யிற வேலையால யாரும் நம்பேலாமல் இருக்குது' என்றாள்.

'நான் அண்டைக்கு வெறியில பேய்த்தனமாய்ச் செய்து போட்டன். அதுக்கு நல்லா ஏற்கனவே அநுபவிச்சிட்டன். என்ன போலிஸில வைச்சு அவங்கள் கொலைகாரன் மாதிரி நடத்தினத அநுபவிக்கிறபோதுதான் தெரிஞ்சது அதுகின்ர கொடுமை. ஒரு மன்னிப்புக் கேட்டு இந்தப் பிரச்சனைக்கு முற்றுப்புள்ளி வைக் கோணும் எண்டுதான் உங்களக் கலைச்சுக் கொண்டு வந்தன்.'

'அதுக்கு இப்பிடியா எங்கள விட்டுக் கலைச்சுக் கொண்டு வாறது? ஆராவது ஆட்களோட வந்து கதைச்சிருக்கோணும்.'

'நான் முட்டாள். அவசரத்தில என்ன செய்யிறன்... அதை நீங்கள் எப்பிடி எடுப்பியள் எண்டு யோசிக்கேல்ல. ஆள்களுக்கு

முன்னால மன்னிப்பு கேட்கவும் ஒரு மாதிரி இருந்திச்சுது. ஒருதரம் வெறியில முட்டாளானன். இப்ப அதீதமான உணர்ச்சியால முட்டாளாகீட்டன். ஐயோ நீங்கள் எனக்கு இப்படி அடிச்சுப் போட்டியள்,' என்று தோள்மூட்டைப் பிடித்துக் கொண்டு நோவில் நெளிந்தான்.

'அதெல்லாம் உனக்கு ரெண்டு நாளில சுகமாயிடும்,' என்றாள் சுமி.

நீனா காருக்கு வெளியே வந்தாள்.

'நீனா நான் வெறியில முட்டாள்தனமாகச் செய்ததை மனசில வச்சிருக்காத. சினனனிலேயே உன்னோட நெருக்கமாப் பழகின எண்ணம், அதோட அண்டைக்கு கொஞ்சம் கூடவும் குடிச்சிட்டன். அதால வந்த வினை அது. நான் அப்பிடி நடந்தனான் எண்டதை நினைக்க பிறகு என்னிலேயே எனக்கு வெறுப்பா இருந்திச்சு. அண்டைக்குத் தேவாண்ல உன்னிட்ட மன்னிப்புக் கேட்போமோ எண்டு நினைச்சன். பிறகும் பயத்திலையும் அவமானத்திலையும் அந்த எண்ணத்தை விட்டிட்டன். இப்பவாவது கேட்பம் எண்டு வந்தால் சுமி என்னைப் போட்டு அடி அடியெண்டு அடிக்கிறாள்.'

'சரி சரி உன்ர ஒப்பாரிய நிப்பாட்டு. நீ அடிவேண்டினதுக்கு நீயேதான் காரணம். ஒழுங்கா இருந்தா உன்னை ஒருத்தரும் அடிக்க வரமாட்டினம்,' என்றாள் சுமிதா.

'தெரியும் சுமி. நீனா நீ சொல்லு. என்ன மன்னிச்சிட்டாய் எல்லே?'

'இண்டைக்கு குடிக்கேல்லேயே சுரேன்?' என்றாள் நீனா.

'ஐயோ நீ இப்பிடிக் கேட்கிறா என்ன?' என்றவன் வேறு வசனங்கள் அற்றவனாய் தலையில் கைவைத்துக் கொண்டு சோக மாக நின்றான்.

'அப்ப இனிக் குடிச்சுப்போட்டு வந்து சேட்ட பண்ண மாட்டியே?'

'கனவிலகூட உன்ர பக்கம் தலை வைச்சுப் படுக்கமாட்டன். நீ என்னை நிச்சயமா நம்பலாம். அம்மாமீது ஆணையா நான் இதைச் சொல்லுறன். நான் செய்த சின்னச் சின்ன பிழைகள், பெரிய பெரிய பிழைகள் எல்லாத்துக்கும் சேர்த்து என்ன மன்னிச்சிடு.'

'ம், இப்ப நம்புறன். போகப் போகத்தானே மிச்சம் தெரியும்.'

'நான் இனி எந்தக் காலத்திலையும் உன்ர பக்கம் வரமாட்டன். சரி அப்ப நான் வரட்டே?'

'நில்லு சுரேன்,' என்றாள் சுமி. சுரேன் நின்றான்.

'நீ லதாவின்ர கொலையோட சம்பந்தப்படேல்லத்தானே?'

'ஐயோ போலிஸ் சந்தேகம் இல்லை எண்டு விட்டிட்டுது. உனக்கு இன்னும் என்னில சந்தேகம் போகேல்லப்போல இருக்குது.'

'ம்...போலிஸ் உன்ன விட்டது எனக்குத் தெரியும். ஆனா எப்ப எண்டாலும் நீ கொலையோட சம்பந்தப்பட்டவன் எண்டு அறிஞ்சா உனக்குச் சா என்ர கையாலதான் கிடைக்கும்.'

'அப்ப எனக்கு உன்னால சா வராது. நான் இப்பிடியானதை கனவிலையும் செய்யமாட்டன் சுமி. சும்மா வாயும் உடம்பும்தான் எனக்கு பெரிசு. என்ன நம்பு சுமி.'

'சரி நம்புறன். இப்ப போட்டுவா.'

'நீ இப்ப பொம்பிள ரவுடியாயிட்டா' என்று கூறியவன் குரன்லாண்ட் பக்கமாக விரைவாகச் சென்றான்.

'என்ன இவன் உண்மை சொல்லுறானோ? இல்லாட்டி பெம்பிளையள் எண்டு எங்களுக்குப் புலுடா விடுறானோ?' என்றாள் நீனா.

'அவன் மொக்கனடி. ஆனா பெரிய நரியனா இருக்கமாட்டான் எண்டு நினைக்கிறன். ம்...பாப்பம்.'

நீனா காரில் வரும்போது இடைக்கிடையே தன்னைக் கட்டுப் படுத்த முடியாதவளாய்ச் சிரித்தாள்.

'ஏனடி சிரிக்கிறாய்?' என்று சுமி கேட்டதிற்கு 'இந்தக் கட்டத்தை படமாக்கினா நல்லா இருக்கும் அக்கா' என்றாள்.

உடுப்புகள் மலிவாக விற்கப்படுவதான விளம்பரம் அன்று பேப்பரில் வந்திருந்தது. சுமியோடு அம்மா ஒஸ்லோ சிற்றிக்குச் செல்வதாய் நீனா அறிந்து கொண்டாள். நீனா வேலையால் அங்கே வந்து அவர்களைச் சந்திப்பதாய்க் கூறி இருந்தாள். லதாவோடு இருந்தபொழுது சுமியும் உடுப்பு என்றால் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டு திரிவாள். அது அவர்களுக்கு ஒரு பொழுதுபோக்காய் இருந்தது என்றுதான் சொல்லவேண்டும். உழைப்பதில் மிச்ச மாக்குவது பற்றி இன்றும் கமலினி யோசித்தாலும் நீனாவும் சுமியும் அதைப்பற்றி இப்போது சிந்திப்பதே இல்லை. அந்த மாதம் வாங்கும் சம்பளத்தை அந்த மாதமே செலவழித்து முடிப்பதில் அவர்களுக்கு பரமதிருப்தியெனக் கமலினி அடிக்கடி குறைபட்டுக் கொள்வது உண்டு.

லதாவின் மறைவுக்குப் பின்பு சுமி சிறிதுகாலம் இவற்றில் எல்லாம் நாட்டம் இல்லாமல் இருந்தாள். இப்போது ஒரு மாதிரி யாகப் பழைய நிலைமைக்கு மாறிக்கொண்டு வருகிறாள். இதை ஊக்குவிப்பதுபோல கமலினியும் அவளை இழுத்துக்கொண்டு ஒஸ்லோ சிற்றிக்கு வந்திருந்தாள்.

சுமியும் நீனாவும் உடுப்பு எடுப்பது என்றால் பிரபலமான விலை உயர்ந்த உடுப்புகளையே பார்த்து எடுத்துக் கொள்வார்கள். கமலினிக்கு அது வீண் விரயமாகத் தோன்றும். சாதுவாகச் சொல்லிப் பார்ப்பாள். அது எடுபடாது போக தனக்கு வேண்டுவதில் மாத்திரம் அதைக் கடுமையாகக் கடைப்பிடிப்பாள். கமலினி Cubus, HM ற்கு

வந்தாலும் விலைகுறைந்த உடுப்புகள் தேடித்திரிய சுமியும் நீனாவும் ஃபஷன் உடுப்புகள் உள்ள கடைகளுக்குள் அவளை இழுத்துத் திரிவார்கள்.

அன்று சிறிது நேரம் Cubusஇல் நின்று மினக்கெட நீனா வந்து சேர்ந்துவிட்டாள். பின்பு ஒவ்வொரு கடையாகப் போய் வந்ததில் நேரம் வெகு விரைவாகச் சென்றுவிட ஆறுமணி போல வெளியே வந்தார்கள். காரை எடுத்துக் கொண்டு மேலே வந்து குரன்லாண்ட் பக்கம் திரும்பினார்கள். முதலில் வந்த பெரிய ரவுண்டபோட்டில் கார் ஏறியது.

'உங்க பார், உங்க பார் அப்பா,' எனக் கமலினி கத்த நீனாவும் சுமியும் திரும்பிப் பார்த்தார்கள். அப்பாவா? யாரோ ஒரு பிச்சைக்காரனைப் பார்த்து அம்மா அப்பா அப்பா எனக் கத்துகிறா என முதலில் எண்ணியவண்ணம் அந்த ரவுண்டபோட்டில் மேலும் ஒருமுறை சுற்றிவந்த சுமிக்கு அதிர்ச்சி தாங்க முடியவில்லை. அப்பா என்கின்ற கரன், தூள் அடித்த பிச்சைக்காரனாய், கையில் சில ஷொப்பிங் பாக்குகளோடு, தனக்குள் தானே ஏதோ கதைத்துச் சிரித்தவண்ணம், வேகமாக குரன்லாண்டை நோக்கிச் சென்று கொண்டு இருந்ததை அவர்களால் நம்பமுடியாது இருந்தது.

'பாரடி, பாரடி' எனக் கமலினி பின்னே இருந்து அழத் தொடங்கி இருந்தாள். அம்மா கலக்கம் அடைந்ததை உணர்ந்த சுமி காரை நிறுத்தி நீனாவிடம் திறப்பைக் கொடுத்துவிட்டு, அம்மாவோடு அமர்ந்து அம்மாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

நீனா காரை தனது வீடு நோக்கிச் செலுத்தினாள். நீனாவுக்கு, அப்பாவா இப்படி என்பதை தொடர்ந்தும் நம்பமுடியாது இருந்தது.

அன்று அம்மா சாப்பிட மறுத்துவிட்டதை ஒருவராலும் மாற்ற முடியாது போய்விட்டது. அம்மா அப்படியாவது கவலையைத் தணித்துக் கொள்ளட்டுமென மேற்கொண்டு இருவரும் தொந்தரவு செய்யவில்லை.

அன்று சுபா பிள்ளையுடன் வீட்டே வந்திருந்தாள். சுபா போன் செய்யாது வந்து கதவில் தட்டுவாள். கமலினி பெரிதாக ஒருநாளும் குறைபட்டுக் கொள்வதும் இல்லை. இன்று குளித்துக்கொண்டு இருக்கும்போது அழைப்பு மணி ஒலித்தது. கமலினி அவசர அவசரமாக ஓடிவந்து கதவைத் திறக்க வேண்டி இருந்தது. கதவைத் திறந்தபின்பு தலைமுடியை உலர்த்திக் கொண்டு வருவதற்கு மேலே சென்றாள்.

சாள்ஸ் இப்போது எழுந்து நடக்கத் தொடங்கி இருந்தான். சுபா அவனது உடுப்புகளைக் கழற்றிவிட அவன் ஹோலுக்குள் ஓடித்திரியத் தொடங்கி இருந்தான். கமலினி கீழேவர அவளிடம் அவன் ஓடிவந்தான். கமலினி அவனைத் தூக்கிக்கொள்ள அவனாகவே முத்தம் தந்தான். கமலினிக்கு அது மிகவும் உவப்பாக இருந்தது. பின்பு சமையல் அறைக்குச் சென்று தேநீர் தயாரித்துக் கொண்டு மீண்டும் ஹோலுக்கு வந்தாள்.

'என்ன கமலினியக்கா இந்த நேரம் குளிக்கிறியள்?'

'இங்க குளிக்கிறதுக்கு நேரம் என்ன காலம் என்ன? சட்டி வைச்சுத் தண்ணியே சுடவைக்கோணும்? பைப்பைத் திறந்தால் கொட்டுது. பிறகு குளிக்கிறதுக்கு என்ன நேரமும் காலமும்?'

'அதுவும் சரிதான். நீங்கள் எப்பிடி இருக்கிறியள் அக்கா?'

'நான் நல்லாத்தானே இருக்கிறன். என்ன திடீரெண்டு உனக்கு இந்தக் கரிசனை? ஏதோ மனசுக்க வைச்சிருக்கிறா.'

'இல்லை. இல்லை. ஒண்டும் இல்லை.'

'சுபா...நீ இல்லையெண்டா ஏதோ இருக்கு எண்டுதான் அர்த்தம். என்னெண்டு சொல்லு. நான் அறியோணும்.'

'நீங்கள் அறிஞ்சிருப்பியள்தானே?'

'எதை நீ சொல்லவாற சுபா? நீ எப்பவும் இப்படித்தான், சுத்தி வளைச்சு சுணக்கிக் கொண்டு இருப்பா.'

'உங்களுக்கு தெரிஞ்சிருக்கும், அதை இப்ப நான் ஏன் திரும்பச் சொல்லி வேதனையைக் கிளப்புவான்.'

'எனக்கு வேதனை தாறதா? நான் அப்பிடி ஒண்டும் கேள்விப் படேல்லேயே. என்ன புதினம். சுபா தயவு செய்து சொல்லு.'

'கரன் அண்ணையப் பற்றி ஒண்டும் கேள்விப்படேல்லேயே?'

'இல்ல. அண்டைக்கொருநாள் அலங்கோலமாய் குரன் லாண்டிற்குப் போற வழியில கண்டதுக்குப் பிறகு, நான் அவரைக் காணேல்ல. ஒண்டும் அவரைப் பற்றி கேள்விப்படவும் இல்லை. ஏன், அவருக்கு என்ன இப்ப?'

சிறிது நேரம் பேசாது இருந்த சுபா பின்பு ஓரளவு துணிவை வரவழைத்துக்கொண்டு 'அவர Dikemark ஹொஸ்பிற்றல்ல Lukket avdeling (அடைக்கப்பட்ட பகுதி)இல சேர்த்து இருக்கின மாம். என்ர மனிசன்தான் நேற்று இதைச் சொன்னவர். அண்டைக்கு குரன்லாண்டில் நிண்டு கூத்தாட யாரோ போலிஸ்"க்கு அடிச்சுச் சொல்லிப் போட்டினமாம். பிறகு போலிஸ்" பிடிச்சுக்கொண்டே அங்க விட்டிட்டுப் போட்டாங்களாம். உங்களுக்குத் தெரியும் எண்டு நினைச்சன். அதுதான் உங்களப் பார்த்து சுகம் விசாரிக்கோணும் எண்டு வந்தன்.'

'ஐயோ என்ன சொல்லுறா சுபா? அவர எப்ப? ஏன் எனக்கு ஒருத்தரும் சொல்லேல்ல?'

'நீங்கள் தேவையில்லாமல் கவலைப்படுவியள் எண்டாக்கும் சொல்லேல்ல. கொஞ்ச நாளைக்கு வைச்சிருந்திட்டு விடுவாங்கள் தானே,' என்றாள் சுபா.

'கரண்டு பிடிக்கிறாங்களோ? என்னத்தைச் செய்யிறாங்களோ? என்னெண்டாலும் எனக்கு ஒரு வார்த்தை சொல்லி இருக்கலாம். ஒருத்தரும் மூச்சு விடேல்ல. நான் ஒருக்காப் போய்ப் பார்த்துக் கொண்டு வரோணும்.'

'இப்ப யாரும் அந்த ஆஸ்பத்திரிக்குப் போறேல்ல. இதெல்லாம் இங்க சகஜமாய்ப் போயிட்டது. நீங்க இப்ப கவலைப்படாமல் இருங்க. ஒருநாளைக்குப் பின்னேரமாய் போய்ப் பார்த்துக் கொண்டு வாறதுதானே?' எனச் சமாதானம் சொன்னாள் சுபா.

அப்போது கதவைத் திறந்துகொண்டு சுமிதா உள்ளே வந்தாள். கமலினி அடக்க முடியாதவளாய். 'சுமிதா, அப்பாவைக் கொண்டே Dikemark சீக்ககூசில வைச்சிருக்கிறாங்களாம். எனக்கு என்னவோ கைகால் எல்லாம் நடுங்குது. அவர ஒருக்காப் போய் பார்த்துக் கொண்டு வரவேணும்,' என்றாள்.

சுமிதா அசண்டையாக முதலில் அதைக் கேட்டவள், பின்பு திடீரென அதீதமான கோபத்தோடு, 'ஆ நல்ல அப்பா, ஓடிப் போய் அவசரமாய்ப் பார். அவர் செய்த கொடுமைகள் இன்னும் உனக்குக் கொஞ்சமும் உறைக்கேல்ல. எத்தின பாடுபடுத்தினார் எண்டு ஒரு சின்னக் கோபம்கூட வருகுதில்லை,' என்று கத்தினாள்.

'அவரேதோ கொலை செய்த மாதிரியெல்லே நீ பாயிறாயடி. பேசி இருப்பார். அடிச்சிருப்பார். அது யார்தான் செய்யிறேல்ல?'

'அம்மா நிப்பாட்டு. அண்டைக்கு நான் போலிஸோட வராமல் விட்டிருந்தா கொலையும் செய்திருப்பார். இதைத்தான் நான் உங்களுக்கு அடிக்கடி சொல்லுறனான். உங்கட வாழ்க்கைக்கும் எங்கட வாழ்க்கைக்கும் நிறைய வித்தியாசம். அடிக்கிறதையெல்லாம் இப்பவும் நீ என்னோட நியாயப்படுத்திக் கதைக்காத.'

'சரி. சரி. நான் அதைப்பற்றிக் கதைக்கேல்ல. என்னதான் தப்பு செய்தாலும் வருத்தமா இருந்தாப் போய் பார்க்கத்தானே வேணும்?'

'யார் அப்பிடிச் சொன்னது?'

'என்னடி இப்பிடிக் கேட்கிறா?'

'அப்படித்தானே அவர் எங்கள நடத்தினவர்.'

'அதை மன்னிச்சிடு சுமிதா. நாங்கள் அவரை ஒருக்காப் போய் பார்த்துக் கொண்டு வரோணும்.'

'அதைப் பற்றி யோசிப்பம் அம்மா.'

'நீ வராட்டி விடு. நான் பஸ்ஸில போய்ப் பார்த்துக் கொண்டு வாறன்.'

'போயிட்டுவா. ஆர் வேண்டாம் எண்டுறது. என்ன சுபா மாமி? பேசாமல் எங்கட பிடுங்கலைப் பார்த்துக் கொண்டு இருக்கிறியள்!'

'அதுதான் நீ எல்லோருக்குமாய் பேசுறியே!'

'அப்பிடி இல்ல மாமி. இன்னும் அநுபவிச்சதை மறக்க முடியாமல் இருக்குது. சிலவேளை நான் கதைக்கிறது பிழையா இருக்கலாம். ஆனா எனக்கு இப்ப நான் கதைக்கிறது மட்டும்தான் சரியாத் தெரியுது. அவ்வளவு வெறுப்பு அவரில இருக்குது.'

'ம்...உனக்குத்தானே அது தெரியும். அது சரி. உனக்கும் அப்பாவை ஹொஸ்பிற்றல்ல வைச்சிருக்கிறது தெரியாதே சுமிதா?'

'தெரியும். இரண்டு நாளைக்கு முதல் எனக்குப் போன் பண்ணிச் சொன்னவங்கள். அவங்களா என்ர நம்பரைத் தேடிப் பிடிச்சாங்களோ, இல்லாட்டி அப்பா குடுத்தாரோ தெரியாது. எப்பிடியோ போன் செய்து இன்போம் பண்ணி இருந்தாங்கள்.'

'அப்ப ஏன் என்னிட்ட சொல்லேல்ல சுமிதா?' என்றாள் கமலினி.

'ஏன் உனக்கு இருக்கிற கவலை போதாதே? இதையும் கேள்விப்பட்டா கூத்தாடுவாய் எண்டுதான் சொல்லேல்ல.'

'இனிமேலைக்கு இப்பிடிச் செய்யாதே சுமிதா. என்னவா இருந்தாலும் எனக்கு உடன சொல்லு. இண்டைக்கு சுபா மாமிக்கு முன்னால முழிச்சுக் கொண்டு இருந்தமாதிரி மற்றவைக்கு முன்னால சங்கடப்பட வைக்காத. என்ர கவலை என்னோட இருக்கும். நீ கேள்விப்படுகிறதை வந்து சொல்லு.'

'சரி,' என்றாள் சுமிதா. அம்மா சொல்வதிலும் நியாயம் இருப்பதாய் அவளுக்குத் தோன்றியது.

'அப்ப நான் போட்டு வாறன் அக்கா,' என்றவண்ணம் சுபா எழுந்து கொண்டாள்.

'கொஞ்ச நேரம் இருங்கோ. நான் சாள்ஸோட விளையாடோணும்,' என்றாள் சுமிதா.

'சரி.'

சுமிதா சாள்ஸோடு விளையாடினாள்.

கமலினிக்கு கரனைப் பற்றிய கவலை ஒருபுறமாக இருக்க, வேறு ஒரு கவலை இறுக்கமாகப் பற்றிக்கொண்டது. அது இதயத்தை இரண்டு துண்டாகப் பிளப்பதான வேதனை தந்தது.

சுகுமாரின் மனைவி தேவகி தற்போது நீனாவுக்கு நன்கு பழக்கமாகி இருந்தாள். சுகுமார் புதிதாக வேண்டிய வீடு Alnabruக்குப் போகிற வழியில் இருந்தது. ஒருநாள் அவளது வீட்டடியால் சுமியோடு காரில் போக, அதைக் கண்டு கொண்ட அவள் கையைக் காட்டி தனது வீட்டிற்கு வருமாறு அழைத்தாள். இன்னொருநாள் வருவதாக அதற்கு கையைக்காட்டி சமாளித்துக் கொண்டு அன்று வந்துவிட்டார்கள்.

இன்று அதே வழியால் சுமியும் நீனாவும் அல்னாவுறுக்குச் சென்று கொண்டு இருந்தார்கள். அவர்கள் வீட்டைத் தாண்டும்போது இரண்டு போலிஸ் கார்கள் அவர்கள் வீட்டை அண்டி நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. அது இருவருக்கும் மிகையான வியப்பைத் தந்தது.

'என்னக்கா ரெண்டு போலீஸ் கார் நிற்குது?'

'ம்... Det er litt radd (கொஞ்சம் வினோதமாய் இருக்குது)' என்றாள் சுமி.

'சாதாரணம் எண்டா ஒரு கார்தானே வரும்?'

'ம்...'

'ரெண்டு கார் நிக்குது. ஏதோ பிரச்சனை,' என்றாள் நீனா.

'சரி விடு. நாங்கள் எங்கட அலுவலைப் பாப்பம்,' என்றாள் சுமிதா.

அன்று அல்னாவுறுவில் உள்ள கடைகள் எல்லாம் ஏறி இறங்கி பின்பு வீடு வரும்போது ஆறு மணி ஆகிவிட்டது. அம்மா இன்னும் வேலையால் திரும்பி வரவில்லை. வீட்டிற்கு வந்தவுடன் இருவரு மாகச் சமைக்கத் தொடங்கினார்கள்.

ஆறரை மணிபோல அம்மா வரவும் சமையல் முடியவும் சரியாக இருந்தது. சோபாவில் இருந்து சுடச்சுடச் செய்த லசண்ணியாவோடு baguetterk, சலாத்தும் சேர்த்துச் சாப்பிடச் சுவையாக இருக்கும். குடிப்பதற்கு சுமி கோக்சீரோ எடுத்து வந்திருந்தாள்.

நீனா சாப்பாட்டைப் பரிமாற, சுமி தொலைக்காட்சியை ஓன் செய்து tv2இல் விட்டாள். தொலைக்காட்சியில் செய்தி தொடங்கி இருந்தது. பல செய்திகளையும் காட்டினார்கள். பின்பு அமேரிக்கா வின் சுகாதாரக் காப்புறுதி பற்றிக் காட்டினார்கள். அதற்குப் பலர் கடும் எதிர்ப்பு தெரிவிப்பதையும் காட்டினார்கள். இதைப் பார்த்த சுமி. 'இவங்களுக்கு ஏன் இவ்வளவு சுயநலமோ தெரியேல்ல' என்றாள்.

'இல்லையக்கா. ஒபாமாவும் இன்சூரன்ஸ்தான் வேண்டிக் குடுக்கிறார். இங்க இருக்கிற மாதிரி எல்லோருக்கும் மருத்துவம் இலவசம் எண்டு சட்டம் இயற்றேல்ல. அதை நடைமுறைப்படுத் தேல்ல.'

'எல்லோருக்கும் இன்சூரன்ஸ் எண்டாலும் அப்பிடித்தானே?' என்றாள் சுமிதா.

'அப்பிடி இல்ல.'

'ஏன்?'

'உனக்கே தெரியும், எத்தின பேருக்கு இன்சூரன்ஸ் கொம்பனியள் காசு குடுக்காமல் ஏமாத்தி இருக்கும். உதிலையும் அவங்கள் எப்பிடிச் சுரண்டி தாங்கள் முன்னுக்கு வரலாம் எண்டு தானே பார்ப்பாங்கள். நோயாளிகளை உற்பத்திப் பொருளாக்கி மலிவான விலையில சிகிச்சைகளை வேண்டுறத்துக்குத்தான் உது வழிவகை செய்யும். அப்ப வருத்தத்தின்ர கடுமையை விட விலையைப் பற்றின அக்கறைதான் முக்கியமாக இருக்கும். உதில சேவைக்குப் பதிலா வியாபாரம்தானே இருக்குது.'

'ம்... நீ சொல்லுறதும் உண்மைதான். ஆனா ஒண்டுமே இல்லாமல் இருந்த சனத்துக்கு இவ்வளவும் கிடைக்கிறதே பெரிசுதானே.'

'அதெண்டா உண்மைதான்.'

தொலைக்காட்சியில் திடீரென சுகுமாரின் வீட்டைக் காட்ட, இருவரும் அதிர்ச்சியில் கதைப்பதை நிறுத்திக் கொண்டார்கள். அதில், 'வூகறூட்டில் இடம்பெற்ற இளம் பெண்ணின் கொலை தொடர்பில் ஒரு தமிழர் கைது செய்யப்பட்டார். கொலை செய்யப்பட்ட பெண்ணும் ஒரு தமிழரே. மேலதிக விபரங்களை போலீஸ் தர மறுத்து விட்டது' என செய்தி வாசிப்பவர் கூறி முடித்தார். ஆள்களைக் காட்டாது வீட்டுப் பகுதியையும், போலீஸ் காரையும் மட்டுமே அதில் காட்டினார்கள்.

சுமி 'ஆ...' என அதிர்ச்சியில் கத்தியவள், பின்பு அப்படியே அதிர்ந்து போய் இருந்தாள். செய்தி வேறு விடயத்திற்குத் திரும்ப நீனா மெதுவாக தொலைக்காட்சியை அணைத்தாள்.

சுமி இப்போது விம்மி விம்மி அழத் தொடங்கி இருந்தாள். நீனா மெதுவாக அவளை அணைத்துக்கொண்டாள். கமலினியும் மெதுவாக வந்து அவளை அணைத்துக் கொண்டாள்.

சிறிது நேரத்தில் அமைதியடைந்த சுமி, 'எனக்கு தாய் லாந்தில கதைச்சதில இருந்தே அவனில சந்தேகமாக இருந்தது.

அவன் யாரை என்ன கேட்டவன்? அநியாயமாக எங்கட வாழ்க்கையை அழிச்சுப் போட்டான்,' எனக் கூறியவண்ணம் பல்லைக் கடித்தாள்.

'சும் மா மனசப் போட்டு அலட்டாத அம்மா. எல்லாம் கெதியா வெளியால வரும்தானே,' எனக் கமலினி சமாதானம் கூறினாள்.

'ம் வரட்டும் வரட்டும்,' என்ற சுமிதாவின் உதடுகள் நடுங்கின.

கமலினி நிலைமையை மாற்றுவதாய் நினைத்து தொலைக்காட்சியை ஓன் செய்தாள். சுமி எதுவும் பேசாது தனது அறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள்.

'அப்ப நான் போட்டு வாறன் அம்மா,' என்றவண்ணம் நீனா மெதுவாக எழுந்து சென்றாள். திடீரென கமலினி தனிமையில் தவிக்கலானாள்.

# 9

மேலே படுக்கச் சென்ற சுமியால் படுக்க முடியவில்லை. அடக்க முடியாத கண்ணீரும் பொறுக்க முடியாத வேதனையும் அவளை வாட்டி எடுத்தது. வாழ்வின் நரகங்களான கணங்கள் அவள் மீது ஏறி இருந்து சவாரி செய்தன. தட்டிவிட்டு ஓடவோதாங்கிக் கொண்டு படுக்கவோ முடியாதவளாய் உத்தரித்தாள்.

சுவேகாவின் உறவு முறிந்த காலத்திலும் சிலநாள்கள் சுமிதா இப்படியாக அவஸ்தைப் பட்டாள். பின்பு எந்தத் தொந்தரவும் வேண்டாம் எனத் தனியே அம்மாவோடும் சுந்தரோடும் அமைதி யாகக் காலத்தைக் கழித்து வந்தாள். சீக்கபிளை யருக்குப் படித்துக் கொண்டு இருக்கும் போதே பகுதி நேரமாக வேலை செய்து வந்தாள். சுந்தரின் அறுவைச் சிகிச்சைக்குப் பணம் வேண்டும் என்பதால் தனது செலவுகளைத் தானே பார்த்துக் கொள்வதாக கமலினிக்கு விளக்கம் கூறி இருந்தாள். சுமியின் வேலையால் அவளது படிப்பிற்கு எந்தப் பாதகமும் வரவில்லை என்பதை உணர்ந்த பின்பு, அவள் அப்படி வேலை செய்வதைப் பற்றி கமலினி

பெரிதாகக் கவலைப்பட்டுக் கொள்ளவில்லை. சுந்தரும் மிகவும் கெட்டித்தனமாய்ப் படித்து வந்தான். அது கரன் இல்லாத குறையைக் கண்டுகொள்ளாமல் இருக்க உதவி செய்தது.

சுமிதா அந்த வருடம் வந்த யூலவூரு (கிறிஸ்மஸ் பார்ட்டி)க்குச் சென்று இருந்தாள். அது பல சீக்கயெம் ஒன்றாகச் சேர்த்து வைத்த பார்ட்டி. சுமிதா எந்த எதிர்பார்ப்பும் இல்லாது ஒரு வித்தியாசமாய் இருக்கட்டும் என்று அந்தப் பார்ட்டிக்குப் போயிருந்தாள்.

அந்தப் பார்ட்டி ஒஸ்லோவின் புறநகர்ப் பகுதியில் இருந்த விடுதி ஒன்றில் நடந்தது. ஜக்கற்றைக் கொடுத்துவிட்டு உள்ளே சென்றவளுக்கு முதலில் குளுக் எனப்படும் வரவேற்பு ட்றிங்ஸ் கொடுக்கப்பட்டது. அது வைன், பாதாம்பருப்பு, முந்திரிவற்றல் போட்டு காச்சப்பட்டு சூடாக இருந்தது. இது ஒன்றும் சுமிக்கு புதி தல்ல. இதற்கு முன்னரும் பலமுறை இதைக் குடித்து இருக்கிறாள். அவள் அதைச் சுவைத்த வண்ணம் உள்ளே சென்று ஒரு ஆசனத்தில் அமர்ந்து கொண்டாள். சிறிது நேரத்தில் ஒரு நோர்வே சிநேகிதியும் அவளது கணவரும் இவளோடு வந்து அமர்ந்து கொண்டார்கள். சீக்கயெம்மைப் பற்றித் தொடங்கிய கதை அரசாங்கத்தின் இரட்டை முகத்தைப் பற்றித் தொடர்ந்தது.

இவர்கள் கதைத்துக் கொண்டு இருக்கும்போது ஒரு தமிழ்ப் பெண் குளுக் பெற்று உள்ளே வந்தாள். எங்கே இருப்பது எனச் சிறிது ஆராய்ந்துவிட்டு இவர்களை நோக்கி வந்த அவள், கைகொடுத்து லதா எனத் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டாள்.

சுமி தன்னைக் கட்டுப்படுத்த முடியாதவளாய் லதாவை ஒருமுறை முடி தொடங்கி அடிவரை துழாவி எடுத்தாள். லதா பொது நிறத்தில் கொடியாக இருந்தாள். அங்கங்களிலும் அசைவுகளிலும் நளினம் எங்கெங்கும் வியாபித்து இருந்தது. அதைப் பார்க்க சுமிக்கு ஒருவிதமான கிறக்கம் ஏற்பட்டது.

லதா அடர்த்தியான தனது கருமுடியை கழுத்திற்குக் கீழே சிறிது இறங்கவிட்டு கத்தரித்து இருந்தாள். ரோமத்தின் அடர்த்தியில் பிறையாகச் சிறுத்துப் போய் இருந்த நெற்றியில்

தெரிந்தும் தெரியாததுமான ஒரு கறுத்த பொட்டைத் துணிவாக வைத்திருந்தாள். காந்தமான அவள் கண்கள் பார்க்குமிடம் எல்லாம் இதயங்களைத் துளைத்துச் சென்றது. அழகிய சிறிய மூக்கு அதற்கு எடுப்பாய் இருந்தது. அதைத் தொடர்ந்து வந்த மேலிதழ்கள். மெல் லிய கீழ் உதடுகளில் இருந்த அளவான உதட்டுச் சாயம். அதற்குள் ஒளிந்திருந்த ஒளிவீசும் முத்துப் பற்கள். கறுப்பில் அவள் போட்டிருந்த கவுன். அதற்கேற்ப நீண்ட தோலால் செய்யப்பட்ட விசேடமான பாதணிகள் எல்லாமே ஏக்கத்தை உண்டுபண்ணும் தோற்றத்தை அவளுக்குத் தந்திருந்தது. சுமி ஒருகணம் சொக்கிப்போய் சுவர்க்கம் இங்கு வந்ததா என்கின்ற கனவில் இருந்தாள்.

'எங்க வேலை செய்யிறியள்?' எனச் சுமிதாவிடம் அவள் திடீரெனக் கேட்டபோதே இவள் உலக நினைவுகளுக்கு மீண்டும் வந்தாள். குழப்பத்தில் 'ஆ...' என்றாள். அவள் சுமியைப் பார்த்து ஒரு மோகனப் புன்னகை வீசிவிட்டு மீண்டும், 'எங்க வேலை செய் யிறியள் எண்டு கேட்டன்,' என்றாள்.

'நான் லங்கறூட்டில் வேலை செய்யிறன். நீங்கள்?' என்றாள் சுமி.

'அபிட்சோ. உங்கள நான் எங்கயோ கண்ட மாதிரி,' என்றாள் லதா.

'நானும்தான் உங்கள எங்கயோ கண்ட மாதிரி. ஒருவேளை பிரமையாக இருக்கலாம்.'

சிறிது நேரத்தில் அந்த நோர்வே நாட்டு சிநேகிதி எழுந்து கொண்டாள்.

'நான் ஒரு கிளாஸ் வைன் சாப்பாட்டுக்கு முதல் அருந்தப் போகிறேன். நீங்கள் எப்படி?' என்று கேட்டாள். 'நானும் வருகிறேன்' என்று லதா எழுந்து கொண்டாள். சுமி தானும் எழுந்து கொள்ள, 'இருங்க நான் வேண்டியாறன்' என்று கூறிவிட்டு லதா சென்றாள். திரும்பி வரும்போது மூன்று கிளாசில் வைற்வைனும் ஒரு போத்தல் பியருடனும் அவர்கள் வந்தார்கள். அப்போது அதிகமான பேர் வந்து சேர்ந்து விட்டார்கள். அங்கு ஒரே பரபரப்பாய் இருந்தது.

சிறிது நேரத்தில் சாப்பாட்டிற்கு ஒரு மண்டபத்திற்குள் போகுமாறு கூறினார்கள். அது பெரியதொரு மண்டபம். பலவகையான சாப்பாடுகள் சமைத்து சூடாறாதவண்ணம் வைக்கப்பட்டு இருந்தன. பின்னச்சொத், யூலபொல்சர், கல்குன் என்பனவற்றுடன் இன்னும் பலவகையான இறைச்சி வகைகளும், அவித்த உருளைக்கிழங்கு, பலவகையான சலாத் சோஸ் என்பனவும் தேவையான அளவிற்கு வைக்கப்பட்டு இருந்தன.

இவர்கள் நான்கு பேரும் ஒரு இடத்தில் இருந்து, பின்பு தங்களுக்குத் தேவையான சாப்பாட்டை எடுத்து வந்தார்கள். சாப்பாட்டுடன் ஒரு கிளாஸ் வைன் கொடுக்கப்பட்டது. வைனை அருந்தி அருந்தி 'யூலுக்கான' விசேட சாப்பாட்டைச் சாப்பிட்டார்கள். கதைத்துக் கதைத்து பிரதான சாப்பாட்டைச் சாப்பிடுவதற்கு கிட்டத்தட்ட ஒரு மணித்தியாலம் ஆனது. லதா மிகவும் நெருக்கமாக சுமிதாவோடு தொட்டுத் தொட்டு கதைத்தாள். சுமிதா அதையே எதிர்பார்த்தவள்போல் எதையும் கண்டுகொள்ளவில்லை.

பின்பு Dessert வழங்கினார்கள். அத்தோடு Akevitt (வாழ்வின் நீர்) எனப்படும் நோர்வேயில் தயாரிக்கப்படும் மதுவும் சிறிதளவு கொடுத்தார்கள். லதாவின் கலகலப்பு மதுவின் உதவியோடு உச்சத்தை அடைந்திருப்பதை சுமிதா கவனித்தாள்.

அதன் பின்பு இசைக்குழுவினர் தங்களது வித்தையைக் காட்டத் தொடங்கினார்கள். மதுவின் மிதப்பில் பலர் நர்த்தன மேதைகளாகி அதற்கு ஆட்டம் போட்டார்கள்.

சுமியின் சிநேகிதியும் அவளது கணவரும் நடனமாடச் சென்று விட்டார்கள். சிறிது நேரம் அவர்கள் போவதைப் பார்த்துக் கொண்டு இருந்த லதா சுமியைப் பார்த்து, 'ஆடுவமா?' என்றாள்.

'நாங்கள் இரண்டு பேருமா?' எனச் சுமிதா திருப்பிக் கேட்டாள்.

'ஓ அதுக்கு என்ன?'

'ஒண்டுமில்ல...அப்ப வாங்க...' கையைக் கொடுத்தாள். இருவரும் சென்று நடனமாடினார்கள். நடனமாடுவது சுமிக்குப்

பிடித்திருந்தாலும், ஆயிரம் கண்கள் துளைப்பதான ஒருவித அவஸ்தையில் அவள் நெளிந்தாள். நடனத்தின் போதான நெருக்கம், லதாவில் இருந்து வந்த சென்றின் வாசனை சுமியை நிலை கொள்ளாது தவிக்க வைத்தது. அவள் அதில் இருந்து விடுபட்டுப் போய் ஆசனத்தில் இருக்க வேண்டும் என்று எண்ணியபோது அந்தப் பாட்டு நிறைவு பெற்றது.

லதா சுமியைப் புரிந்துகொண்டவள்போல, 'வெளியே போவமே?' என்றாள்.

'ஓ அது நல்லா இருக்கும்,' என்றாள் சுமிதா.

வெளியே வந்ததும் சுமிதா பாரை நோக்கிச் சென்றாள்.

'இப்ப எதுக்கு அங்க?' என்றாள் லதா.

'இல்ல. ஒரு கிளாஸ் குடிச்சுட்டு வீட்ட போனா நல்லா இருக்கும்.'

சுமிக்குத் தன்னையே நம்ப முடியவில்லை. உள்ளே போனதின் உசாரை அவள் வியப்போடு உணர்ந்து கொண்டாள்.

'வேண்டாம். வீட்டுக்கு இப்பவே போவம்,' லதா சுமியின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

'எங்க?' எனச் சுமிதா கேட்க...

'சரி அப்ப வேண்டியாங்க,' என்றாள் லதா.

சுமிதா ஒவ்வொரு கிளாஸ் வாங்கி வந்தாள். ஒரு மிடறு அதில் குடித்த லதா, 'சுமிதா' என்றாள்.

'ம்...'

'உங்கள நான் கனகாலத்துக்கு முதல்ல எங்கயோ கண்டு இருக்கிறன். நிச்சயமாகக் கண்டிருக்கிறன்.'

'எங்க?'

'ஆங்...எல்ஸ்கரில கண்டிருக்கிறன். நான் சொல்லுறது சரியா?'

சுமிக்கு கையும் களவுமாய்ப் பிடிபட்டது போல இருந்தது. எல்ஸ்கர் என்பது ஒஸ்லோவில் காள்யோகன்ஸ்காத்தாவில் இருக்கும் ஒருபாலின நட்பை நாடுபவர்கள் சந்திக்கும் இடம். அங்கு அப்படியானவர்கள் மட்டுமே அநேகமாகப் போய் வருவார்கள்.

'ம்...எல்ஸ்கர்...?' திருப்பிப் பெயரைக் கூறியவண்ணம் சிரித்துக் கொண்டு ஒரு மிடறு உறிஞ்சினாள் சுமிதா.

'உண்மைதானே?' லதா மிகவும் அருகில் வந்து குறும்பான பார்வையால் சுமியின் கண்ணைத் துளைத்து எடுத்தாள்.

'ம்... ஒருதரம் மனசுக்கு கஷ்டமாய் இருக்கேக்க அங்க போயிருக்கிறன்.'

'அப்ப நானும் வந்திருக்கிறன். அது சரி என்ன நடந்திச்சு?'

'சுவேகா எண்டு எனக்கு பள்ளிக்கூடத்துப் பிறண்ட் ஒருத்தி இருந்தாள். அவள் இடையில் வேறு ஸ்கூலுக்கு போயிட்டாள். அப்ப வெல்லாம் எனக்கு அங்கு போறத்துக்கு வயது பத்தாது. துணிவும் இருந்ததில்லை. ஒரு மூண்டு வருஷத்துக்குப் பிறகு ஒருக்கா அங்க போயிருந்தன். பிறகும் அது நிறையச் சிக்கலை உண்டுபண்ணும் எண்டிட்டுப் போறதை நிப்பாட்டிட்டன்.'

'நானும் அதை ஒருசில நாளில நோட் பண்ணீட்டு பிறகு அங்க போறேல்ல. அதோட தமிழ் ஆட்களின்ர கண்ணில பட்டா அவ்வளவுதான் எண்ட பயம் வேற துரத்திக் கொண்டு இருந்திச்சுது.'

'ம்...அதுவும் ஒரு பெரிய பிரச்சனைதான். இப்பவும் சிலோனில இருக்கிற மாதிரி சிலருக்கு நினைப்பு. அதோட எனக்கு அப்பாவே பிரச்சனையாக இருந்தார். அதோட அம்மாவையும் அதிகமாக வேதனைப்பட வைக்கிறதுக்கு மனமில்லை. அதைவிட இப்படியான இடத்தில் சிலவிதமான றிஸ்க்கும் இருக்கெண்டிட்டு விட்டிட்டன்,' என்றாள் சுமிதா.

'ம்..ஆம்பிளையும் பெம்பிளையும் கலியாணம் கட்டி அவை ஒரு றெஸ்பெக்ரான வாழ்க்கையை அமைச்சுக் கொண்டு, மரியாதையாக வலம் வருவினம். ஆனா நாங்கள் போனா அப்பிடி இருக்காது!

எல்லோரும் கேள்விக்குறியோட பாப்பினம் சமுதாயம் இன்னும் நிறைய மாறோணும். அது ந்த்தை வேகத்திலதான் நடக்குது.'

'ம்...இப்படியான பிரச்சனையால நான் சிலகாலம் உதில பெரிசா இன்ரஸ்ற் எடுக்கேல்ல,' என்றாள் சுமிதா.

'எனக்கும் முதல்ல அப்பாவும் அண்ணனும் பெரிய பிரச்சனையாக இருந்திச்சினம். பிறகு தாங்கள் மானஸ்தர் எண்டும், இதையெல்லாம் பார்த்துக்கொண்டு இடுக்கமாட்டம் எண்டும் ஒளிச்சு லண்டனுக்கு ஓடிப்போட்டினம். அங்கே இப்படி ஒரு மகள் இருக்கிறாள் எண்டு மூச்சும் விடுகிறேல்லை எண்டு கேள்விப்பட்டன். சிலவேளையில் வெறுப்பில தற்கொலை செய்யோணும் போல இருக்கும். பிறகும் யாரை நம்பி யார் பிறந்தார் எண்டு நினைச்சுக் கொண்டு நான் என்ர வாழ்வை வாழோணும் எண்டு முடிவு பண்ணீட்டன். உங்களுக்கு எப்பிடி?'

'தமிழராய் இருந்து கொண்டு இந்தவிதமாக நினைச்சாலே பிரச்சனைதானே? எனக்கு அப்பாதான் பெரிய பிரச்சனை எண்டு சொன்னன். ஆனால் அம்மா நல்ல அண்டஸ்ராண்டிங்கா இருப்பா. அவ ஒரு நாளுமே மனசு நோக நடக்க மாட்டா. எங்கட வீட்டில நான் மாத்திரம் லெஸ்பியன் எண்ட பிரச்சனை இல்லை?'

'அப்ப?'

'அதைப் பற்றி இன்னொரு நாளைக்கு சொல்லுறன் லதா.'

லதா சுமியை தன்னோடு அணைத்தாள். 'நான் வேற யாருக்கும் சொல்ல மாட்டன். குடிச்சாக்கூட நான் அதில ஸ்ரெடியா இருப்பன். ஆனால் வேண்டாம் எண்டா விடுங்க...'

'அப்பிடி இல்லை லதா. தம்பி தான் gutt (ஆண்) இல்லை எண்டு சின்னனில இருந்தே பீல்பண்ணத் தொடங்கீட்டான். தான் பெண்ணா மாறோணும் எண்டு பிடிவாதமாய் இருந்தான். அப்பா வுக்கு அது அறவே பிடிக்கேல்ல. அவன் ஆணாவே இருக்கோணும். நான் கேத்தரோ (மறுபாலை விரும்புபவர்) பெண்ணாகவே இருக்க வேண்டும் என்று பிடிவாதமாய் இருந்தார். அதால எங்களுக்குள்ள அடிக்கடி சண்டை வரும். கடைசியில அப்பா எங்கள விட்டிட்டே

போயிட்டார். அவர்தான் போயிட்டார் எண்டா, சுவேகா எண்டுற பிறண்டும் என்ன விட்டிட்டுப் போயிட்டாள்.'

'அப்ப நானும் நீங்களும் பிறண்டா இருப்பமா?'

'எந்தவிதமான பிறண்சிப்பை நீங்கள் கேட்கிறியள்?'

'எல்லாத்தையும்தான்.'

'உமக்கு என்ன பிடிச்சிருக்கா?'

'நீங்களும் நானும் சேர்ந்தால் நான் மிகவும் அதிர்ஷ்டசாலியா இருப்பன்.'

'அப்பிடியா?'

'உண்மையாத்தான்.'

'நாங்கள் இப்ப போதையில இருக்கிறம்.'

'நான் அப்படி நினைக்கேல்ல.'

'ம்...'

லதாவுக்கு தான் தொந்தரவு செய்கிறேனோ என்ற எண்ணம் வர, 'தம்பி எப்படி இருக்கிறார்?' என கதையை மாற்றினாள்.

'ம்... நல்லா இருக்கிறார். அவர் தாய்லாந்துக்குப் போய் ஒப்றேசன் பண்ணப் போகிறார். அங்க ஒப்றேசன் செய்யிறதால ஒப்றேசன் செலவும் குறைவாக இருக்கும். அதோட எங்கள் எல் லோருக்கும் அது வித்தியாசமாயும் இருக்கும். நானும் அம்மாவும் அவனோட போறதா இருக்கிறம்.'

'அதுக்குப் பிறகு பெண்ணாகிவிடுவாரா?'

'ம்...அநேகமாக. அவர் இங்கேயே ஹோமோன் பெகாண்டிலிங் எடுத்துக் கொண்டு இருக்கிறார்.'

'இன்னும் ஒரு வைன் வேண்டியாறன்' என எழுந்த லதாவின் கையைப் பிடித்து அவளை அருகில் இருத்திய சுமிதா, 'இனி வேண்டாம். நான் வீட்ட போகப் போறன். உம்மட செல்போன் நம்பரைத் தாரும். நான் உமக்குப் போன் பண்ணுறன்.'

லதா தனது எண்ணைக் கொடுக்க சுமியும் தனது எண்ணைக் கொடுத்தாள். பின்பு எழுந்து இருவரும் வாடகைக் கார்கள் நிறுத்தும் இடத்தை நோக்கி நடந்து சென்றார்கள்.

நடந்து வரும்போது சிறிது இருண்ட இடத்தில் சுமி லதாவைத் தன்னோடு இழுத்து அணைத்தாள். லதா கண்சொருக அதை எதிர்பார்த்தவள் போல சுமியோடு அணைந்து கொண்டாள். சுமிதா தனது கட்டுப்பாட்டை இழந்தவளாக லதாவை இறுக அணைத்து முதல் முத்தம் கொடுத்தாள். பின்பு விரைவாக தன்னை விடுவித்துக் கொண்டு 'போன் பண்ணுறன்' என்ற வண்ணம் வாடகைக்கார்கள் நிற்கும் தரிப்பிடத்தை நோக்கிச் சென்றாள்.

அடுத்த நாள் சுமிதா போன் செய்வதற்கு முன்பாக லதா போன் செய்தாள். செல்லை எடுக்கவும், 'நான் லதா. ஞாபகம் இருக்கோ?' என்றாள்.

'இருக்காமல்! அவ்வளவு கெதியா மறந்திடுவனா?'

'இப்ப நான் நிதானமாக இருக்கிறன்.'

'ஆங்... அப்படியா?'

'ம்...இப்ப சந்திக்கலாமா?'

'அவ்வளவு அவசரமோ?'

'அப்பிடி இல்லை. இன்றிருப்பார் நாளை இல்லை. இந்தக் கணங்கள் மாத்திரமே உலகத்தில் நிதர்சனம். செத்துப்போன கணங்களை உயிர்ப்பிக்க முடியாது. நாளை வரும் நாழிகை பற்றி நமக்குத் தெரியாது. இந்தக் கணங்கள் மாத்திரம் நிசமானவை என்பதே உண்மை.'

'என்ன இப்ப தத்துவம் கதைக்கிறீர்? எங்க இதைச் சுட்ட நீர்?'

'ஏதோ ஒரு தமிழ்ப் புத்தகத்தில் இருந்து கஷ்டப்பட்டுப் படிச்சது. அதைவிடுங்க. பின்னேரம் வீட்ட வாறியளா?'

11

'ம்...?'

'பிளீஸ்.'

'சரி அட்றஸ்ச சொல்லும்.'

லதா அட்றஸ் சொல்ல சுமி குறித்துக் கொண்டாள். பின்பு லதாவோடு கதைக்கும் போது அவளது குழைவு சுமிதாவுக்கு ஒரு புதிய கனவுலகத்தைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தியது.

அன்று மாலை ஆறுமணி போல சுமி தன்னை நன்றாக அழகுபடுத்திக் கொண்டாள். ஏற்கனவே பூலுக்குச் சென்று வாங்கி வைத்திருந்த வைன் போத்தலையும் எடுத்துக்கொண்டு லதா வீட்டிற்குச் சென்றாள்.

அங்கு வந்த ஒருவரின் உதவியோடு மேலே வந்து விட்டாள். பின்பு லதா வீட்டின் அழைப்பு மணியை அழுத்துவதா விடுவதா என்கின்ற திடீர் ஆராய்ச்சியில் சுமிதா அல்லாட, கதவு தானாகவே திறந்து கொண்டது. லதா மோகத்தோடு சிரித்தவண்ணம் நின்றாள். அவள் தன்னை மிகவும் கவரும் வகையில் அழகுபடுத்தி இருந்தாள். சாப்பாட்டு வாசத்தையும் தாண்டி அவளின் சென்ற் வாசனை சுமியை வெறிகொள்ள வைத்தது. அவள் அதையெல்லாம் மனதில் புதைத்தவண்ணம் 'எப்பிடி' என்றாள்.

'மந்திரத்தால் கண்டுபிடிச்சன். நீங்கள் வாறதை நான் ஜன்னல்ல நிண்டு பார்த்துக்கொண்டு நிண்டன்,' என்றாள், எதையும் மறைக்கத் தெரியாதவளாய். அது சுமிதாவுக்குப் பிடித்து இருந்தது.

சுமிதா வைனை நீட்ட, 'ஓ தாங்க்ஸ்' என்றவண்ணம் சுமியை அணைத்துக் கன்னத்தோடு கன்னம் வைத்து ஐரோப்பிய முறையில் வணக்கம் சொல்லிக் கொண்டாள். பின்பு சுமிதாவின் கண்களை ஒரு ஏக்கத்தோடு பார்த்தாள்.

'என்ன அப்பிடிப் பார்க்கிறீர்?' என்றாள் சுமி.

'ஏதோ பார்க்கோணும் போல இருந்தது. பார்த்தது பிழையெண்டா சொறி,' என்றாள் லதா.

'பிழையெண்டு நான் சொல்லேல்ல. என்ன பார்க்கிறீர்' எண்டுதான் கேட்டன்.'

'நான் ஒண்டு சொல்லட்டுமா?' என்றாள் லதா.

'சொல்லும்.'

'நீங்கள் பார்ட்டிக்கு வந்து என்ர நிம்மதியையும் இதயத்தையும் திருடிக் கொண்டு போயிட்டியள். அதுக்கு எப்பிடிச் செயல் வடிவம் கொடுக்கிறது எண்டு எனக்குத் தெரியேல்ல. உங்களப் பார்க்கோணும் எண்டு பைத்தியமாக இருந்திச்சுது. அதுதான் போன் பண்ணினன். பிழையா?'

'இல்ல... ஆனா யாரும் கேள்விப்பட்டா பைத்தியம் எண்டுவினம்.'

'காதல் பைத்தியம் எண்டுதானே சொல்லுறவை?' என்றாள் லதா.

'உமக்கு காதலா'

'ம்... ம்...'

'என்மேலயா?'

'பிறகு?'

'ஏன்?'

'தெரியேல்ல. தெரியாமல் வாறதுதானே காதல்.'

'பெண்மேல பெண்ணுக்கே காதல் எண்டு சொன்னா யாரும் நம்புவினமா?'

'வருகுதே. நானோ நீங்களோ கட்டுப்படுத்த முடியாமல், படைப்பின் விசித்திரமாய் வருகிறதே. அதை நீங்களும் நானும் நம்புகிறோம் இல்லையா?' என்றாள் லதா.

'ம்...நீ நம்புகிறாயா?'

'இதயம் உன்னிடம் இருக்கிறதா எனக் கேட்பது போல இருக்கிறது. அது இல்லாமல் நான் எப்படி வாழ முடியும்? என்ன புரிகிறதா சுமி,' என்றாள்.

'புரியாவிட்டால் இங்கு வந்து இருப்பேனா?'

'நாங்கள் எப்போதுமே பிரியாது இருப்போமா?'

லதா உணர்ச்சிவசப்பட, அவள் குரல் தழுதழுத்தது. சுமி அவளைத் தன்னோடு அணைத்து 'பூனைக்குட்டி நான் ஒன்று சொல் லுகிறேன் கேள். நான் யாரையும் விட்டு விலகி ஓடுபவள் அல்ல. என்னைத்தான் சிலர் விட்டு விலகி ஓடுகிறார்கள்' என்றாள்.

'என்ன இது நாடகத் தமிழ். சரி நான் உம்மை விட்டிட்டுப் போகமாட்டன். தாராளமாக நம்பலாம்,' என்றாள் லதா.

லதா சுமியின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, அவள் கண்களைப் பார்த்தாள். அவளின் ஏக்கம் சுமியின் இதயத்தைத் துளைத்துச் சென்றதில் அவள் நிலை தடுமாறினாள்.

அந்த ஏக்கத்திற்கு விடை கொடுப்பதாய் சுமி அவளின் கரத்தை இறுக்கிப் பிடித்தாள். லதாவின் வாசம், மூச்சின் இளம் வெப்பக் காற்று, மெல்லிய சருமம்... சுமிதா தன்னை மறந்தவளாய் வானில் பறந்தாள். அத்தோடு அவர்களுக்குள் மலர்ந்த உறவு வெகு ஆழமாக வேர் ஊன்றிச் செழித்தது.

சுகுமார் பத்து நாள்களாக கிளாத் செல் எனப்படும், யன்னல்கள் அற்ற ஒரு கழிப்பிடத்தை மட்டும் கொண்ட வழுவழுப்பான அறையில் எவரது உலகத் தொடர்பும் இல்லாது அடைத்து வைக்கப்பட்டிருந்தான். நோர்வே போலிஸ் பயன்படுத்தும் இம்முறை கிளாத் செல் என இங்கு அழைக்கப்படும். இதுதான் மிகவும் மோசமான காலமாய் போலிஸில் மாட்டுபவர்களுக்கு இருக்கும். இதற்குள் போய் வந்தவர்கள் தமது அநுபவத்தின் அதிர்ச்சியை மறவாது இருப்பார்கள். கைது செய்தவுடன் தனிமையில் அடைத்து வைத்து மனரீதியாக நம்பிக்கை இழந்து அடிபணிய வைக்கும் ஒருவித யுக்தி இது. சுகுமார் பத்து நாள்கள் அந்தக் கிளாத் செல்லில் புழுவாக நெளிந்தான். ஒரு சிறு உதவிக்கு,

செய்யாத குற்றத்தின் பெயரில் தனக்குக் கிடைத்த தண்டனையை எண்ணி அவன் புழுவாய்த் துடித்தான். இதில் இருந்து எப்போது விடுதலை வரும் என்கின்ற ஏக்கத்தில், கணங்களைப் பேய்கள் தின்றுவிடாதா என்கின்ற ஆதங்கத்தில் துடித்தான்.

பத்தாவது நாள் காலை பத்துமணி இருக்கும். ஒரு ஆண் போலிஸும் ஒரு பெண் போலிஸும் வந்து கிளாத் செல்லின் கதவைத் திறந்தார்கள். சுகுமாருக்கு ஏதோ ஒரு மாற்றம் வந்ததில் ஒருவித நிம்மதி வந்திருந்தது.

'நீங்கள் தயாரா? உங்களை அழைத்து வருமாறு கூறி இருக்கிறார்கள். உங்களுக்கு இன்று விசாரணை இருக்கிறது' என்றான் அந்த ஆண் போலிஸ் அதிகாரி.

சுகுமார் எழுந்து அவர்கள் சொல்வதைக் கேட்டுவிட்டு. 'ஓ நான் தயார். நான் தயார்,' என்றான். அவனுக்கு ஒரு சிறிய கணம் என்றாலும் இந்த அறையில் இருந்து வெளியே சென்றால் போதும் என்று இருந்தது.

அவர்கள் சுகுமாரை அழைத்துச் சென்று ஒரு அறையில் விட்டார்கள். அதில் ஒரு மேசையும் மூன்று கதிரைகளும் இருந்தன. அந்த அறையில் இருந்து வெளியே எதையும் பார்க்க முடியவில்லை. வெளியே நின்று அவர்கள் கவனிப்பார்கள் எனச் சுகுமார் எண்ணிக் கொண்டான்.

சிறிது நேரத்தில் ஒரு நடுத்தரமான உடல்வாகு கொண்ட பெண்ணும் மிகவும் பருமனான ஆணும் உள்ளே வந்தார்கள். அந்த ஆண் ஆறடி இருப்பான். கிட்டத்தட்ட அவன் 100 கிலோ எடைகொண்ட எருமைக்கடாவாக உள்ளே வருவதாக சுகுமார் எண்ணிக் கொண்டான். இதுவரையும் இருந்த தனது மனத்துணிவு மெதுவாகப் பின்வாங்குவதாக சுகுமார் உணர்ந்து கொண்டான். அவர்கள் சாதாரண உடையிலேயே இருந்தார்கள். வந்த பெண் அதிகாரி சிநேகபூர்வமாகச் சிரித்தாள். அந்தத் தடியன் சாதுவாகத் தலையை ஆட்டினானே தவிர அவனது முகத்தில் எந்தச் சிரிப்பையும் காணமுடியாததில் சுகுமார் சற்று ஏமாந்து போய் இருந்தான்.

அந்தப் பெண் அதிகாரி முந்திக் கொண்டு கைகொடுத்தாள். தனது பெயர் ஆஸ்திரி என்றாள். இவனும் கையைப்பற்றி சுகுமார் என்று தன்னை அறிமுகம் செய்வதாக எண்ணினான். அவளோ இவன் சரித்திரத்தையே படித்து வைத்திருந்தாள். அவளோடு வந்த தடியன் ஆறுதலாகக் கை கொடுத்தான். அவன் பிடித்த பிடியில் சுகு மார் எலும்பு முறிந்ததான வலியை உணர்ந்தான். 'ஏறிக் ஸ்தைனார்' என்றான் அந்தத் தடியன். இவனும் வராத இளிப்பை வரவழைத்து 'சுகுமார்' என்றான்.

'காப்பி வேணுமா?' என அந்தப் பெண் போலிஸ் கேட்டாள். சுகுமாருக்கு இருந்த நிலையில் எதைக் கொடுத்தாலும் சம்மதம் என்பதாய் இருந்தான். அவன் 'யா...யா...' எனப் பரபரப்பாகக் கூறினான். அவள் சிரித்தவண்ணம் சென்று ஒரு கப்பில் காப்பி கொண்டு வந்தாள். அது பேப்பர் கப்பாக இருந்தது.

'நீ தயாரா' என அந்தப் பெண் போலிஸ் கேட்டாள்.

'ஓ கே. ஓ கே. நான் தயார்' என்றான் சுகுமார்.

'Er du narvos (நீ ரென்சனாய் இருக்கிறாயா?)' என அந்தப் பெண் போலிஸ் கேட்டாள்.

'கொஞ்சம்' என்றான் சுகுமார்.

'ஒத்துழைச்சு இந்தக் கேசை நீங்கள் தீர்த்து வைப்பதற்கு உதவினால் தண்டனைக் காலத்தில் கழிவு உண்டு. அது உங்களுக்குத் தெரியும் எண்டு நினைக்கிறன். நீங்கள் இதற்கு ஒத்துழைப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறோம்,' என்றாள்.

'எனக்கு அற்வகேற் இல்லையா?' எனச் சுகுமார் கேட்டான். பின்பு தான் அப்படிக் கேடடது தப்பா என யோசித்தான்.

'இருக்குது. அதுக்கு முதல்ல நீங்கள் போலிஸோட ஒத்து ழைக்கிறியளா இல்லையா என்பது முக்கியம். அது உங்கட தண்டனைக் காலத்தை முடிவு செய்யிறதில முக்கியமான பங்கு வகிக்கும்.'

'நான் தப்பே செய்யேல்லையே. பிறகு எதுக்கு எனக்கு தண்டனையில கழிவு?'

அந்தப் பெண் பொலிஸ் மிகவும் அருகாக வந்து அவன் முன்னே நின்று, சுகுமாரின் கண்களைப் பார்த்தவண்ணம், 'உங்கட வீட்டில இருந்து எடுத்த கத்தியில லதாவின்ர DNA எப்பிடி வந்தது எண்டு உங்களால விளங்கப்படுத்த முடியுமா? கொலைக்குத் தொடர்பே இல்லாத உங்கட வீட்டுக்கு கொலை செய்த ஆயுதம் எப்பிடி வந்தது எண்டு சொல்ல முடியுமா? தயவு செய்து எங்களோட ஒத்துழைக்கிறது உங்கட தண்டனைக் காலத்தைக் குறைக்கும் எண்டுறதை மனதில வைச்சுக் கொள்ளுங்கோ. உண்மையச் சொல் லாட்டா நீங்கள்தான் நஷ்டப்படப்போறியள். உங்களுக்குத்தான் அது பாதகமாக அமையும். உங்கட வீட்டில இருந்து எடுத்த கத்தியும் அதில இருந்து எடுத்த DNA அனலைசும் மட்டும் நீங்கள் தான் குற்றவாளி எண்டு நிரூபிக்கிறதுக்கு காணும். அதில் உங்கட கைரேகை வேறு இருந்திச்சுது.' சொல்லிவிட்டு அந்தப் போலிஸ் அதிகாரி ஒருவிதமாகச் சிரித்தாள்.

'நோ...நோ... அது பொய். நான் அந்தக் கத்தியவே தொடேல்ல.' சுகுமார் கத்தினான். அவனுக்கு வியர்த்தது. அவளின் திட்டம் புரிந்தது போல இருந்தது.

'சரி அதை விடுவம். உங்களுக்கு சம்பந்தப்படாத ஒரு பெண்ணை அதுவும் ஓரினச்சேர்க்கையில் விருப்பமான பெண்ணைக் கொல்லறதுக்கு புதுக்குடும்பமா சந்தோசமா இருக்கிற உங்களுக்கு ஒரு அவசியம் வந்து இருக்கும் எண்டு எங்களுக்குத் தோன்றேல்ல. அதாலதான், ஒரு குற்றவாளி நிரபராதி ஆகக்கூடாது, அதேவேளை ஒரு நிரபராதி குற்றவாளி ஆகக்கூடாது எண்ட அக்கறையோட உங்களிட்ட வந்து உண்மையைக் கேட்கிறம். தயவு செய்து நடந்தது என்ன என்பதை எங்களுக்குச் சொல்லுங்கோ. நீங்கள்தான் கொலை செய்ததாக உங்கட பிறண்ட் கரன் சொல் லுறார்.'

சுகுமாருக்கு மீண்டும் அதிகமாக வியர்த்தது, பூவாக வந்து புயலாக மாறிவிட்ட பெண் போலிசை எண்ணும்போது மலைப்பாக இருந்தது. என்ன சொல்லுவது என்பது ஒருகணம் புரியாமல் கொடுமையான தவிப்பாக இருந்தது. நட்பா குடும்பமா என்கின்ற கேள்வி வந்தபோது நட்பை பலியாக்குவதைவிட அவனுக்கு வேறு

வழி இருப்பதாகத் தெரியவில்லை. கரனே நட்பை பலியாக்கியது மட்டுமில்லாது தன்னை மாட்டிவிட எண்ணியபின்பு தான் எதற்கு அவனைக் காப்பாற்ற வேண்டும் என்பதாக இருந்தது. சிலவேளை கரன் கூறுவதாக இவள் பொய் சொல்லலாம். எப்படி என்றாலும் தலைக்கு மேல் வெள்ளம் வந்தபின் அது சாணாய் இருந்தால் என்ன முழமாய் இருந்தால் என்ன என்று முடிவு எடுத்துக் கொண்டான்.

'Nei. Nei. det er ikke sant (இல்லை இல்லை. அது உண்மை இல்லை)' சுகுமாரின் குரல் மீண்டும் அவசரமாக அதிர்ந்தது. 'நான் உண்மையைச் சொல்லுறன் கேளுங்கோ.'

'சொல்லு.'

'ம். அண்டைக்கு (28-08-2009) பின்னேரம் கரன் ஒரு பாக்கோட வீட்ட வந்திருந்தான். அவன் மிகவும் களைப்பாக இருந்தான். தேவகி சமையலில் மும்முரமாக இருந்தாள். உள்ளே வந்த கரன் ஜக்கற்றுக்குள் சுற்றி வைத்திருந்த ஷொப்பிங் பாக் கொன்றை எடுத்தான். அதற்குள் ஏதோ ஒரு கூர்மையான பொருள் இருந்ததை நான் கவனித்தேன். அவன் பாக்கை என்னிடம் தந்து 'எக்காரணம் கொண்டும் இந்த பாக்கை யாரிட்டையும் கொடுக்கக் கூடாது. அதேவேளை யாரும் கண்டுபிடிக்க முடியாத இடத்தில இதை வைக்கோணும்' எண்டான். இதைக் கூறும்போது அவன் குரலை மிகவும் தணித்தே கூறினான். தேவகிக்குக்கூட அது கேட்டு விடக்கூடாது என்கின்ற அக்கறை அவனிடம் இருந்தது. நான் ஆச்சரியமும் அதிர்ச்சியும் தாங்க முடியாது தவித்தேன். பின்பு அவனிடம், 'இதுக்குள் என்ன இருக்குது?' என்றேன். அதுக்கு அவன் 'ஒரு கத்தி இருக்குது. இது போலிஸில மாட்டாத வரைக்கும் அவர்களுக்கு கொலைக்குப் பயன்படுத்திய ஆயுதம் கிடைக்காது. என்னுடைய ரூமில இதை வைச்சிருக்கேலாது. இதுக்குப் பாதுகாப்பான இடம் உன்ர வீடுதான். எனக்கு உன்னவிட வேறு யாரும் பிறண்டில்ல. அதே நேரம் நீ இப்ப என்னோட இருக்கிறேல்ல. அதால இது நல்ல பாதுகாப்பாய் இருக்கும். தயவு செய்து இந்தக் கத்திய எங்கையாவது ஒளிச்சுவை. பிறகு நான் கேட்கேக்க மட்டும் தா' என்றான். எனக்கு உடல் நடுக்கம் கண்டு இருந்தது. நான் கத்தி பாக்கை மீண்டும் அவன் கையில் திணித்தேன்.

அவன் மீண்டும் கத்தியை எனது தொடைக்கும் சோபாவிற்கும் இடையில் இருந்த இடைவெளியில் வைத்துவிட்டு எனது காலைப் பிடித்தான். 'எனது நண்பனாய் இருக்கும் நீயே என்னைக் காட்டிக் கொடுக்காதே' என்றான். 'சரி காலைவிடு மேலே எழும்பு' என்றேன். பின்பு அவன் பேசாது இருந்தான். எனக்கும் அவனை என்ன கேட்பது என்பது புரியவில்லை. சிறிது நேரம் அப்படியே இருந்தபின்பு, 'யாரைக் கொலை செய்தாய்?' என்றேன்.

'சுமியைக் கொண்டு இருக்கோணும். இல்லாட்டி நீனா எண்டு தன்ர பெயரைக் கோணங்கியாக்கி வைச்சிருக்கிறவளைக் கொண்டு இருக்கோணும். அதுக்கு முதல் வாணிங்கா லதாவை, அந்த எடுபட்டவளைக் கொண்டிட்டன்' என்றான்.'

சுகுமார் சற்று நேரம் நிறுத்தி, மூச்சு விட்டான். பின்னர் தொடர்ந்து 'அடப்பாவி...நீ எந்த நாட்டில் இருக்கிறா எண்டு தெரியுதா? இவங்கள் அடிச்சு சித்திரவதை செய்யாமல் மனரீதியா அழுந்த வைச்சு உண்மையைக் கறப்பாங்கள் எண்டு தெரியாதே?' என்றேன். 'எனக்கு அதைப்பற்றி இப்ப தெரியாது. என்ர தலைக்குள்ளே யாரோ இருந்து கொலை செய்யச் சொல்லி துரத்திக் கொண்டு இருந்தாங்கள். அதற்காக நான் ஒரு கொலை செய்தேன். என்ர மானத்தையும் கௌரவத்தையும் கொலை செய்தவர்களை கொலை செய்வது தப்பில்லை' என்றான். 'கரன் நீ போலிஸில சரண் அடைஞ்சிடு,' என்று நான் கூற, 'ஒரு நாளைக்குப் போய் சரணடைவன். அதுக்கு முதல் எனக்கு நிறைய வேலை இருக்குது. அதுவரைக்கும் பொறு. அவசரப்படாத' என்றவன் மேற்கொண்டு பேசாது எழுந்து கொண்டான். பின்பு வாசலில் போய் நின்றவன் என்னைத் தன்னிடம் வருமாறு அழைத்து, 'எனக்கு நிறைய வேலை இருக்குது. காட்டிக் குடுத்தியெண்டா ஒரு கொலைக்கும் பத்துக் கொலைக்கும் ஒரே தண்டனைதான் எண்டதை நீ உயிரோட இருந்து. பார்க்கமாட்டா' என்று கூறிவிட்டு வேகமாகச் சென்றுவிட்டான். எனக்கு என்ன செய்வது எனப் புரியவில்லை. தற்போதைக்கு அதை மறைத்து வைத்தேன். அதுவும் அவனின் பயமுறுத்தலுக்காகவே நான் அதைச் செய்தேன்,' என்று கூறி மௌனித்தான்.

'அப்ப நீ இந்தக் கொலையில நேரடியாகச் சம்பந்தப்படேல்லயா? பிறகு லேற்றா தெரியவந்தா தண்டனைச் சலுகையெல்லாம் கிடைக்காது.' மிகவும் சீரியஸாக சுகுமாரைச் பார்த்துக் கேட்டான் ஏறிக்.

'சத்தியமா நான் சொல்லுறன். எனக்கு இந்தக் கொலையைப் பற்றி அவன் கத்தியோட வரும்வரைக்கும் எதுவுமே தெரியாது. போலிஸுக்கு தகவல் தராமல் மறைச்சதுக்கும் அவன் பயமுறுத்தியதுதான் முக்கிய காரணமாய் இருந்தது. நீங்க வேணும் எண்டா தேவிகாவைக் கேட்டுப் பாருங்க. அவன் வந்து போனபிறகு நான் இருந்த ரென்சனைப் பார்த்திட்டு அவளே 'ஏன் நீங்கள் கரன் வந்து போனபிறகு வழக்கத்துக்கு மாறாக இவ்வளவு ரென்சனா இருக்கிறியள்' எண்டு கேட்டாள்.'

'வழக்கமாக எப்படி இருப்பாய்?'

'நான் ஒருநாளும் அவன் வந்து போனபிறகு ரென்சனா இருந்ததில்லை. அவன் ஒருநாளும் என்னை அண்டைக்கு வெருட்டினது மாதிரி வெருட்டினதும் இல்லை. வழமையாக அவன் தண்ணி அடிக்கத்தான் என்ர வீட்ட வருவான்.'

'அப்ப எதுக்கு கத்திய ரொயிலற்றைக் கழட்டி ஔிச்சு வைச்சீங்க?'

சிறிது நேரம் அமைதியாக இருந்த சுகுமார், 'தேவிகா இதை அறியக்கூடாது எண்ட ஒரே நினைப்பே எனக்கு இருந்திச்சுது. அவள்தான் 'இவருக்காக அவையின்ர குடும்பத்தையே அவமானப் படுத்துறமாதிரி நீங்க நடக்கக்கூடாது' எண்டு ஏற்கனவே சொல்லி இருந்தாள். அதுவும் சுமியையும் அம்மாவையும் தாய்லாந்திலை வைச்சுப் பேசினதுக்கு சுமி கோயில்ல வைச்சு என்னோட சண்டை பிடிச்சதையும் பார்த்த பிறகு கரனைவிட, அவையிலதான் அவளுக்கு மிகவும் இரக்கமாக இருந்தது. அவள் பலவேளைகளில் 'கரன் ஒரு அப்பாவோ, அல்லது ஒரு நல்ல மனிசனோ இல்லை. ஒருநாளைக்கு நீங்கள் அவரோட நட்பு வைச்சிருந்ததுக்காய் கவலைப்படுவியள்' எண்டு சொல்லி இருக்கிறாள். அவள் இதைப்பார்த்தா 'உங்கட நட்பைப் பார்த்தியளா?' எண்டு மூஞ்சையில காறித் துப்புவாளோ

எண்டு பயமா இருந்திச்சுது. கரன் வெருட்டினதும் பசுமையா மனசில கிடந்திச்சு. அதுக்குப் பாதுகாப்பாக இருக்கக்கூடியதாக ரொயிலற் டாங்கைத் தெரிவு செய்தன். நான் அதை மறைச்சு வைக்கிறது தப்பு எண்டு தெரியும். ஆனா என்ர உயிருக்கு அச் சுறுத்தல் வந்ததால மட்டுமே ஒரு தற்காலிகமாக அதைச் செய்தன்.'

'தாய்லாந்தில என்ன நடந்தது? அம்மறூட்டில் என்ன நடந்தது?' ஏறிக் கேட்டதுக்கு சுகுமார் விளக்கமாகப் பதிலளித்தான். அதைக் கேட்டுக்கொண்டு இருந்த ஏறிக் 'ஓ நீ கொலை செய்யிறத்துக்கும் காரணம் இல்லாமல் இல்லை,' என்றான்.

'நோ. நோ. அந்த சின்ன விசயத்துக்கெல்லாம் கொலை செய்யிற துணிவு எனக்கு இல்லை. என்னை நம்புங்க,' என அழுதான்.

'ம்...' என்றான் ஏறிக்.

பின்பு ஆஸ்திரிக்கு கண்ணைக் காட்டிவிட்டு எழுந்து சென்றான். ஆஸ்திரியும் அவன் பின்னால் சென்று விட்டாள். மீண்டும் தனியறையில், எந்தவித ஒளியும் உள்ளே புகாத ஒரு அறையில் நிர்வாணமான சுவரை வெறித்தவண்ணம், தீர்ந்து போன காப்பி கப்பைக் கையில் வைத்துக் கொண்டு கணங்கள் யுகங்களாக சுகு மார் காத்திருந்தான். அரைமணித்தியாலத்தில் வந்த காவலர்கள் சுகுமாரை அழைத்துச் சென்று மீண்டும் கிளாத் செல்லில் விட்டார்கள். அவனுக்கு ஓவென்று அழவேண்டும் போல இருந்தது. அதை விட்டுவிட்டு கைகளால் சுவரில் அடித்து அடித்து அரற்றினான்.

**சொ**ற்கள் தொலைந்து போக அமைதி சொந்தம் கொண்டாடிய கனதி கடுமையாக அழுத்துவதாக நீனா உணர்ந்தாள். அவள் அம்மாவைப் பார்த்தாள். அம்மா மிகவும் தவிப்புடன், இருக்க முடியாதவளாய் அங்கும் இங்கும் உலாத்திக்கொண்டு இருந்தா. அவள் மிகவும் அந்தரப்படுவதை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. அதைவிட அதிகமான அவதியில் சுமி அங்கும் இங்கும்

அலைந்தாள். நீனா சோபா மேசையில் ஆறு காப்பி கப்புகள் கொண்டு வந்து வைத்தாள். பில்ரர் காபி போடுவற்கான ஆயத்தங் களைச் செய்து வைத்தாள்.

குரன்லாண்ட் போலிஸ் தாங்கள் நான்கு மணிபோல் வீட்டுக்கு வருவதாக அறிவித்து இருந்தார்கள். ஏன் எதற்கு என்கின்ற விவரம் தெரியவில்லை. தொலைபேசியை எடுத்த அம்மா பதற்றத்தில் எதுவும் கேட்கவில்லை. 'போலிஸ் வரும், போலிஸ் வரும், நீ வீட்ட வா' என்று நீனாவுக்கு போன் செய்து இருந்தாள்.

லதாவின் கொலை விடயமாகத்தான் போலிசார் வருகிறார்கள் என்பது நீனாவுக்குப் புரிந்தாலும், மேலும் விசாரணைக்காக வருகிறார்களா, அல்லது விளக்கம் தர வருகிறார்களா என்பது புரியவில்லை. சுமிக்கு யார் இந்த அநியாயத்தைச் செய்தார்கள் என்பதை அறியவேண்டும் என்கின்ற தீராத வெறி தீர்ந்தபாடாக இல்லை. இன்றாவது அதை அவர்கள் கூறி, அவளின் மனதிற்கு அமைதியைத் தருவார்களா என்பதும் அவளுக்குப் புரியவில்லை.

போலிஸார் எந்த ஆர்ப்பாட்டமும் இல்லாமல் காரை ஓர் இடத்தில் நிறுத்தி வைத்துவிட்டு வீட்டிற்குள்ளே வந்தார்கள். இன்று அவர்கள் யூனிபோர்மில் வந்து இருந்தார்கள். வந்தவர்கள் தங்களை ஏறிக் எனவும் ஆஸ்திரியெனவும் அறிமுகம் செய்து கொண்டார்கள்.

'நாங்கள் கொஞ்சம் கதைக்க வேணும். எல்லோரும் உட்காரலாமா?' என்றாள் ஆஸ்திரி.

'இருங்க இருங்க' என்றாள் நீனா.

சுமியும் அம்மாவும் சோபாவில் இருந்து கொண்டார்கள். நீனா முதலில் காப்பியைக் கொண்டு வந்து 'கபே' என்றாள். 'தக்' என்று கூற ஆஸ்திரி, ஏறிக் ஆகியோருக்கு கப்பில் ஊற்றிக் கொடுத்தாள். பின்பு தனக்கும் சுமிக்கும் ஊற்றி வைத்துவிட்டு அம்மாவுக்கு தேநீர் தயாரித்துக் கொண்டு வந்தாள். பின்பு அவளும் சென்று அம்மாவின் அருகில் அமர்ந்து கொண்டாள்.

அதுவரையும் ஆஸ்திரி வீட்டில் இருந்த படங்களைப் பார்த் தாள். யாரிடமும் அவை எங்கு எடுத்தது என்பதைப் பற்றிக் கேட்டுக்

கொள்ளவில்லை. இவர்களைவிட அவள் மிகவும் அவதிப்படுவதாய் நீனா நினைத்துக் கொண்டாள். நீனாவும் வந்து இருக்க ஆஸ்திரி தனது ஆராய்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

பின்பு, 'நீங்கள் கொஞ்சம் மனசைத் திடப்படுத்திக் கொள்ளோணும்,' என்றாள்.

மூவரும் என்ன இது என்பது போல ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

'லதா கொலையில நடந்த உண்மைய இண்டைக்கு உங்களுக்குச் சொல்லப் போறம். சுமிதா நீங்கள் இந்த உண்மையை அறியிறதோட இந்தப் பிரச்சனையை மறந்திட்டு உங்கட வாழ்வைச் சகஜமாக்கிக் கொள்ள வேணும். இந்த கேசின்ர வழக்கும் கொஞ்சக் காலத்தில நடக்கும். அதுக்கும் நீங்கள் உங்களைத் தயாராக்கிக் கொள்ள வேணும்.

'சரி. இப்ப நாங்கள் நடந்தது என்ன எண்டுறதைச் சொல்லுறம். நிச்சயமா நீங்கள் அதைப்பற்றிக் கதைத்து உங்கட சோகத்தைப் போக்கிக் கொள்ள அது உதவும் எண்டு நினைக்கிறன்.

'லதாவை கொலை செய்த கத்திய நாங்கள் முதலில எடுத்து இருந்தோம். அது சுகுமார்ற்ற வீட்டில இருந்திச்சுது. அதில் லதாவின்ர இரத்தமும் உங்கட அப்பாவின்ர கைரேகையும் இருந்தது.'

'என்ன? நாங்கள் இதை நம்ப முடியாது. அப்பாவே எங்கட வாழ்க்கையை ஒருநாளும் அழிக்க மாட்டார். உது பொய். உது பொய். உங்களால ஒரு கேசத் தீர்க்கேலாட்டி இப்பிடியான ஒரு அபாண்டமான முடிவுக்கு வரக்கூடாது. நீங்கள் இன்னும் முயற்சி செய்யோணும்..' கோபத்தோடு முதலில் கத்திய சுமி பின்பு அம்மா வின் மடியில் முகம் புதைத்து அழுதாள். கமலினி தலையில் இடிவிழுந்த வேதனையில் தவித்தாள். நீனா அப்பாவா என்பதை நம்ப முடியாது திகைத்துப் போய் இருந்தாள். ஏறிக்கும் ஆஸ்திரியும் அமைதியாகக் காத்திருந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பின்பு...

'சரி, அப்பாவின்ர கைரேகை இருந்தா அப்பாதான் கொலை செய்தது எண்டாகுமே? நீங்கள் எங்களுக்கு கொஞ்சம் விபரமாகச் சொல்ல வேணும்' என்றாள் நீனா. சுமி தொடர்ந்தும் அழுது கொண்டு இருந்தாள்.

'எடுக்கப்பட்ட கத்தியில உங்கட அப்பாவின்ர கைரேகையும் லதாவின்ர DNA யும் அகப்பட்டது என்று கூறினோம் இல்லையா?'

'ம்...'

'உங்கட அப்பாவை குரன்லாண்டில் கைது செய்து பின்பு ஒரு மனோதத்துவ மருத்துவரின் உதவியோடு அவரை விசாரிக்க, அவர் முதலில் சுகுமார்தான் கொலை செய்திருப்பான் என்றார். திடீரென தனது தலைக்குள் ஒருத்தன் இருந்து தன்னைக் கொல்லச் சொன்னதாகச் சொன்னார். மருத்துவர் பலமுறை பரிசோதித்த பின்பு உங்கட அப்பா 'Schizophrenia' என்கின்ற நோயால் அவதிப்படுவதாய் எங்களுக்குக் கூறியதோடு, அவர் கூறுவதை முழுமையாக நம்ப முடியாது என்றும் அறிவுறுத்தினார். வேறு ஒரு வழியும் இல்லாதுதான் சுகுமார் வீட்டை றெய்ட் பண்ணினோம். அது எங்களுக்கு நல்ல பலனைத் தந்தது. அண்டைக்கே சுகுமாரையும் அரஸ்ட் பண்ண முடிந்தது.

'சுகுமாரை விசாரித்தபோது, உங்க அப்பாவே கொலை செய்ததாகவும், பின்பு கத்தியைக் கொண்டுவந்து அவனிடம் கொடுத்துவிட்டு வெளியே சொன்னால், லதா போல் அவனையும் கொலை செய்து விடுவேன் எனப் பயமுறுத்திவிட்டுச் சென்றதாகவும் கூறினான்.

'அவன் கூறியது, அவனது மனைவியை விசாரிச்சது, கொலை நடந்த நேரத்தில் அவன் வீட்டில் இருந்தது, தொலைபேசியில் வேறு ஒரு நண்பரோடு கதைத்தது ஆகியவை உறுதி செய்யப்பட்டதால் அவன் இந்த விவகாரத்தில் இருந்து தவிர்க்கப்பட்டுவிட்டான்.

'ஏற்கனவே சுரேன், சண்முகராசன் என்பவரும் அலிபி இருந்ததால் விடுவிக்கப்பட்டார். இறுதியாக உங்க அப்பாவை மூன்று மருத்துவர்களின் உதவியோடு பலவிதங்களில் விசாரித்த பின்பு,

இந்தக் கொலைக்கு அவரே பொறுப்பு என்பதை அவர்கள் உறுதி செய்து இருக்கிறார்கள். அதற்கான தொழில்நுட்ப ஆதாரங்கள் எங்களிடம் உள்ளன.'

'ஓ காட். அப்பாவா... லதாவை அப்பா...லதாவை அப்பாவா...' சுமி தலையில் அடித்து அழுதாள்.

நீனாவும் அம்மாவும் அவளை இறுக அணைத்து ஆறுதல் படுத்த முயன்றார்கள்.

'உங்களுக்கு மேலதிகமாக ஏதாவது விபரம் வேணும் எண்டா எனக்கு எப்பவும் போன் செய்யலாம். நாங்கள் புறப்படுகிறம்,' என்று கூறியவள் ஒரு அட்டையை நீனாவிடம் கொடுத்து விட்டுச் சென்றாள். சுமிதா அழுதுகொண்டு இருந்தாள். அம்மா, 'அவள் அழட்டும்' என்றாள். நீனாவுக்கு அது சரியெனப்பட்டது.

நீனா எழுந்து நின்றாள்.